* நுழை வாயில்

# குழந்தைகளைக் குதூகலப்படுத்தும் ரூங்கா!

ஆழம் குறைவாய் வடிவமைக்கப்பட்ட நீச்சல் குளம். அதன் கரையில் சறுக்கு மரம். சர்ரென்று சறுக்கிக் கொண்டு வந்து 'தொபுகடீர்' என்று விழுந்து குதூகலமாய் விளையாடுகிறார்கள் குழந்தைகள். இவர்களுக்கு உதவ குளத்தினுள்ளே நான்கைந்து ஊழியர்கள். பெற்றோர்கள் எட்ட இருந்து வேடிக்கை பார்க்கலாம்.

ஒரு பகுதியில் திறந்த வெளி அரங்கம். மேற்கத்திய இசை ஒலிக்க, மிக்கி மவுஸ் டொனால்ட் டக் போன்றெல்லாம் வேடம் தரித்தவர்கள் நடனமாடுகிறார்கள். அவர்களுடன் வாண்டு மைக்கேல் ஜாக்ஸன்களும், குட்டி மடோனாக்களும் சேர்ந்து ஆடுவதைப் பார்த்து விட்டு, பெரியவர்களும் உற்சாகம் அடைந்து நடனமாடுவது சகஜம்.

''நீங்கள் இதற்கு முன் வாங்கிய பரிசுகள் துண்டா?''

''பள்ளிக் கூடத்தில் முதல் மார்க் வாங்கியது தொடங்கி, என் திருமண



* ஆடலும் பாடலும்

ரிசப்ஷன் வரை பல சந்தர்ப்பங்களில், பலர் கையால்.''

''உங்கள் பையனிடமிருந்து ஒரு முறையாவது?''

''இல்லை!''

''இதோ இங்கே போட்டியில் வென்ற உங்களுக்குப் பரிசளிக்கப்போவது உங்கள் பையன்... என்ன சந்தோஷம்தானே?''

சிறுவர்களுக்கென்று பல போட்டிகள். பெரியவர்களுக்கென்றும் சில போட்டிகள். பரிசு பெற்ற அப்பாவுக்குக் குழந்தை பரிசளிப்பதும், அம்மா, போட்டியில் வென்ற தன் குழந்தைக்குப் பரிசளிப்பதும் சின்னச் சின்ன சந்தோஷங்கள்.

இந்தக் குதூகலங்களெல்லாம் எங்கே நடைபெறுகின்றன? லிட்டில் ஃபோக்ஸ் (Little Folks) - சிறுவர் சிறுமியருக்கான பொழுதுபோக்குப் பூங்காவில் தான். தூத்துக்குடிக்காரரான டாக்டர் ராஜா ஃபினைரோ என்ற தொழிலதிபரும், அவரது மகன் ஜான்சனும் சேர்ந்து திட்டமிட்டு, சென்னையிலிருந்து மகாபலிபுரம் போகிற சாலையில், மகாபலிபுரத்துக்கு ஏழெட்டு கி.மீ. முன்னால் உருவாக்கியிருக்கிறார்கள், இந்த முத்தான திட்டத்தை.

இரண்டரை ஏக்கர் நிலம் இயற்கை உணர்வுடன் அழகுபடுத்தப்பட்டுள்ளது. நுழைவுக் கட்டணம் பெரியவர்களுக்கு இருபத்தைந்து ரூபாய். பன்னிரண்டு வயதுக்குட்பட்ட குழந்தைகள் என்றால் பதினைந்து ரூபாய்.

குழந்தைகள் ரயில், குகைக்குள் புகுந்து சுற்றி வரும். கட்டணம் தலைக்கு ஐந்து ரூபாய். ஒரு மணி நேரம் நீச்சல் குளத்தில் விளையாட பதினைந்து ரூபாய். காசு போட்டு விட்டு ஆடக் கூடிய வீடியோ விளையாட்டுகள். இது தவிர பொம்மை யானை, குதிரை, குரங்கு சவாரி. இதற்கெல்லாம் தனித்தனியாகக் கட்டணம். நூதனமான முறையில் வடிவமைக்கப்பட்ட சறுக்கு மரம், ஊஞ்சல். இவை இலவசம்.

செயற்கையான குட்டி நீர் வீழ்ச்சி, பனிப்படலம் உருவாக்கும் ஃபாண்டன். இவை சிறியவர்களை மட்டுமின்றி பெரியவர்களையும் ஏகமாய்க் கவர்கின்றன.

''மேலும் ஒன்னரை ஏக்கர் நிலத்தில், விதம் விதமான சவாரிகள், விளையாட்டுகளுக்கான பணிகள் துரிதமாய் நடந்து வருகின்றன. மூன்று மாத காலத்தில் பொழுது போக்க இன்னும் நிறைய அம்சங்கள் இருக்கும். எல்லாவற்றுக்கும் கட்டணம் உண்டு'' என்கிறார் ஜான்ஸன்.

வெளியிலிருந்து உணவு கொண்டு வந்து சாப்பிட இங்கே தடை உத்தரவு. ''அதற்குக் காரணங்கள் இரண்டு. முதல் காரணம் தேவையில்லாத குப்பை சேரும். அதற்காகத்தான் எங்கள் உணவகத்தில் கூட நாங்கள் டிஸ்போஸபிள் பேக்கிங் ஐட்டங்களை சப்ளை செய்வதில்லை. இரண்டாவது காரணம் பிசினஸ் நோக்கம்! எங்கள் உணவகத்தில் வியாபாரம் ஆக வேண்டுமல்லவா?'' என்பது நிர்வாகியின் விளக்கம்.

இங்கே 'நட்டி நாட்டி கிளப்' என்ற சிறுவர்கள் அமைப்பு இயங்கி வருகிறது. இதன் உறுப்பினர்களுக்கு லிட்டில் ஃபோக்ஸ் வளாகத்தில் சில சலுகைகள் கிடைப்பது தவிர, சென்னை நகரின் தேர்ந்தெடுக்கப்பட்ட கடைகளில் சிறப்புத் தள்ளுபடியும் தரப்படுகிறது. இப்போது இதன் உறுப்பினர்களின் எண்ணிக்கை ஐந்நூற்றுக்கும் மேல்.

இங்கே வருபவர்கள் எல்லோருமே மேட்டுக்குடிமக்கள் அல்லது மேல் மத்திய வகுப்பினர்தான். கட்டண விகிதங்கள் அப்படி!

– எஸ்.சந்திரமௌலி

வண்ணப்படங்கள் : யோகா



## அடுத்த இதழ்....

## பல்சுவை நிறைந்த பாலக்காடு சிறப்பிதழ்...

●● திகைக்க வைத்த திருவிழா!
- அநேக பிரும்மாண்டங்களின் அணிவகுப்பு

●● எம். ஜி. ஆர். வாழ்ந்த வீடு!

●● பந்தா இல்லாத பாலக்காடு எம்.எல்.ஏ.!

**மே 1 இதழ் - கோடை ஜில் ஸ்பெஷல்!**

# பனிமலையில் நதிக்கரையில் நடக்கலாம்!



✱ நீரிலே மிதந்து செல்லும் சைக்கிள்!

நியூயார்க் நகரத்தில் ஒரு பல் டாக்டரின் வெயிட்டிங் ரூம். முப்பத்திரண்டு வயது ஜான் சிம்மன்ஸ், டாக்டரைப் பார்க்கக் காத்திருந்த நேரத்தில், 'எஸ்கொயர்' இதழைப் புரட்டினார். அதில் இந்தியாவின் குல்மார்க், மணாலி நகரங்களில் நடக்கும் 'ஹெலி-ஸ்கீயிங்' என்ற நூதன பனிச் சறுக்கு விளையாட்டு பற்றிய விரிவான கட்டுரை இருந்தது. பனி மலைகளின் உச்சிகளுக்கு ஹெலிகாப்டரில் பறந்து சென்று, அங்கிருந்து சரிவுகளில் சறுக்கியபடி கீழே இறங்கும் விளையாட்டு. சாகசப் பிரியரான சிம்மன்ஸ் பல் வலியை மறந்தார்; பல் டாக்டரை மறந்தார் - டிராவல் ஏஜென்டுக்கு போன் செய்து இந்தியப் பயணத்துக்குத் திட்டமிட்டார்.

ஒரு மாதம் கழித்து பிளேனில் இந்தியா நோக்கிப் பறந்து கொண்டிருந்தார் சிம்மன்ஸ். பாரா செயிலிங், ஸ்கூபா டைவிங், ஹாங் கிளைடிங், ட்ரெக்கிங், ஸ்கீயிங் என்று விதவிதமான சாகஸ விளையாட்டுகளை உள்ளடக்கிய, பதினைந்து நாட்களுக்கான விடுமுறைத் திட்டம் அவருக்காக வகுக்கப்பட்டு இந்தியாவில் காத்திருந்தது.

இந்த விடுமுறையில் சிம்மன்ஸுக்கு ஐயாயிரம் டாலர் செலவு. எனினும் உலகின் வேறு எந்தப் பகுதியில் அவர் இத்தகைய விடுமுறைக்குத் திட்டமிட்டிருந்தாலும் அதனினும் அதிகமாகவே செலவாகியிருக்கும் - ஆஃப்ரிக்காவில் வனவிலங்குச் சரணாலயங்களைச் சுற்றிப் பார்ப்பதற்குக் கூட பத்தாயிரம் டாலர் செலவாகியிருக்கும்!

சுற்றுலாவின் போது சுற்றிப் பார்ப்பது மட்டுமின்றி பல விதமான உடற்பயிற்சிகளிலும் வீர விளையாட்டுகளிலும் ஈடுபட்டு மகிழ்ச்சி அடைய விரும்பும் பயணிகளுக்கு இந்தியா ஒரு சொர்க்க பூமி. பனி படர்ந்த மலைகள்; பொங்கிப் பாயும்

நதிகள்; அடர்ந்த காடுகள்; ஆயிரக்கணக் கான மைல்களுக்கு அழகிய கடற்கரை; ஏன் பாலைவனம் கூட இந்த நாட்டில் உண்டு. இவ்வளவு இடங்களிலும் குறைந்த செல வில் நிறைவான அனுபவங்கள் காத்துக் கிடக்கின்றன.

வன்முறை, பயங்கரவாதம் காரண மாக இந்தியாவின் 'இமேஜ்' பலத்த அடி வாங்கியுள்ளது. இதையும் மீறி, அயல்நாட் டினர், விளையாட்டுக்களை விரும்பி இங்கு வந்து கொண்டிருக்கிறார்கள். சுற்றுலாத் துறையின் மொத்த வருமானமான ரூ. 2250 கோடியில், சுமார் 125 கோடி 'Adventure tourism' என அழைக்கப்படும் சாகஸ சுற் றுலாவின் மூலம் பெறப்படுவதுதான். இந்த விளையாட்டுகளை விரும்பி வந்த சுற்றுலா பயணிகளின் எண்ணிக்கை கடந்த இரண்டு ஆண்டுகளில் இரட்டிப்பாகியுள்ளது. சென்ற ஆண்டு மட்டும் அயோத்தி ரகளை நடந்திராவிட்டால் ஐம்பதாயிரம் பயணிகள் சாகஸ சுற்றுலாவுக்காக மட்டுமே இந்தியா வந்திருப்பார்கள். 'ஸ்னோ லெபர்ட் அட் வென்சர்ஸ்' என்ற தனியார் சுற்றுலா நிறு வனத்தை நடத்தும் அஜித் பஜாஜ்,

# சறுக்கலாம்;

"இத்துறையில் இந்தியா வின் எதிர்காலம் மிகவும் பிரகாசமாய் இருக்கிறது" என்கிறார். இன்னும் ஐந்தே ஆண்டுகளில் தமது நிறு வனம் போல் ஏராளமான புதிய நிறுவனங்கள் இந் தியத் துணைக் கண்டம் எங்கும் தோன்றி, சக்கை போடு போட வாய்ப்பு உள்ளது என்பது இவர் கணிப்பு.

ஆனால், இது நிறை வேற வேண்டுமானால், அரசாங்கத்தின் கவனம் சில விஷயங்கள் நோக்கித் திரும்ப வேண்டும். இயற் கையாக வாய்த்த ஆதாயங்களை நாம் இன் னும் நிறம்படப் பயன்படுத்த வேண்டும்.

உலகச் சுற்றுலாப் பயணிகளுள் 0.5 சதவிகிதத்தினரே இந்தியாவுக்கு வருகின் றனர். சிங்கப்பூர், மலேஷியா, தாய்லாந்து, நேபாளம் போன்ற சிறு நாடுகளெல்லாம் நமக்கு வரக்கூடிய சுற்றுலா வர்த்தகத்தை வளைத்துக் கொண்டு விட்டன. வசதியும் வளமும் மிக்க மேற்கத்திய நாட்டவர் இமய மலையைக் காண நேபாளத்துக்குப் போகி றார்களேயொழிய, இந்தியாவுக்கு வருவ தில்லை. இந்த நிலை மாற வேண்டுமா னால், அரசாங்கம் இந்திய சுற்றுலா வர்த்த கத்தை உலகச் சந்தையில் கவர்ச்சிகரமாக விளம்பரம் செய்து பிரபலப்படுத்த வேண் டும்.

சமீபத்தில்தான் இது குறித்த விழிப் புணர்ச்சி அரசுக்கு ஏற்பட்டுள்ளது. கடந்த வருடம் வகுக்கப்பட்ட தேசிய செயல் திட்டத்தில் 'சாகஸ சுற்றுலா' வசதிகளை அபிவிருத்தி செய்ய தனியாக நிதி ஒதுக் கப்பட்டது. ஆனால் நோக்கங்கள் சிறப்பாக இருந்தாலும் திட்டம் செயல்படுத்தப்படு வதில் குளறுபடிகள் இருக்கின்றன. உதார ணமாக, ஒதுக்கப்பட்ட நிதியைக் கொண்டு படகுகள் வாங்கி, அவற்றை மத்திய அரசு, மத்தியப் பிரதேசம், ஹரியானா மாநில அரசுகளிடம் கொடுத்துள்ளது. இவ்விரண்டு மாநிலங்களின் சுற்றுலாத் துறைகளும் இவற்றை எப்படி பயன் படுத்துவது என்று தெரியாமல் பரணில் போட்டு வைத்துள்ளன!



* விசைப் படகில் விரையலாம்

இதைப் போன்ற குளறுபடிகள் நடக்காமல் 'சாகஸ சுற்றுலா' பிரபலமடைய வேண்டுமானால் தனியார் துறையினரை ஊக்குவித்து, இதில் ஈடுபடச் செய்வதே சரியான வழி. ஏற்கெனவே இத் துறையில் செயல்பட்டு வரும் தனியார் நிறுவனங்கள் லாபகரமாக நன்கு நடத்து வருகின்றன.

இந்தியாவுக்கு வரும் அயல்நாட்டுச் சுற்றுலா பயணிகள் என்னென்ன சாகசங்களில் ஈடுபடலாம்....?

● உத்திரப் பிரதேசம்; ஹிமாசலப் பிரதேசம், ஜம்மு-காஷ்மீர் ஆகிய இடங்களில் பனிச் சறுக்கு விளையாட்டுக்குத் தேவையான உபகரணங்கள் குறைந்த வாடகைக்குக் கிடைக்கின்றன.

● மலைப் பிரதேசங்களில் டிரெக்கிங் போவது - 9,000 முதல் 15,000 அடி வரையிலான உயரங்களில் கால்நடைப் பயணங்களும், காம்பிங் (கூடாரமடித்துத் தங்குதல்) வசதிகளும் செய்து தருகிறார்கள், தனியார் துறையினர். உலகத் தரத்துக்கு வசதிகள் இந்தப் பயணங்களின் போது கிடைக்கின்றன.

● கடற்கரையோரத்தில் surfing: கரையை நோக்கிப் பாய்ந்து சுருண்டு வரும் அலைகள் மீது ஒரு பலகை வைத்து, அதன் மீது நின்று 'பாலன்ஸ்' செய்தபடி விரைவது.

● Water Ski-ing : தண்ணீரைக் கிழித்து வேகமாகச் செல்லும் விசைப் படகின் பின் ஒரு பலகையில் நின்று, கயிற்றைப் பிடித்தபடி விரைவது.

● Snorkelling :முகமூடி அணிந்து தண்ணீருக் கடியில் மூழ்கி அழகுகளை ரசிப்பது. முகமூடியுடன் இணைந்துள்ள குழாய் நீர்ப் பரப்பின் மேல் துருத்தியிருப்பதால் அதன் துணையுடன் மூச்சு விடலாம்.

● Scuba diving : முதுகில் ஆக்ஸிஜன் சிலிண்டர் கட்டிக் கொண்டு ஆழ்கடலின் அழகுகளை ரசித்துத் திரும்புவது.

● Para sailing : ஒரு விசைப்படகின் பின் உடலை இணைத்துக் கொண்டு, பலகை மீது நின்று வேகமாக நீரைக் கிழித்துச் சென்று கொண்டிருக்கையிலேயே பின்புறத்தில் பாராசூட் விரிந்து நம்மை நீருக்கு மேலாகத் தூக்கிச் செல்லும். - இந்த விளையாட்டுகள் கடற்கரையோர மாநிலங்களிலெல்லாம் நடைபெறலாம். கோவாவில், கடற்பகுதியில் செயற்கைத் தடைகள் அமைத்து இந்த விளையாட்டுகளின் சவாலை அதிகப்படுத்தியிருக்கிறார்கள்.

● River running என்பது புதியதொரு விளையாட்டு. ரிஷிகேஷில் தொடங்கி கங்கைக் கரையோரமாக ஓடி வருவது. இதில் ஈடுபடுவோர் கூடாரங்களைச் சுமந்து செல்கிறார்கள். ஆங்காங்கே தங்கி அழகுகளை ரசித்து மகிழ்கிறார்கள்.

● பாறைகளுக்கிடையில் நுங்கும் நுரையுமாகச் சுழித்தோடும் ஆற்றில், கவிழ்ந்து விடாமல் சிறு படகில் துடுப்புப் போட்டுச் செல்வது, Canoeing என்ற இன்னொரு சாகஸ விளையாட்டு.

கூடாரம் அமைத்துத் தங்கி மகிழ்வோரின் விடுமுறை, காலை ஐந்தரை மணிக்கே தொடங்கிவிடும். சுறுசுறுப்பாக ஒரு ரவுண்ட் ஓடிவிட்டுத் திரும்பினால் காலை உணவு. அதன் பின்னர் வெயில் உச்சிக்கு வரும் வரை நடை அல்லது ஓட்டம். மதிய உணவுக்குப் பின் சற்றே ஓய்வு - பிறகு மீண்டும் விளையாட்டுகள் அல்லது நடை. இரவு நேரங்களில் திறந்த வெளியில் தீ மூட்டி அதைச் சுற்றி அமர்ந்து ஆடிப் பாடி மகிழ்வார்கள்.

இத்தகைய விடுமுறைகளை விரும்பி, திரும்பத் திரும்ப வருகிறார்கள் அயல் நாட்டுப் பயணிகள். சுற்றிப் பார்க்க வருகிறவர்களை விட அதிகம் செலவு செய்பவர்கள் சாகஸ விரும்பிகள்தான் என்பதால் இதில் நம் நாட்டுக்கு வருமானமும் கூடுதல். ஒரு நாளில் தொள்ளாயிரம் முதல் மூவாயிரம் ரூபாய் வரை செலவழிக்கும் பயணிகள் இருக்கிறார்கள்.

இந்த அளவு இல்லாவிட்டாலும் ஓரளவு செலவு செய்து சாகஸ சுற்றுலாவில் ஈடுபட இந்தியர்களும் இப்போது முன் வருகிறார்கள்.

சாகஸ சுற்றுலா குறித்த தேசிய திட்டத்தை திறம்பட வகுத்து, சிறப்பாக நிறைவேற்றினால் நம் நாடு குறைந்த செலவில் நிறைந்த லாபம் அடையும்.

- நியூஸ்மன் ஃபீச்சர்ஸ்.



"இந்தப் போலீஸ்காரர் ஏன் பிள்ளையாருக்கு இத்தனை தேங்காய்கள் உடைக்கிறார்....?"

"முதல்வருக்கு தனி விமானம் வாங்கப் போகிறார்களாம்... இனி அவர் வெயிலிலும் மழையிலும் நிற்க வேண்டியது இல்லையாம்..."

- ஏ.வி. கிரி

# ஈஸ்வரியின்
# தமிழ் புத்தாண்டு பொற்குவியல்
# சீட்டு பரிசு விழா!



பல பொன்னான தருணங்கள் வாழ்வில் தானாக நிகழ்வதேயில்லை. அதற்குத் தேவை சிறந்த திட்டங்களும் கூர்மையான எதிர்கால நோக்கும். அதாவது பணத்தேவையை முன் கூட்டியே புரிந்து கொள்ளும் எதிர்கால நோக்கு. அதற்கான சுலபமான, நம்பகமான, இலாபகரமான வழியில் பணத்தை சேமிப்பது. பின் தேவையான நேரத்தில் குறைந்த சட்ட திட்டங்களுடன் கூடிய வழியில், ஆனால் துரித கதியில் பணத்தை பெற்றுக் கொள்ளும் திட்டம். சுருக்கச் சொன்னால் அதுவே ஈஸ்வரி சிட் ஃபண்ட்ஸ் வழங்கும் திட்டம்.

ஈஸ்வரி சிட் ஃபண்ட்ஸ் மட்டுமே சீட்டு பரிசுத் தொகையை முன் கூட்டியே பின்தேதியிட்ட காசோலைகளாக தர உத்திரவாதம் அளிக்கிறது. சுலபமான நிபந்தனைகளுடன். தேவைகளுக்கான செலவுகளையும் சமாளிக்க குறிப்பிட்ட திட்டங்களும் ஈஸ்வரியில் உள்ளன.

சுப மங்களா — திருமண முன்பணத் திட்டம்
சுப விலாஸ் — வீடு கட்ட முன் பணத் திட்டம்
சுப வணிகா — வியாபாரத்திற்கு முன் பணத் திட்டம்

ஏனெனில் ஈஸ்வரிக்கு உங்கள் தேவைகளும் ஆசைகளும் தெரியும். உங்கள் பெருமையும் கூட. ஈஸ்வரிக்கு வாருங்கள். வாழ்வின் பொன்னான தருணங்கள் எப்படி நிகழ்கின்றன என்பதை அறிந்து கொள்ளுங்கள்.



ESWARI
GROUP OF COMPANIES

## ஈஸ்வரி சிட்பண்ட்ஸ் (பி) லிமிடெட்

**தலைமை அலுவலகம்:** 4, எல்டாம்ஸ் ரோடு, முதல் மாடி, ஆழ்வார்பேட்டை, சென்னை-600 018. தொலைபேசி: 455349 & 459557

**கிளைகள்:** • 13, ரத்தன் பஜார், பாரிமுனை, சென்னை 3. தொலைபேசி: 560767 • 11, பாரதி சாலை, திருவல்லிக்கேணி, சென்னை 5. 19/6, 4-வது மெயின் ரோடு, முதல் மாடி, நங்கநல்லூர், சென்னை 61 • 13, ஆற்காட் ரோடு, சாலிகிராமம், சென்னை 93. தொலைபேசி: 428650 • 72, ஜி.எஸ்.டி. ரோடு, குரோம்பேட்டை, சென்னை 44.




அறிமுகப்படுத்துவோர் பரிசு

| வ. எண் | சந்தாத் தொகை (ரூ) | | மாதங்கள் | | சீட்டின் மதிப்பு (ரூ.) | சந்தாதாரர் பரிசு | அறிமுகப்படுத்துவோர் பரிசு |
|---|---|---|---|---|---|---|---|
| 1. | 250 | × | 40 | = | 10,000 | [illegible] | [illegible] |
| | 400 | × | 25 | = | 10,000 | [illegible] | |
| | 500 | × | 20 | = | 10,000 | | |
| 2. | 500 | × | 30 | = | 15,000 | [illegible] | [illegible] |
| 3. | 500 | × | 40 | = | 20,000 | [illegible] | [illegible] |
| | 625 | × | 40 | = | 25,000 | [illegible] | |
| | 1000 | × | 25 | = | 25,000 | | |
| 4. | 1000 | × | 50 | = | 50,000 | [illegible] | [illegible] |
| | 2000 | × | 25 | = | 50,000 | [illegible] | [illegible] |
| 5. | 1500 | × | 50 | = | 75,000 | [illegible] | |
| | 2500 | × | 30 | = | 75,000 | [illegible] | [illegible] |
| 6. | 2500 | × | 40 | = | 1,00,000 | [illegible] | [illegible] |
| | 4000 | × | 25 | = | 1,00,000 | [illegible] | [illegible] |
| 7. | 5000 | × | 30 | = | 1,50,000 | [illegible] | [illegible] |
| 8. | 8000 | × | 25 | = | 2,00,000 | [illegible] | [illegible] |
| | 10000 | × | 20 | = | 2,00,000 | [illegible] | [illegible] |

சந்தாதாரர் பரிசு




உங்கள் வளர்ச்சி ஈஸ்வரியுடன் வளரட்டும்



மொரிஷியஸ் நாட்டின் கௌரவப் பிரதிநிதியாக (கான்சல்) சென்ற ஆண்டு பொறுப்பேற்றார் தொழிலதிபர் மருதைப் பிள்ளை. அந்நாட்டைப் பற்றி அவர் தரும் தகவல்கள்...

# சொர்க்கத்தின் முன்னோடி

உலக வரைபடத்தில் மொரிஷியஸை பாருங்கள்... ஒரு முற்றுப் புள்ளி அளவுக்குத்தான் இருக்கும். தென்கிழக்கு ஆஃப்ரிக்கக் கடற்கரையிலிருந்து மடகாஸ்கர் தாண்டி ஒதுங்கி நிற்கும் குட்டி நாடு. சுற்றிலும் பவழப் பாறைகள் கரை கட்டி நிற்கும் தீவு. பரப்பளவு வெறும் 720 சதுர மைல்கள். ஆனாலும் இதன் அழகு அபரிமிதமானது 'மொரிஷியஸ்தான் முதலில் படைக்கப்பட்டது; அதைப் பார்த்து, அதன் சாயலில் தான் சொர்க்கத்தை உருவாக்கினார்கள்...' என்று மார்க் டுவெய்ன் எழுதியிருக்கிறார் என்றால் பாருங்கள்...!

சென்ற ஆண்டு மட்டும் 3,75,000 அயல் நாட்டுச் சுற்றுலாப் பயணிகள் மொரிஷியஸ் வர, ஐந்தரை பில்லியன் ரூபாய் அந்நியச் செலாவணியை அவர்கள் மூலம் அடைந்துள்ளது இந்நாடு. மொரிஷியஸுக்கு அந்நியச் செலாவணி பெற்றுத் தரும் துறைகளுள் மூன்றாவது இடம் வகிக்கிறது சுற்றுலாத் துறை.

நிறைய தென்னாப்பிரிக்க வாசிகள் மொரிஷியஸுக்கு வந்து போகின்றனர். விஸா எதுவும் தேவை இல்லை. இந்தியாவிலிருந்து ஆயிரக்கணக்கான பேர் வருகிறார்கள். (சென்ற ஆண்டு மட்டும் பத்தாயிரம்!) முன்பு மொரிஷியஸுக்கு வாரம் இருமுறை பம்பாயிலிருந்து போய்க் கொண்டிருந்த விமானம், இப்போது வாரம்



* இயற்கை எழில் கொஞ்சும் வழிபாட்டுத்தலம்.

# மொரீஷியஸ்!



* பல்வேறு கலாசாரங்கள் இணைந்த தீவு...

மூன்று முறை போய் வருகிறது.

கடலில் குளிப்பதும், நெடுஞ்சாலையில் பயணம் செய்யும்போது பச்சைப்பசேல் என்ற கரும்பு வயல்களின் மிருதுவான அசைவுகளையும் பவழப் பாறைகள் அலங்கரிக்கும் மரகதப் பச்சை வண்ணத்தை ரசிப்பதும் மொரிஷியஸுக்கு வரும் சுற்றுலாப் பயணிகள் நினைவிலிருந்து மறையவே மறையாது.

கடற்கரை மட்டுமே சுற்றுலாப் பயணிகளை ஈர்த்துவிடாது. ஆகவே உள்நாட்டு வசதிகளையும் கூட்டியிருக்கிறார்கள். வசதியான ஹோட்டல்கள் நிறைய உருவாகின்றன. அதிலும் கேந்திர வியாபார நிதி மையமாக மொரிஷியஸ் இருப்பதால், ஸ்டாக் எக்ஸ்சேஞ்ச், வரிகள் இல்லாத துறைமுக வசதிகள் என்று ஏராள சௌகரியங்கள். இவற்றைப் பயன்படுத்திக் கொள்ள வரும் பயணிகளுக்காக 200 அறைகள் கொண்ட பிஸினஸ் ஹோட்டல் ஒன்று துறைமுகத்தை ஒட்டி, போர்ட் லூயியில் உருவாகி வருகிறது. இதனால் துறைமுகம் வளர்ச்சி அடைகிறது. சுற்றுலாத் துறை அமைச்சர் சியாங்லெம் தலைமையில் டூரிஸம் துறைதான் இதை முன்னின்று நடத்துகிறது.

பதினாறாம் நூற்றாண்டில், போர்ச்சுக்கீசியர்கள் இங்கே வந்து, பிறகு அதே நூற்றாண்டின் கடைசியில் டச்சுக்காரர்கள் தங்கி, அப்புறம் பிரெஞ்சுக்காரர்களின் ஆதிக்கத்துக்கு மாறி, அவர்களிடமிருந்து பத்தொன்பதாம் நூற்றாண்டில் ஆங்கிலேயர்களின் வசம் வந்தது இந்த அழகான தீவு. 1968ல் தான் விடுதலை பெற்றது. அதனால் எல்லாக் கலாசாரங்களின் சங்கமத்தை இங்கே காணலாம்.

இத்தனை மாறுபட்ட மொழி-கலாசாரப் பின்னணி கொண்ட மக்கள் ஒற்றுமையோடு இணைந்து வாழ்வது ஒன்றே சுற்

றுலாப் பயணிகளுக்கு வியப்பையும் மகிழ்ச்சியையும் அளிக்கும் விஷயமாகக் கருதப்படுகிறது.

சுற்றுலாத் துறையை விரிவுபடுத்தும் போது, சுற்றுச் சூழல் பாதுகாப்பையும் மனத்தில் வைத்துக் கொள்ள வேண்டும். அதனால் எந்தத் திட்டத்தையும் அனுமதிக்கும் முன் அது சுற்றுச் சூழல் பாதிப்பை உண்டாக்காமல் பார்த்துக் கொள்ளுகிறார்கள். நீர் சுத்திகரிப்பு ஆலை, சுற்றுச் சூழலை அழகு படுத்துதல் (லேண்ட்ஸ்கேப்பிங்) இவை எல்லாம் அவசியமாக வலியுறுத்தப்படுகின்றன இங்கே. கட்டடங்கள் பத்து மீட்டர் உயரத்துக்கு மேலே போகாமல் இருக்க வேண்டும். மொத்த இடத்தில் நாற்பது சதவிகிதத்துக்கு மேல் கட்டடம் கட்டப்படக் கூடாது என்றெல்லாம் கட்டுப்பாடுகள் வைத்திருக்கிறார்கள்.

சென்ற ஆண்டு இந்தியச் சுற்றுலாப் பயணிகளை ஈர்க்கப் பெருமளவில் விளம்பரம் செய்தார்கள். அதற்கு நல்ல பலனும் கிடைத்தது. குறிப்பாக இந்திய சினிமாப் படத் தயாரிப்பாளர்கள் மொரிஷியஸ் நாட்டில் திரைப்படங்கள் எடுக்க நிறையவே விண்ணப்பங்கள் அனுப்பியிருந்தார்கள்!

மொரிஷியஸ் நாட்டின் தற்போதைய பிரதமர் சர் அநிருத் ஜகன்னாத், சுமார் பத்து வருடங்களுக்கு மேலாகப் பதவி வகித்து வருகிறார். 1982ல், சர் சிவுசாகர் ராம் குலாமிடமிருந்து இந்தப் பதவியை ஏற்றுக் கொண்டார். (சிவுசாகர் ராம் குலாம் மொரிஷியஸ் நாட்டின் தேசத் தந்தையாக மதிக்கப்படுகிறார்.)

விவசாயம் மட்டுமே இந்த நாட்டின் பொருளாதாரத்துக்கு அடிப்படையாக இருந்து வந்தது. அதை மாற்றி, இன்று சர்க்கரை, ஏற்றுமதிக்கு மட்டுமேயான பொருட்கள் தயாரிப்பு, சுற்றுலா மற்றும் ஃப்ரீ போர்ட் எனப்படும் இலவசத் துறைமுக வசதி ஆகிய நான்கு முக்கிய தூண்களால் நாட்டின் பொருளாதாரத்தையே மாற்றி அமைத்து வருகிறார்கள்.

தொழில்கள் தொடங்குவதற்கான ஆதார வசதிகளோடு, கல்வியறிவு பெற்ற ஊழியர்களும் மொரிஷியஸில் இருப்பதால் அயல் நாட்டினர் அங்கே முதலீடு செய்து, தொழில்கள் தொடங்க ஆர்வம் காண்பித்தனர். ஆப்பிரிக்க நாடுகளுக்கு, குறிப்பாகத் தென்னாப்பிரிக்காவுக்கு ஏற்றுமதி வாய்ப்புக்கள் நிறைய இருப்பதை உணர்ந்திருக்கிறார்கள். மொரிஷியஸ் வழியாக இந்திய ஏற்றுமதியும் கூடுவதற்கு வாய்ப்பு இருக்கிறது.

பத்து வருடங்களுக்கு முன் இருந்த பொருளாதார நிலைமையை அடியோடு மாற்றி, ஏற்றுமதிக்கான தயாரிப்புகளில் முழுக் கவனமும் செலுத்தியதன் காரணமாக அந்த நாட்டின் பொருளாதார முன்னேற்றம் பிரமிக்கத் தக்க மாறுதலைக் கண்டது. விவசாயத் துறையில் நவீன உத்திகள் கையாளப்பட்டன. சுற்றுலா வளர்ச்சியும் பரவலாக்கப்பட்டது. வேலையின்மை கணிசமாகக் குறைந்தது.

மொரிஷியஸில் கிட்டத்தட்ட 70 சதவிகிதம் இந்தியர்கள் வசிக்கிறார்கள். ஹிந்தியில் சரளமாக உரையாடுவார்கள். சாரி உடுத்திய பெண்கள் நவீனமாக பிரெஞ்சு மொழி பேசுவார்கள். ஹிந்தி சினிமா இங்கே ரொம்ப பாபுலர். ரஷ்யாவில் ராஜ் கபூர் மாதிரி, இங்கே ஷாருக்கான் ரொம்பப் பிரபலமான ஹீரோ!

– சாருகேசி

## வீட்டுக்குள்ளேயே விளையாடலாம்!

**புத்தகக் கிரிக்கெட் :** இந்தக் கிரிக்கெட்டுக்கு மைதானம் வேண்டாம். வேண்டியதெல்லாம், தடிமனான டிக்ஷனரி போன்ற ஏதாவது ஒரு புத்தகமும், ஸ்கோர் குறிக்க பேப்பர் பேனாவும்தான். குறைந்த பட்சம் இரண்டு பேர் இருந்தால் போதும். அதிகபட்சம் எவ்வளவு பேர் வேண்டுமானாலும் ஆடலாம்.

ஏதாவதொரு புத்தகத்தைக் கையில் பிடித்துக் கொண்டு, சட்டென்று ஏதாவது ஒரு பக்கத்தைப் பிரிக்க வேண்டும். வலது பக்கத்தில் உள்ள பக்க எண்ணின் கடைசி இலக்கம்தான் உங்கள் ஸ்கோர். ஒற்றைப் படையாகவே வரும் இந்த எண்களில் ஒன்று, மூன்று, ஐந்து என்றால் உங்களுக்கு அத்தனை ரன்கள். ஏழு, வந்தால் ரன் அவுட். ஒன்பது வந்தால் எல்.பி.டபிள்யூ. ஓர் ஆட்டக்காரர் அவுட் ஆகிறவரை தொடர்ந்து பக்கம் புரட்டி ஆடிக் கொண்டே இருக்கலாம். அவுட் ஆனதும், அடுத்தவரது முறை. எல்லோரும் ஒரு ரவுண்டு ஆடி முடித்ததும், அடுத்த இன்னிங்ஸ்.

நாலைந்து பேர் ஆடினால் ஆட்டம் சமைகளை கட்டும். பேப்பரில் குறித்து வைத்துக் கொண்டிருக்கும் ஸ்கோர் விவரம் கொண்டு, 'மேன் ஆஃப் த மாட்ச்' கூட தேர்ந்தெடுக்கலாம்!

**அலர்ஜி நெ. ஏழு :** அனைவரும் வட்டமாய் உட்கார்ந்து கொள்ளலாம். ஒன்று, இரண்டு, மூன்று என்று வரிசையாய்ச் சொல்லிக் கொண்டே போக வேண்டும். ஏழு மற்றும் அதன் மடங்கு எண் வரும் போது அவரவர் தமது பெயரைச் சொல்ல வேண்டும். அதே போல் ஏழு இடம் பெறும் 17, 27, 70 போன்ற நெம்பர்களுக்கு பதிலாகவும் அவரவர் பெயரைத்தான் சொல்ல வேண்டும். வெகு ஜாக்கிரதையாய் விளையாடா விட்டால், சீக்கிரமே ஆட்டமிழந்து வேடிக்கை பார்க்க நேரலாம்.

தொகுப்பு : மௌனஷ்மி

# Kalki Shopping Page

# Kalki Shopping Page

# Kalki Shopping Page

# Kalki Shopping Page

பல ஆண்டே வருக!
புது வாழ்வு தருக!!
அனைவருக்கும் எமது உள்ளங்கனிந்த
தமிழ்ப் புத்தாண்டு வாழ்த்துக்கள்!

தங்க நகையில்
மங்கையர் எண்ணம்
எங்கள் கைவண்ணம்





**சாந்தி கோல்டு ஹவுஸ்**



எங்கள் நகை சேமிப்புத் திட்டத்தில் சேர்ந்து பயன்பெறுங்கள். சேரும் அங்கத்தினர்களுக்கு மாதாந்திர தவணைத் தொகைக்கு ஏற்ற பரிசுப் பொருள் அளிக்கப்படும்.

72, உஸ்மான் ரோடு,
தி. நகர், சென்னை – 600 017.
Phone : 441730.

---

புத்தம் புதிய டிசைன்களில்
உயர்ரக மதுரை சுங்குடி
புடைவைகளுக்கு

**RAMACHANDRA SAREES**



(மதுரை சுங்குடி புடைவைகளின் உலகம்)

37-B, Arya Gowder Road,
Postal Colony Bus Stop
West Mambalam, Madras - 33.

வழங்குவோர் :
ராமச்சந்திரா சாரீஸ்,
20-B, குயவர்பாளையம் ரோடு,
மதுரை-9.

எங்களிடம் இப்பொழுது தரமான வெங்கடகிரி புடைவைகளும் கிடைக்கும்

---

டெம்பிள் ஜுவெல்லரி
வெள்ளி நவீன நகைகள்
நவீன நாட்டிய நகைகள்
அழகிய கால் கொலுசுகள்

– பிரத்தியேக அங்காடி



வெள்ளி நகைகள்
ஆர்டர்களும்
ஏற்கப்படும்.

தயாரிப்பு &
விற்பனையாளர்கள் :

**சுக்ரா ஜுவெல்லரி**

40. வடக்கு மாட வீதி,
மயிலாப்பூர்,
சென்னை – 600 004.
Ph : 77499

# Kalki Shopping Page

## வாசகர்களுக்குப் பரிசு ரூ.250/=

இங்குள்ள புகைப்படங்கள் பிரபலமான சுற்றுலாத் தலங்களில் உள்ள கட்டடங்கள். அவை என்னென்ன என்பதைக் கீழேயுள்ள கூப்பனில் கொடுக்கப்பட்டிருக்கும் இடத்தில் வரிசை எண்படி எழுதி அனுப்புங்கள். உறைமேல், 'சுற்றுலாப் போட்டி' என்று குறிப்பிடவும். அனைத்தையும் சரியாக எழுதுபவருக்குப் பரிசு ரூ. 250/-. பலர் எழுதினால் குலுக்கல் முறைதான்! ஆசிரியர் தீர்ப்பே இறுதியானது.

கடைசித் தேதி : 20.4.94



1



2



3



4



5



6

1.............................. 2.............................. 3..............................

4.............................. 5.............................. 6..............................

பெயர் : ..............................................................

விலாசம் : ..............................................................

..............................................................

பின்கோடு : ..............................

பஸ்ஸை மறிச்சுக் கொள்ளை மேல் கொள்ளை... லாரிய நிறுத்தி கொள்ளை... காரை நொறுக்கிக் கொள்ளை... வீடு புகுந்து கொள்ளை... என்னதான் பண்றது மேடம்?...

ஆமாங்க, ரொம்பதான் கெட்ட பேரு! அரசியல்-வாதிங்க மாதிரி போலீஸ், கொள்ளை இல்லாம, சாமர்த்தி-யமா கொள்ளை அடிக்கத் தெரியுதா, அவங்களுக்கு?...

வெடியா வெடிக்கிறே? யூ ஆர் அண்டர் அரெஸ்ட்!

ராமதாஸ்

பா.ம.க. கிளர்ச்சி

இந்தக் கூத்துக்கும் பேசாம பட்டாசு வெடிக்கலை விட்டுடிருக்கலாம்!

உச்சநீதி மன்றம்

மத்திய அரசு

சேஷன்

பாதல் பிரகாஷ் சிங்

உங்களுக்கு அனுபவம் பத்தாது! என்னைப் பாருங்க, குட்டு வாங்கி, வாங்கி மரத்துப் போச்சு... குட்ற கை வீங்கினாதான் உண்டு!




# கல்கி





1994
ஏப்ரல் 17
மலர்: 52
இதழ்: 38
பவ
சித்திரை 4


தமிழ்த்திரு நாடு
தன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி
பாப்பா. - பாரதியார்

## அதிகாரங்கள் துஷ்பிரயோகத்துக்கு அல்ல!

அதிகாரங்கள் ஓரிடத்தில் குவியாமல் பரவலாக்கப்படுவதே ஜனநாயகத்தின் அடிப்படை. கிராமக் கர்ணம் முதல் பிரதமர் வரை பலருக்கும் அதிகாரங்கள் உண்டு எனினும் அவை துஷ்பிரயோகமாகாமல் இருக்க வரம்புகளும் விதிமுறைகளும் நிர்ணயிக்கப்பட்டுள்ளன. முறையீடு, மேல் முறையீடு என்றெல்லாம் உண்டு. ஆயினும் அதிகாரம் கைக்கு வந்ததுமே ஆணவம் தலைக்கேற நடந்து கொண்டவர்கள்தாம் அதிகம். இதற்கு எத்தனையோ உதாரணங்கள் என்றாலும் சமீபத்திய மூன்று சம்பவங்கள் நம் கவனத்தைக் கவர்கின்றன.

ஆளுனர் என்பவர் மத்திய அரசுக்கும், மாநில அரசுக்கும் இடையே ஒரு பாலம் போல் விளங்குகிறவர். இரு தரப்புக்கும் இவர் ஆலோசனைகள் வழங்கலாம். ஆனால் அதிகாரங்கள் குறைவு. மாநில அரசு சரியாக இயங்கவில்லை என்று இவர் கருதினால், மத்திய அரசுக்கு அறிக்கை அனுப்பலாமே தவிர, அதிகாரங்களைத் தாமே கையில் எடுத்துக் கொண்டு அமைச்சரவையை டிஸ்மிஸ் செய்வதோ, முதல்வரை மாற்றி அமைப்பதோ கூடாது. இவ்வாறிருக்க கோவா ஆளுனர் பானு பிரகாஷ் சிங், முதல்வர் டிசௌசாவைப் பதவி நீக்கம் செய்து, அவரிடத்தில் நாயக்கை அமர்த்தி பதவிப் பிரமாணம் செய்வித்தது, ஆளுனருக்கு இத்தகைய அதிகாரங்கள் கிடையாது என்பதை சந்தேகத்துக்கிடமின்றி வலியுறுத்தத்தான் பயன்பட்டது. இந்த அதிகார துஷ்பிரயோகத்தினால் ஆளுனரின் பதவியே பறி போயிற்று. முதல்வரை மாற்றி அமைப்பது என்ற உரிமை மக்களால் தேர்ந்தெடுக்கப்பட்ட சட்ட மன்ற ஆளும்கட்சி உறுப்பினர்களுக்குத்தான் உண்டே தவிர, ஆளுனருக்கு இல்லை என்பது மீண்டும் ஒரு முறை ஊர்ஜிதமாயிற்று.

அடுத்து சேஷன். 'ஊருக்கு நல்லது, சொல்வேன்; நாட்டையே திருத்தி அமைப்பேன்' என்று புறப்பட்டிருக்கும் இவரது நோக்கங்களை யாருமே குறை கூற முடியாது. ஆனால் இலக்கு சரியாக இருந்தால் போதாது; அதை அடையும் மார்க்கமும் ஏற்கக் கூடியதாய் இருக்க வேண்டும். இதைப் புரிந்து கொள்ளாத சேஷன், தமது அதிகாரங்களை வரம்பு மீறி பிரயோகிக்கப் போக, உச்ச நீதிமன்றமே அவருக்கு எல்லைகளைச் சுட்டிக் காட்டி 'நாவடக்கம் தேவை' என்றும் எச்சரிக்கும்படியாகிவிட்டது!

தேர்தலுக்குத் தேதி குறிப்பது வேறு; அதிகாரபூர்வமான அறிவிப்பு (notification) என்பது வேறு. இவற்றில் எந்தத் தேதிக்குப் பிறகு அரசுச் செலவில் அபிவிருத்திப் பணிகள் நடக்கலாகாது (அது ஆளும் கட்சிக்கு ஆதாயமாக முடியும் என்பதால்) என்பதற்கு தேர்தல் நன்னடத்தை நெறிமுறைகளில் சரியான விளக்கம் இல்லை. இந்த நெறிமுறைகளும் சட்டபூர்வமானவை அல்ல. வழிகாட்டும் அறிவுரைகளே. இவ்வாறிருக்க, ஆந்திரா முதல்வர் சில அபிவிருத்திப் பணிகளை ஆரம்பித்து வைக்கப் போய், பின்னர் சேஷனின் மிரட்டலுக்குப் பயந்து வாபஸ் வாங்கினார். இதையொட்டி ஆந்திரா அரசு உச்சநீதிமன்றத்தை அணுக, சேஷன் வாங்கிக் கட்டிக் கொண்டார்.

அன்பு காட்டி, அரசியல் தலைவர்களின் ஒத்துழைப்பைப் பெற்று, தேர்தல் சட்டங்களில் சீர்திருத்தங்களைச் செய்வதுதான் நிலைமையில் அபிவிருத்தி காண ஏற்ற வழி. எல்லாவற்றையும் தாமே சரி பண்ண நினைத்து, தொகுதிகளில் வேட்பாளர்கள் செலவு செய்யும் தொகையைக் கணக்கிட ஆடிட்டர்களை நியமிப்பது போன்ற காரியங்கள் எதிர்பார்க்கும் பலனைத் தராது; வாக்கு வாதத்தையும் வழக்குகளையும்தான் வளர்க்கும்.

அரசாங்க விளம்பரங்கள், கட்சிக் கண்ணோட்டமின்றி எல்லாப் பத்திரிகைகளுக்கும் வழங்கப்படுவதுதான் முறை. தமிழக அரசு இதைக் கவனத்தில் கொள்ளாமல் ஓர வஞ்சனையுடன் நடந்து கொள்கிறது என்பதைப் ''பிரஸ் கௌன்சில்'' கவனத்துக்குக் கொண்டு வந்து, அந்த நடுவர் மன்றத்தின் சாதகமான தீர்ப்பைப் பெற்ற ''மாலை முரசு'', பத்திரிகை உலகின் நன்றியை மட்டுமின்றி, ஜனநாயகப் பற்றுள்ள அனைவரது பாராட்டையும் பெறுகிறது.

ஆனால், 'இந்த அனுபவப் பாடங்கள் எல்லாம் திருந்த வேண்டும் என்ற நோக்கம் உள்ளவர்களுக்குத்தானே பயன்படும்?' என்றால் பதிலில்லை! மக்களாவது புரிந்து கொண்டால் சரி.

**பண்டைய நாகரிகங்களின் தொட்டில் என்று கருதப்படும் எகிப்து, கிரீஸ் நாடுகளுக்கு அண்மையில் சென்று வந்தார் இந்தக் கட்டுரையாசிரியர். சுற்றுலாப் பயணிகளை ஈர்ப்பதன் மூலமே பெரும் அளவில் அந்நியச் செலாவணியைப் பெற முடியும் என்பதற்கு - நாம் இந்தச் சின்னஞ்சிறிய நாட்டை முன்மாதிரியாகச் கொள்ள வேண்டும்.**

# சுற்றுலாப்

## த. கமலக்கண்ணன்

கிரீஸ் நாட்டின் மொத்தப் பரப்பளவு நம்முடைய தமிழ் நாட்டைப் போன்றது தான். மக்கள் தொகை வெறும் ஒரு கோடி. இந்த நாட்டுப் பொருளாதாரத்தின் அடிப்படை விவசாயம். எனினும் பெரும் அளவு வருமானம் சுற்றுலாப் பயணிகளின் வருகையாலேயே கிடைக்கிறது.

மூவாயிரம் ஆண்டு



* அக்ரோ பொலிஸ் கட்டடம்

களுக்கு முன்பிருந்த கிரேக்க நாகரிகத்தின் பழம் பெருமை வாய்ந்த சின்னங்களைப் பாதுகாத்து, சுற்றுலாப் பயணிகள் கண்டு களித்துப் பயன்பெறுவதற்குச் சிறந்த வசதிகளைச் செய்திருக்கிறார்கள்.

தலைநகரமான ஏதென்ஸிலிருந்து முக்கியமான ஒவ்வொரு இடத்துக்கும் சென்று வரப் பேருந்துகள் உண்டு. கால அட்டவணையில், தொலைவு, கட்டண விவரம், பயண நேரம், புறப்படும் நேரம் ஆகிய விவரங்கள் உள்ளன. இது சுற்றுலாப் பயணிகளுக்கு மிகவும் உதவிகரமாக உள்ளது.

கிரேக்க மொழி எழுத்துக்களில் சிலவற்றைத் தவிர, மற்றவை ஆங்கில எழுத்துக்கள் போன்றே இருக்கும். ஹோட்டல்காரர்கள், டாக்ஸி ஓட்டுகிறவர்கள், இன்னும் நாம் சந்திக்கும் பலருக்கும் ஆங்கிலம் ஓரளவுக்காவது தெரிந்திருக்கிறது. நாம் பேசுகிற ஆங்கிலம் ஒரு வேளை சிலருக்குப் புரியாவிட்டால், நன்கு மொழி தெரிந்த ஒருவரிடம் அழைத்துச் சென்று உதவுகிற அளவுக்கு நாகரிகமாக நடந்து கொள்கிறார்கள்.

கிரேக்கத்தின் பழம் பெரும் தொல்பொருள் ஆய்வின் முக்கிய இடங்களைத் தவிர, ஏதென்ஸைச் சுற்றிக் கடற்கரையோரத் தீவுகள் மிகவும் அழகானவை. இவற்றைச் சுற்றிப் பார்க்க



* நைல்நதி

சொகுசுப் படகுகள் உள்ளன. காலை ஏழு மணிமுதல் பன்னிரண்டு மணி நேரம் நான்கைந்து தீவுகளைச் சாவகாசமாகச் சுற்றிப் பார்த்து வரலாம். கட்டணம் எட்டாயிரம் ட்ராக்மா! (கிரேக்க நாணயம் 'ட்ராக்மா'. ஓர் அமெரிக் டாலருக்கு இருநூற்று முப்பது ட்ராக்மா.)

மதிய உணவு படகிலேயே தருகிறார்கள். தீவுகளில் பாதாம், ஆலிவ், பிஸ்தா, உலர்ந்த திராட்சை எல்லாம் விற்கிறார்கள். ஓரிடத்தில் சிறிய ஆக்டோபஸ் என்கிற கடல் பிராணியைச் சமைத்து விற்பனைப் பார்த்தேன்!

கிரீஸில் கிடைக்கும் ஆப்பிள், பேரிக்காய் போன்ற பழ வகைகள் மிகவும் இனிப்பானவை. பழக்கடைகளைப் பல இடங்களில் காணலாம்.

வெஜிடேரியன் உணவில் குறிப்பிடப்பட வேண்டிய ஒன்று கிரீஸ் ஸாலட். 'கலவாக்கி' என்கிறார்கள். தக்காளி, வெங்காயம், வெள்ளரிக்காய், குடை மிளகாய்

# பயணிகளின் சொர்க்கம்!

ஆகியவற்றின் பெரிய பெரிய துண்டுகள், ஆலிவ் காய்கள், கொஞ்சம் ஆலிவ் எண்ணெய் இவற்றின்மேல் பெரிய பச்சை வெண்ணெய்ப் பட்டையோடு தருவார்கள். இதில் உப்பு, சற்று அதிகமாக இருக்கும். இதைச் சாப் பிட்டாலே மதிய உணவுக்குச் சமமாக இருக்கும். விதம் விதமான ரொட்டி வகை களை அங்கே சாப்பிடலாம்.

இன்னும் ஒரு பிரபல மான உணவு 'யோகர்ட்'. நம் முடைய தயிருக்குத்தான் அந்தப் பெயர். பூண்டு முதலி யவற்றை வைத்துக் தயாரித்த பக்கக் கொரியலுடன் இந்த கெட்டித் தயிரைச் சாப்பிடு வது இனிமையான அனு பவம்.

ஆலிவ் காய்கள் நம் ஊர்க் களாக் காய்கள் போன்றே இருக்கும். மலைச் சரிவுகளில் ஆலிவ் தோட்டங் களே பார்வையில் படும். ஆலிவ் எண்ணெய் சமை யலுக்குப் பயன்படுவது மட்டுமின்றி, கிரீஸ் நாட்டின் முக்கிய ஏற்றுமதிப் பொரு ளாகவும் விளங்குகிறது.

நம் பக்கத்தில் மாவடு ஊறுகாய் போடுகிற மாதிரி, ஆலிவ் காயில் ஊறுகாய் போடுகிறார்கள். உப்புநீர், வினிகர் எல்லாம் சேர்த்துப் பக்குவம் செய்து வெளி நாடு களுக்கு இந்த ஊறுகாய் ஏற்று மதியும் ஆகிறது!

ஏதென்ஸ் நகரில் ஒரு சிறு மலையின் மீதுள்ள 'அக்ரோ பொலீஸ்' என வழங்கப்படும் கட்டடம் மூவாயிரம் ஆண்டுகள் பழமையானது. இது தவிர, ஏதென்ஸிலிருந்து முப்பது கி.மீ.தொலைவி லுள்ள எபிடெரஸ் என்னு மிடத்திலுள்ள மிகப் பழை மையான திறந்தவெளிக் கலையரங்கத்தையும் குறிப் பிட வேண்டும். மலைச் சரிவில் உள்ள இந்தக் கலை யரங்கத்தில் பதினாலாயிரம் பேர் அமர்ந்து கண்டு களிக்க வசதியுள்ளது. ஆண்டுக்கு ஒரு முறை இந்தக் கலையரங்கில் கிரேக்க நாடக விழா நடை பெறுகிறது.



● கலையழகுடைய தூண்கள்...



இன்னும் ஒரு விஷயத்திலும் கிரீஸ் சிறப்பிடம் பெறு கிறது. எந்த நாட்டில் தயாராகும் கப்பல்களானாலும் - குறிப்பாக வர்த்தக ரீதியிலான எண்ணெய்க் கப்பல்கள் போன்றவை, கிரீஸில் பதிவு செய்து கொள்வது என்பது கப்பல் போக்குவரத்து நிறுவனங்களிடையே உள்ள வழக் கம். பண்டைய நாகரிகத்தின் தொடர்ச்சி என்கிற முறை யிலோ என்னவோ கப்பல்களுக்கு 'கிரீஸ் ரிஜிஸ்ரேஷன்' பெறுவதை மிகவும் கௌரவமான விஷயமாகக் கருது கிறார்கள்.

ஏதென்ஸிலிருந்து எகிப்தியத் தலைநகரான கெய்ரோ வுக்குத் தொண்ணூறு நிமிட விமானப் பயணம். வானத்தி லிருந்து கீழே மத்திய தரைக் கடலைக் காண்பது மிகவும் அற்புதமான அனுபவம். சின்னச் சின்னத் தீவுகள்; வள மான நிலப்பரப்பு.

எகிப்து நாடு ஓர் அராபியக் குடியரசு. ஏறத்தாழ ஐந்து கோடி மக்கள் தொகை உடைய நாடு இது. எப்போதும் வற் றாத நைல் நதியால் பெருமை கொண்ட நாடு. மத்திய ஆப் பிரிக்காவிலிருந்து சூடான் வழியாக வரும் நைல் நதி, எகிப்தை வளப்படுத்தி விட்டுத்தான் வடக்கே நகர்ந்து, மத்திய தரைக் கடலை அடைகிறது. நைல் நதியின் கொடை என்றே எகிப்துக்குப் பெயர் உண்டு. நதியின் இரு



* இடிந்த பிரமிடுகளின் முன்னால் கட்டுரையாசிரியர் (ஒட்டகக்காரர் எடுத்த படம்)

மருங்கிலும், பதினைந்து இருபது கிலோ மீட்டர் பரப்புக்கு ஒரே பசுமைதான். மற்ற பகுதி முற்றிலும் வறண்ட பாலைவனம். மிகவும் வித்தியாசமான நில அமைப்புடையது எகிப்து.

ஐயாயிரம் ஆண்டுகளுக்கு முன்பு இருந்த எகிப்திய நைல் நதிக் கரை நாகரிகம், உலக நாகரிகங்களிலேயே மிகவும் புராதனமானது.

நைல் நதி வெள்ளம் கரைபுரண்டு ஓடிப் படியும் சத்து நிறைந்த மண்ணில் காட்டுப் பயிராகத் தானே விளைந்த நெல்லைக் கவனித்த மனிதன், ஆண்டுக்கு ஒரு முறை வீட்டுப் பயிராக விளைவித்தான் என்று சில வரலாற்று ஆசிரியர்கள் கருதுகிறார்கள்.

ஆற்றோரங்களில்



* பழைமையான திறந்த வெளிக் கலையரங்கம்.

அடர்த்தியாக விளையும் கோரை போன்ற ஒரு வகைச் செடியிலிருந்து, 'பபைரஸ்' என்கிற எழுதும் தாளைப் பண்டைய எகிப்தியர் பயன்படுத்தினர் என்பது 'காகிதத்தின் வரலாறு'. இன்றைக்கும் அந்தப் 'பபைரஸ்' விளைகிறது. அதிலிருந்து எழுதும் தாளை உருவாக்கி விற்பது மிக நல்ல வருமானம் தருகிற குடிசைத் தொழிலாக வளர்ந்துள்ளது. 'பபைரஸ்'தாள் செய்யும் முறையைக் கெய்ரோவில் பார்த்தேன். பபைரஸ் தாளில் பண்டைக் கால மன்னர்கள், அரசியர், மக்களின் அன்றாட வாழ்க்கை இவற்றை நினைவு கூரும் காட்சிகளை வண்ணங்கள் தீட்டி வரைந்து சுற்றுலாப் பயணிகளைக் கவர்ந்திழுக்கிறார்கள். விலைதான் அசத்தி விடும். சமயங்களில் நம்மூர் 'மூர்மார்க்கெட்' சமாசாரங்கள் மாதிரி ஏமாற்றுகிறவர்களும் உண்டு.

மிகவும் தொன்மையான காலங்களில் பெரோக்களாலும், பின்னர் கிரேக்கர்களாலும் ரோமர்களாலும் ஆளப்பட்டதற்கான சின்னங்கள் எகிப்திலுள்ள குறிப்பிட்ட இடங்களிலும் அருங்காட்சியகங்களிலும் காணப்படுகின்றன. புராதனச் சின்னங்களை மிகுந்த அக்கறையோடு பாதுகாப்பதில் இப்போதைய எகிப்தியர்கள் திறமையானவர்கள். அரசு வெளியிடும் நோட்டுக்களில் கூட பெரோ மன்னர்களின் உருவங்களை அச்சிட்டுப் பழைமையைக் கௌரவிக்கிறார்கள்.

முன்பு எகிப்தின் புகழ் பெற்ற 'மம்மி'கள் சில வெளிநாடுகளுக்கும் கொண்டு போக நேர்ந்து விட்டது. அமெரிக்க டிவெடெல்பியா மியூசியத்தில் கூட ஓர் எகிப்திய 'மம்மி'யைப் பார்த்தது நினைவுக்கு வந்தது.

மனித, விலங்குகளின் உட்புறக் குடல் போன்ற அழுகும் பொருள்களை அப்புறப்படுத்திப் புறத்தோலை அப்படியே நீண்ட காலம் பாதுகாத்து வைப்பது என்பது புரிந்து கொள்ள முடியாத எகிப்தியக் கலை!. இதைத்தான் 'மம்மி' என்று சொல்கிறார்கள்.

கெய்ரோ அருங்காட்சியகம் மிகவும் அற்புதமானது. நாய், குரங்கு என்று மனிதனுக்கு உதவிய விலங்குகளைக் கூட 'மம்மி' யாகச் செய்து வைத்திருக்கிறார்கள். பல ஆயிரம் ஆண்டுகளுக்கு முன் வாழ்ந்த மனிதர்களை அப்படியே தோற்றம் கெடாமல் பாதுகாத்து வைத்திருக்கிறார்கள்.

பிரமிட் உலக அதிசயங்கள் ஏழில் ஒன்றாகக் கருதப்படுகிறது என்பது அனைவரும் அறிந்த செய்தி.

கெய்ரோவுக்கு அருகில் உள்ள மிகப் பெரிய பிரமிட் ஜியாய்ஸ் பிரமிட் என்பார்கள். இது நைல் நதிக்கு மேற்கே இருக்கிறது. கெய்ரோவிலிருந்து பார்க்கும் போதே தெரிகிறது. அத்தனை உயரம். 400 அடி. பிரமிடுகள் எல்லாமே சுமார் 4000 வருடங்களுக்கு முந்தையது.

ஃபெரோ மன்னர்கள் தாங்கள் இறப்பதற்கு முன் தங்கள் உடலை அங்கே வைப்பதற்குச் சொல்லிவிடுவார்கள். மேல் உலகிற்குச் செல்லும்போது தேவையான பொருட்களையும் கூடவே அவர்களோடு வைத்து சமாதி போல் கட்டுவதுதான் பிரமிட். உடலைப் பதப்படுத்தித் தான் உள்ளே வைப்பார்கள்.

ஸ்பிங்க்ஸ் - அதாவது பெண்ணின் முகமும் சிங்கத்தின் உடலும் கொண்டவை - பிரமிட்களைக் காக்கும் காவல் தெய்வமாகக் கருதப்படுகின்றன.

தற்போது ஆட்சிபுரியும் அராபியர்களுக்கு முன்னால் பிரஞ்சுக்காரர்களும், சுதந்திரம் அடைவதற்கு முன்னால் ஆங்கிலேயர்களும் எகிப்தை ஆண்டிருக்கிறார்கள். இன்னும், கெய்ரோவில் பிரஞ்சும் ஆங்கிலமும் பலருக்குத்

தெரிகிறது. தேசிய மொழியாக அரபு உள்ளது.

இங்கு பெண்கள் மேலை நாட்டுப் பாணியில் உடையணிந்து பணியாற்றுகிறார்கள். முகத்தை மூடும் புர்க்காவுடன் ஏதோ ஒன்றிரண்டு பெண்களையே காண முடிகிறது. ஆனால் பெண்களின் உடையில் அலங்காரமான பூக்கள், விதம் விதமான டிசைன்கள் எதையும் பார்க்க முடியாது. நல்ல நீலம், மஞ்சள், சிவப்பு, ஊதா என்று முழுமையான வண்ணத்துணிகளில் தைக்கப்பட்ட ஆடைகளையே பார்க்கலாம்.

குழந்தைகளுக்கான ஆடைகளில் மட்டும் விதம் விதமான கிரேக்க, எகிப்திய ஓவியங்களின் டிசைன்கள் போட்டு விற்கிறார்கள். இங்கேயுள்ள மாதிரி ''ஐ லவ் யூ'' சமாசாரங்கள் எல்லாம்



* அபுஸிம்பல் நுழைவாயில் சிலைகள் (அறுபதடி உயரம்!)

கிடையாது. முற்றிலும் கலையுணர்வுடன் கூடிய இந்த ஆடைகள் ஏற்றுமதி நோக்கிலும் சிறப்பானவை.

எகிப்து நாட்டின் தென்பகுதி சற்று வித்தியாசமானது. பழங்கால எகிப்திய மக்களின் சாயல், நாகரிகங்களை ஓரளவு இங்கு உணர முடிகிறது.

ஒரு சுவாரஸ்யமான தகவல். நான் எகிப்தில் சந்தித்த பலர் அமிதாப்பச்சனைப் பற்றிப் பெருமையாகப் பேசுகிறார்கள். அவரைப் பாரதத்தின் அரசு சார்பற்ற தூதுவரென்றே கருதலாம் போலிருக்கிறது.

**எ**கிப்தில் பெரிய தொழிற்சாலைகள் இல்லை. அங்குள்ள கார்கள் எல்லாம் பிரஞ்சு, இத்தாலி, ஜெர்மன் நாடுகளிலிருந்து வந்தவைதாம். கரும்பு, பருத்தி, கோதுமை தவிர பழவகைகள் நிறைய விளைகின்றன. எகிப்து நாட்டின் உயர்தரப் பருத்தி பண்டைய பெருமையுடையது. உலகப் புகழ் பெற்றது.

உணவு வகைகளில் குறிப்பிட வேண்டியது ரொட்டி வகைகள். மரத்திலேயே பழுத்து இறக்கிய பேரீச்சம் பழங்களின் ருசியே அலாதியானது.

**கெ**ய்ரோவிலிருந்து 450 மைல் தள்ளியுள்ள லக்சார், கார்வக் என்று அருகருகேயுள்ள இரு நகரங்கள் அவசியம் காண வேண்டியவை. அங்குள்ள நூற்றுக் கணக்கான பிரம்மாண்டமான தூண்கள் பிரமிக்க வைப்பவை; மூவாயிரம் ஆண்டுகளுக்கு முன்பு பெரோக்களால் கட்டப்பட்டவை. 120 அடி உயரம் பத்து அடி குறுக்களவுள்ள அந்தத் தூண்களில் பழைய காலத்தைப் பற்றிய பல தகவல்களை அறிந்து கொள்ள முடிகிறது.

பாலைவனம் வழியே நூற்றறுபது மைல்களுக்கு அப்பாலுள்ள ராட்சச அபுஸிம்பல் சிலைகள், மூவாயிரம் ஆண்டுகளுக்கு முன் கட்டப்பட்ட குகைக் கோவில் ஆகியவையும் பிரமிக்க வைப்பவை.

'ஹிரோக்லிபிக்ஸ்' என்பது நாலாயிரம் ஆண்டுகளுக்கு முந்தைய எகிப்தியர்கள் கையாண்ட சித்திர எழுத்துக்கள். 'பிக்டோ கிராப்' என்பார்கள். ஒவ்வொரு எழுத்துமே சித்திரமாக இருக்கும். நீண்ட காலம் ஆராய்ச்சியாளர்களுக்கு இதன் மகத்துவம் புரிந்திருக்கவில்லை. ஷாம்புயான் என்கிற ஆராய்ச்சியாளர்தான், இந்தச் சித்திர எழுத்து மர்மத்தை விடுவித்தார்.

ஷாம்புயான் கண்டறிந்த தகவல்களின் அடிப்படையில்தான் மம்மிகளின் மீதுள்ள சித்திர எழுத்துக்களை வைத்து இன்ன அரசனின் உடல், எந்த ஆண்டு போன்ற விவரங்களையும், கோவில்களின் வரலாற்றையும் கூட அறிய முடிந்திருக்கிறது.

**நை**ல் நதியின் ஓரமாகவே அமைக்கப்பட்டுள்ள சாலை, கடற்கரைச் சாலையைப் போலுள்ளது. விதம் விதமான சொகுசுக் கப்பல்களை நைல் நதியில் காணலாம். ஆற்றோர நெடுஞ்சாலை வழியாகவே 200 மைல் தொலைவில் உள்ள அஸ்வானுக்கு டாக்ஸியில் மூன்று மணி நேரத்தில் வந்து விடலாம். அஸ்வான் அணை உலகப் புகழ் பெற்ற ஒன்று. இதில் தேக்கி வைக்கப்பட்டுள்ள நீர்ப்பரப்பு நூற்று எண்பது மைலுக்குமேல் பரந்து கிடக்கிறது. மனிதன் உருவாக்கியுள்ள நீர் நிலைகளில் உலகிலேயே இரண்டாவது பெரியது என்கிற சிறப்பு உடையது அஸ்வான்.

கெய்ரோவிலிருந்து அஸ்வான் வரை அறுநூறு மைல்கள் தூரம் நைல் நதியிலேயே தெற்கு நோக்கிப் படகுகளில் வரும் மேலை நாட்டுப் பயணிகள் உண்டு. அமெரிக்க ஐரோப்பியச் சுற்றுலாப் பயணிகள் இந்த இரண்டு மூன்று வாரப் படகுப் பயணத்தை அனுபவித்து மகிழ்கிறார்கள். இதே போல் நம் நாட்டிலும் அலஹாபாத் முதல் கல்கத்தா வரை கங்கை நதியில் சுற்றுலாவுக்கான சொகுசுப் படகுகளை விட முடியும்! எகிப்து கிரீஸ் போலவே நம்மிடமும் ஏராளமான புராதனச் சின்னங்கள். இன்னும் எத்தனையோ சிறப்புகள். அயல் நாட்டவரை ஈர்க்கும் கலையை மட்டும்தான் நாம் இன்னும் பயிலவில்லை!

# அமரர் கல்கி நினைவுச் சிறுகதைப் போட்டி-1994

**எழுத்தாளர்களே, தயாராகுங்கள்!**

முதல் பரிசு ரூ.1,500

இரண்டாவது பரிசு ரூ.1,000

மூன்றாவது பரிசு (இரு கதைகளுக்குத் தலா ரூ.500 வீதம்) ரூ.1,000

ஆக மொத்தம் ரூ.3,500 பரிசுகளாக வழங்கப் பெறும்.

தவிர, பிரசுரத்துக்கு ஏற்கப்படும் ஒவ்வொரு கதையும் ரூ. 125 சன்மானம் பெறும். அறிமுக எழுத்தாளர்களுக்குப் போனஸ் உண்டு.



- கதைகள் சொந்தக் கற்பனை என்றும், இதற்கு முன் எந்தப் பத்திரிகையிலும் பிரசுரமானதில்லை என்றும் உறுதிமொழி தேவை.
- அறிமுக எழுத்தாளர் எனில் இதற்கு முன் எந்தப் பத்திரிகையிலும் எழுதியதில்லை என்றும் போட்டி முடிவு அறிவிக்கப்படும் வரை எழுத மாட்டேன் என்றும் உறுதிமொழி தர வேண்டும்.
- நடுவர் குழு கதைகளைப் பரிசீலித்துப் பரிசுக்குரிய கதைகளைத் தேர்ந்தெடுக்கும்.

கதைகளை அனுப்ப வேண்டிய கடைசித் தேதி: ஜூன் 15.

- உறையின் மேல் 'அமரர் கல்கி நினைவுச் சிறுகதைப் போட்டி' என்று குறிப்பிடுதல் அவசியம்.
- பிரசுரத்துக்கு ஏற்கப்படாத கதைகளைத் திரும்பப் பெற, போதிய அளவு தபால்தலை ஒட்டிய சுயவிலாசமிட்ட உறையைக் கதையுடன் கூடவே அனுப்புதல் வேண்டும். பின்னால் தனியே அனுப்பிப் பயனில்லை.
- கதைகள் கல்கியில் நாலு பக்கங்களுக்கு மேற்படாதிருப்பது நலம். ஒருவர் எத்தனை கதைகள் வேண்டுமானாலும் அனுப்பலாம்.
- எவ்விதக் கடிதப் போக்குவரத்தும் கிடையாது.
- சந்தேகம் எழும் விஷயங்களில் கல்கி ஆசிரியர் தீர்ப்பே முடிவானது.
- போட்டி முடிவும் முதல் பரிசுக் கதையும் ஆகஸ்டு 7 ஆண்டு மலரில் பிரசுரமாகும்.
- எழுத்தாளர்கள் பெருமளவில் உற்சாகத்துடன் கலந்து கொண்டு ஒத்துழைக்க வேண்டுகிறோம்.

- ஆசிரியர், கல்கி, 47, ஜவாஹர்லால் நேரு சாலை,
ஈக்காடுதாங்கல், சென்னை - 600 097.

# கல்லூரிக்கு வெளியிலும்

# கல்வி



* சுற்றுலாக் குழுவினர்...

### கல்விச் சுற்றுலாச் சென்ற மாணவ - மாணவியரின் அனுபவம் இது...

**க**ல்லூரிகளில் - மற்ற பாடங்களை விடத் தாவரவியல், விலங்கியல், நிலவியல் என்று படிக்க வாய்ப்புக் கிடைக்கிறவர்கள் கூடுதலான அதிர்ஷ்டசாலிகள். பாட வகுப்புகளின் ஒரு பகுதியாக இவர்கள் கல்விச் சுற்றுலாவுக்கும் சென்று வர முடிகிறது. பாடச் சோதனைகளுக்கு வேண்டிய மாதிரி உயிர்கள் (SPECIMENS), அரிதான தாவரங்கள், ஃபாஸில் கற்கள் என்று சேகரிப்பதுதான் நோக்கம் என்றாலும், விதம் விதமான மக்களையும் வித்தியாசமான சூழ்நிலைகளையும் காணும் அற்புதமான அனுபவம் இவர்களுக்குக் கூடுதல் அறிவு பெற உதவுகிறது.

விருத்தாசலம் கொளஞ்சியப்பர் கலைக் கல்லூரியின் விலங்கியல் துறை மாணவர்கள் அண்மையில் இப்படி ஒரு கல்விச் சுற்றுலாவுக்குப் போய் வந்தார்கள். ஐந்து பெண்கள் உட்பட முப்பத்தேழு மாணவர்கள்!

அவர்களுடைய அனுபவங்கள் சுற்றுலாக் கண்ணோட்டத்திலும் சுவையானவை. மாணவி சத்யா உணர்ச்சி வசப்பட்டுச் சொல்கிற கவிதை வரிகள்;

'குமரி முனையில் போட்ட குதிரை
மறக்க முடியலை'
கோவளம் வரை தொடர்ந்த போதும்
திருத்த முடியலை!

ஒவ்வொரு மாணவரின் அனுபவமும் இதே போன்றதுதான். சிலர் வாய்விட்டுச்

* அன்புக்கு ஏது அயல்நாட்டுத் தடை ?



சொல்கிறார்கள். சிலரின் வியப்பு விழிகளே பேசுகின்றன.

''கன்னியாகுமரிக் கடல் அலை வேகத்தில் எங்களால் கடல் சாமந்தியை எடுக்க முடியவில்லை, ஆனால் 'ஹெர்மிட் க்ராப்' என்கிற துறவி நண்டு கிடைத்தது..'' என்கிற போது ஒரு பெருமிதம்.

கோவளம், திருவனந்தபுரம் போன்ற கேரளப் பகுமைகளின் கவர்ச்சி. இராஜேந்திரனை ஏங்க வைத்து விட்டது.

ஒரு மீட்டர் அகல இறக்கைகளுடன் திருவனந்தபுரம் அருங்காட்சியக வளாகத்து மரங்களில் ஒட்டிக் கொண்டிருக்கும் நூற்றுக் கணக்கான பழம்தின்னி வௌவால்கள் எல்லோருக்குமே பிரமிப்பை ஊட்டியிருக்கின்றன. ''எங்கெங்கோ போய் இரை எடுத்து விட்டுக் கூடு அடைய வரும் இவற்றை நுணுகிக் கவனிக்க முடிந்தது நல்ல அனுபவம்'' என்கிறார் ஒரு மாணவர்.

அதேபோல் தெருப்புக்கோழி, சிங்கவால் குரங்குகள், சிகரெட் கேட்கும் அளவுக்குப் பார்வையாளர்களோடு பழகி விட்ட தென் ஆப்பிரிக்கக் காப்பூச்சின்

● தேக்கடிப் படகில்...



குரங்கு (CAPUCHIN) எல்லாமே இவர்களைத் திணறப் பண்ணியவை. குடிக்க வைத்திருக்கும் தண்ணீரையெல்லாம் பார்வையாளர்கள் மீது வாரியடிக்குமாம் இந்தக் காப்பூச்சின்!

''அந்தக் கூண்டில் ஒரு 'லவ் பேர்ட்' செத்துக் கிடக்க, இன்னொன்று அழுது விடுகிற மாதிரி கிறீச்சிட்டுக் கொண்டிருந்தது'' என்கிற சோகத்தையும் ஒரு மாணவர் மற்றவர்களிடம் பகிர்ந்து கொண்டார்.

''நூற்றுக்கு நூறு படித்துச் சிறந்துள்ள கேரளத்தில் பெண்கள் நிறையவே மதிக்கப் படுகிறார்கள். மிகவும் பண்பாட்டோடு நடந்து கொள்கிறார்கள்'' என்று கணித்து வியக்கிறவர் சத்தியா. மற்ற மாணவியரும் ''ஆமாம்...ஆமாம்!''

''பெரியார் அணைப் பகுதியில் சிறுசிறு குன்றுகளாய்ச் சுற்றிலும் நீர் சூழத் தேக்கடியின் அழகு. படகில் போய்ச் சுற்றிப் பார்க்கும்போது தண்ணீர் பருக வருகிற யானைகள்...அப்பப்பா..'' என்று வியக்கிறார் இன்னொரு மாணவர்.

தேக்கடியில் வெளிநாட்டுக்காரர்கள் நான்கு நாள் ஐந்து நாள் என்று தங்கி இயற்கை அழகை அனுபவிக்கிறார்கள். மாணவர்கள் கூட்டத்தை யானைகளை விடச் சுவாரஸ்யமாகக் கவனித்தவர்கள் டென்மார்க், ஆஸ்திரேலிய நாடுகளிலிருந்து வந்த சுற்றுலாப் பயணிகள்.

மைக்கல்ஸன், ஸோனியா மிக்சின் இருவரும் இவர்களைப் படம் எடுக்க, அவர்களை மாணவர்கள் படம் எடுக்க, பரஸ்பரம் அன்புப் பரிமாற்றம்!

அதேபோல், பாண்டியிலிருந்து வந்த

● அயல் நாட்டுப் பயணிகளோடு மாணவர்கள்...



வேறு சில வெளிநாட்டுப் பயணிகளோடு பாடி ஆடுகிற அனுபவமும் பெற்றவர்கள் அருண், கருணாமூர்த்தி, குமாரவேல்... ''உலகம் எவ்வளவு சின்னதாகி விட்டது?'' என்று ஒரு வியப்புக் குரல்.

முத்தாய்ப்பாக ஒரு மாணவர் சொன்னது... ''எங்கள் பயணம் குமரிக் கடலோர இரைச்சலில் தொடங்கியது. தேக்கடியின் அமைதியில் மனம் பறிகொடுத்தோம். வண்ண மலர்த் தோட்டமான கொடைக்கானலின் இதமான குளிரில் புதுமையான ஓர் உலகமே தெரிந்தது..''

கூட்டுக்குள் உள்ள வரைதான் அச்சமும், நம்பிக்கைத் தொய்வும். இப்படிப் புற உலகத்தைப் போய் அறிமுகம் செய்து கொண்டாலே போதும், மன ஆரோக்கியத்துக்கு வேறென்ன பாடங்கள் வேண்டும்!

படங்கள்: ஆர். முத்துக்குமாரன்



✱ குழந்தைகளையும் குதூகலப்படுத்தும்...

# தகதகக்கும் தலகோணா!

ஒரு ஜாவி

ரிப்போர்ட் :

"இந்த முறை சுற்றுலாச் சிறப்பிதழில், திருப்பதிக்குப் பக்கத்தில் இருந்தும் இதுவரை பிரபலமாகாத தலகோணா அருவியைப் பற்றி எழுத வேண்டும்..." என்று ஆசிரியர் சொன்னதும்...

சப்தகிரியைப் பிடித்துத் தெலுங்கு தேசத்திற்குள் நுழைந்தோம். திருப்பதி பஸ் ஸ்டாண்டில் தெலுங்குத் தமிழில் விசாரித்த போது, ஒரு நாளைக்கு இரண்டு மூன்று முறை தலகோணாவுக்கே பஸ்கள் சென்று வருவது புரிய வந்தது.

மறுநாள் காலை ஆறு மணிக்கெல்லாம் முதல் பஸ்ஸைப் பிடித்தோம். பஸ் காடு, மேடுகளைக் கடந்து போய்க் கொண்டே இருந்தது. 'தலகோணா' வந்துடுச்சா?' என்று தொடர்ந்து கேட்டு வந்த நமது நச்சரிப்பைத் தாங்காமல், பக்கத்திலிருந்த ஆந்திரத் தோழர், "அரவம் வாடு" என்று ஏதோ முணுமுணுத்து இடத்தையே மாற்றிக் கொண்டார். பொக்கராவ்பெட் என்ற இடத்தை பஸ் அடைந்தபோது ஏகப்பட்ட கூட்டம். பஸ் உள்ளே இடம் கொள்ளாமல் போகவே, பஸ்ஸின் மேல்கூரையிலும் ஜனங்கள் ஏறிக் கொண்டார்கள். அழகான ஆந்திரக் கிராமங்களைக் கடந்து பஸ் கடைசியாக ஓர் இடத்தில் நின்றது.

"தலகோணா... தலகோணா" என்றார் கண்டக்டர். உற்சாகமானோம்.

பஸ்ஸை விட்டு இறங்கியவுடன் பார்த்தால் அழகான சித்தேஸ்வரர் கோயில் அருகில், சில பெட்டிக் கடைகள். "இங்கே அருவி எங்கே?" என்று விசாரித்த போது, "மூணுகிலோ மீட்டர் ஸ்வாமி" என்றார் பெட்டிக் கடைப் பெண்மணி.

"பஸ், ஜீப் ஏதாவது?"

"ஊஹூம். அப்படியே பொடி நடை

✱ தகதகக்கும் தலகோணா...





✱ ஜில்லென்ற குளியல்....

யாய்ப் போக வேண்டியதுதான்.''

அந்த மண் சாலையின் துவக்கத்திலேயே 'வெங்கடேஸ்வரா வனவிலங்கு சரணாலயம்' என்று போர்டு. கார்கள், லாரிகள் செல்லாமல் இருக்க தடுப்புக் கட்டை (மந்திரிகள் மற்றும் அதிகாரிகள் வண்டிகள் விதிவிலக்கு என்று சொல்லவும் வேண்டுமா?) கஷ்டப்பட்டு வரும் சுற்றுலாப் பயணிகளுக்கு ஏகப்பட்ட அட்வைஸ்கள். அதில் ஒன்று : 'காவியாக உடைகள் உடுத்திக் கொண்டு செல்ல வேண்டாம்'.

அந்த மண் பாதை வளைந்து வளைந்து சென்று கொண்டிருந்தது. சற்றே கழுத்தை உயர்த்தினால் இரண்டு பக்கமும் பிரமிக்க வைக்கும் மலைகள். உயரமாய் வளர்ந்திருக்கும் பெயர் தெரிந்த, தெரியாத மரங்கள்,

செடிகள், கொடிகள். வினோதமாகக் குரல் கொடுக்கும் பறவை. அதைப் புரிந்து கொண்டு குரல் கொடுக்கும் அதன் உள்ளம் கவர்ந்த மற்றொன்று.

சாலையை ஒட்டிய பள்ளத்தில், பாறைத் தடைகளைக் கடந்து சரசரவென ஓடிவரும் ஓடை. மரங்களிடையே பாய்ந்து வரும் சூரிய ஒளி, ஓடைத் தண்ணீரில் உண்டாக்கும் வர்ண ஜாலங்கள். தண்ணீரைத் தழுவி வரும் ஜில் காற்று முகத்துக்கு ஒத்தடம் கொடுத்துவிட்டுப் போகிறது.

'கனக துர்க்கா... ஐ லவ் யூ' என்று பொதட்டூரைச் சேர்ந்த சேகர், மிகக் கவனமாக, மரத்தில் செதுக்கியிருக்கிறார். இவரைப் போன்று ஏகப்பட்ட பேர் பாறைகளிலும், மரங்களிலும் தங்களது கைவண்ணத்தைக் காண்பித்திருக்கிறார்கள்.

பள்ளம், மேடுகளைக் கடந்து செல்லும் மண் பாதை, ஓரிடத்தில் செங்குத்தாக உயர்கிறது. பீர் பாட்டில் துண்டுகள் காலைப் பதம் பார்த்துவிடும் என்பதால் பாதையைப் பார்த்துப் பார்த்து நடக்கிறோம். பாதையும் குறுகி, பாறைகளின் மேல் செல்ல ஆரம்பிக்கிறது. ஒரு குறிப்பிட்ட உயரத்தை அடைந்தவுடன், 'சோ' என்ற ஓசையுடன் விழும் அருவி நம் கண்களுக்குத் தெரிகிறது. வெண் படிமப் பாறைகளான அந்த மலையின் உச்சியிலிருந்து வெள்ளியை உருக்கி விட்டாற்போல கொட்டுகிறது தண்ணீர்.

அருவியை நெருங்க நெருங்க உற்சாகக் குரல்கள் கொடுத்துக் கொண்டு ஆண்களும் பெண்களும் சிறுவர்களும் குளித்துக் கொண்டிருப்பது தெரிகிறது.

இருநூறு அடி உயரத்திலிருந்து கொட்டும் நீர், வெண் பாறைகளின் பின்னணியில் சூரிய ஒளியில் தகதகக்கிறது. பின்னர் சமதளத்தில் விழுந்து, படிப்படியாகப் பாறைகளைக் கடந்து, பள்ளத்தில் ஓடையாக ஓடுவதை நாள் முழுக்க நின்று பார்த்துக் கொண்டே இருக்கலாம்.

'தலகோணா' என்றால் தெலுங்கில் 'முகப்புப் பள்ளத்தாக்கு' என்று பொருளாம். சரியாகத் திருப்பதி மலைக்குப் பின்புறம் இந்த அருவி இருந்தாலும், பாதை இல்லாததால் சுற்றிக் கொண்டுதான் செல்ல வேண்டியிருக்கிறது. அந்தக் காலத்தில் ராஜாக்களும், ஜமீன்தார்களும் தலகோணாவுக்கு வந்து நாட்கணக்கில் டேரா போடுவார்களாம் (சகல வசதிகளோடுதான்). விஜயநகர மகாராஜாக்கள், தலகோணா வழியாகத்தான் திருப்பதி பாலாஜியைத் தரிசனம் செய்யச் செல்வார்களாம்.

அருவி நீர் காடு, மலைகளுக்கிடையில் ஓடையாக ஓடி, எட்டு கி. மீ. தொலைவில் உள்ள சித்தலகண்டி ஏரியைச் சென்றடைகிறது என்பதாலோ என்னவோ அருவிக்குச் சித்தேஸ்வர தீர்த்தம் என்ற மற்றொரு பெயரும் உண்டு.

சூற்கண்டாகச் சுவைக்கும் இந்த அருவித் தண்ணீருக்கு மருந்துவக் குணங்கள் அதிகம். அதேபோல் குளிக்கும் இடத்தில் வழுக்கலும் அதிகம். சர்வ ஜாக்கிரதையாக இருக்க வேண்டும். கொஞ்சம் அஜாக்கிரதையாக இருந்தாலும் புத்தூர் வழியாகத்தான் வீடு திரும்ப வேண்டியிருக்கும்.

அருவியை நெருங்கிய போது, காற்றுடன் அடித்துக் கொண்டு வரும் நீர்த் திவலைகள் முகத்தில் பட, உடல் சிலிர்க்கிறது.

இந்த அருவி பற்றித் தெரியாதவர்கள் ஆந்திராவிலே கூட இன்னமும் இருக்கிறார்கள். சமீப காலமாகத்தான் ஒன்றிரண்டு படங்களின் படப்பிடிப்பு இங்கே நடந்திருக்கிறது.

டிசம்பரிலிருந்து மார்ச் வரை தாராளமாகக் கொட்டும் அருவி, மீதி மாதங்களில் ரேஷனாகத்தான் சொட்டுகிறது. எனினும் ஒரு நடை போய்வர எப்போதும் சுகம் தான்!

- ப்ரியன்

வண்ணப்படங்கள் : கோபிநாத்



**சர்ச்சிலைக் கோபப்படுத்திய போட்டோகிராபர்!**

கனடாவின் யூசுப் கார்ஷ் சாமர்த்தியமாக வித்தியாசமான புகைப்படங்கள் எடுப்பதில் உலகப் பிரசித்தி பெற்றவர். ஒரு முறை வின்ஸ்டன் சர்ச்சில் கனடாவில் ஒரு தனியார் நிகழ்ச்சியில் கலந்து கொண்ட போது அவர் படங்கள் எடுக்கத் துவங்கியதும் சர்ச்சில் ஒரு சுருட்டைப் பற்ற வைத்தபடி, "இதற்கு நீங்கள் முன் அனுமதி பெற்றிருக்க வேண்டும்" என்றார். கார்ஷ் பதில் பேசாமல் ஒரு சாம்பல் கிண்ணத்துடன் அவரை நெருங்கினார். சுருட்டை அதில் தட்டிய சர்ச்சிலின் கோபம் அதிகரித்தது. புகைப்படக்காரர் திடீரென்று சுருட்டை அவர் வாயிலிருந்து இழுத்ததும் சர்ச்சில் ரௌத்ர மூர்த்தியானார். உடனே கார்ஷ் அத்தோற்றத்தைத் தம் காமிராவுக்குள் படம் பிடித்துக் கொண்டார். இரண்டாம் உலக யுத்த காலத்தில் அரசு விளம்பரங்களில் இரும்பு போன்ற உறுதி படைத்த கடுமையான போராளியாக சர்ச்சிலைச் சித்திரிக்க பிரசித்தி பெற்ற அப்புகைப்படமே பயன்படுத்தப்பட்டது.

- அ. ஷண்முகசுந்தரம்

அமரர் கல்கி

தியாக பூமி

## 52. ஸ்ரீதரன் சபதம்

வக்கீல் ஆபத்சகாயமய்யருக்கு உண்மையாகவே உமாவின் மீது சகோதர விசுவாசம் ஏற்பட்டிருந்தது. அவளுடைய வாழ்க்கையில் ஏதோ மர்மம் இருக்கிறது என்று அவர் ஊகித்திருந்தார். ரொம்பவும் கஷ்டப்பட்டவளாயிருக்க வேண்டும், பிறகு திடீரென்று நல்ல காலம் பிறந்து, பணக்காரியாகியிருக்க வேண்டும் என்றும் நினைத்தார். இந்தச் செல்வம் அவளுக்கு எப்படிக் கிடைத்தது என்பதைப் பற்றி அவருக்குச் சந்தேகங்கள் தோன்றியதுண்டு. ஏதாவது 'அவ்யாகிருதமான' வழியில் கிடைத்திருக்குமோ என்று கூட அவர் சில சமயம் எண்ணமிட்டார். ஆனாலும் அவளுடைய உத்தமமான குணத்தை உத்தேசித்து, அவளிடம் எந்த விதமான குற்றம் குறையிருந்தாலும் மன்னித்து விடத் தயாராயிருந்தார்.

இந்த மாதிரி ஒரு ஸ்திரீ, உற்றார் உறவினர் யாருமில்லாதவள், பணக்காரி என்பதைத் தவிர மற்றபடி நிராதரவான நிலைமையில் இருப்பவள் - அவளுக்கு ஒத்தாசை செய்யும் படியான சந்தர்ப்பம் தமக்கு ஏற்பட்டது பற்றி ஆபத்சகாயமய்யருக்கு ரொம்பவும் பெருமையாயிருந்தது. கோர்ட்டிலும் அட்வகேட் சங்கத்திலும் அவருடைய நண்பர்கள் சாதாரணமாய் அவரை 'மிஸ்டர் ஆபத்!' என்று கூப்பிட்டுப் பரிகாசம் செய்வது வழக்கம். அவரிடம் அகப்பட்டுக் கொள்ளும் 'கட்சிக்காரர்களுக் கெல்லாம் ஆபத்துதான்' என்றும் அவர்கள் சொல்வார்கள். ஆனால் ஸ்ரீமதி உமா ராணியின் விஷயத்தில் தம்முடைய பெயரின் பின் பகுதியை உண்மையாக்கிக் கொள்ள வேண்டுமென்று ஆபத்சகாயமய்யர் தீர்மானித்திருந்தார்.

ஆகவே, இப்போது உமாராணி தம்மிடம் பெரிதும் நம்பிக்கை வைத்து ஒரு முக்கியமான வேலையைக் கொடுக்கவே அதில் தீவிரமாக ஈடுபட்டார். அவருடைய முயற்சி கடைசியில் பயன் அளித்தது. ஸ்ரீதரன் கையாண்டதாகச் சந்தேகிக்கப்பட்ட தொகையைப் பெற்றுக் கொண்டு கேஅண்டு ஓ பாங்கிக்காரர்கள் வழக்கை வாபஸ் வாங்கிக் கொள்ளச் சம்மதித்தார்கள். சமீபத்தில் நடந்த ஒரு பாங்கி மோசடி வழக்கில் ஏராளமான பணச் செலவுக்குப் பின்னர் குற்றம் ருசுவாகாமல் கைதி விடுதலையடைந்திருந்த படியால், பாங்கிக்காரர்கள் இதற்கு எளிதில் இணங்கினர். போலீஸ் இலாகாவினர் முதலில் இதை ஆட்சேபித்த போதிலும், கடைசியில் குற்றம் ருசுவாவது கஷ்டம் என்று கண்டு அவர்களும் சம்மதித்து விட்டார்கள். எனவே, ஸ்ரீதரனுடைய குற்றம் மோசடி இல்லையென்றும், கவனக் குறைவுதான் என்றும் தீர்மானிக்கப்பட்டு, ஸ்ரீதரன் சில தினங்களில் விடுதலையடைந்தான்.

சிறையில் ரிமாண்டு கைதியாக இருந்த ஸ்ரீதரனை வக்கீல் ஆபத்சகாயமய்யர் பார்த்துப் பேசியபோது, உமா கூறிய நிபந்தனைகளை அவனிடம் தெரிவித்தார். ஸ்ரீதரனும் அவற்றுக்கு உடனே இணங்கினான். ஆனால் நிபந்தனைகளை நிறைவேற்றும் உத்தேசம் அவனுக்குக் கிடையவே கிடையாது. பணங் கொடுப்பது யார் என்று கேட்க வேண்டிய அவசியம் இருப்பதாகவே அவன் நினைக்கவில்லை. சாவித்திரிதான் தன்னை விடுதலை செய்ய முயற்சி செய்கிறாள் என்பதைப் பற்றி அவனுக்குச் சந்தேகமே இல்லை. வேறு யார் தன்னிடம் இவ்வளவு அக்கறை காட்டிக் கேஸிலிருந்து தப்புவிக்க முயற்சி எடுக்கப் போகிறார்கள்?

ஆனால், தான் விடுதலையானதும் சென்னையை விட்டுப் போக வேண்டும் என்ற நிபந்தனை அவன் மனத்தைப் புண்படுத்திக் கோப மூட்டியது. இதற்கு முக்கிய காரணம், சாவித்திரியை அன்று பார்த்ததிலிருந்து அவள் பேரில் அவனுக்கு ஏற்பட்டிருந்த பாசமேயாகும். ஏற்கெனவே, சாவித்திரியின் விஷயத்தில் தான் நடந்து கொண்ட விதத்தைக் குறித்து அவன் பல தடவைகளில் பச்சாத்தாபப் பட்டிருக்கிறான். அவளைப் பூரண கர்ப்பவதியாயிருக்கையில் வழிப்போக்கர்களுடன் கூட்டி அனுப்பி, அப்புறம் தகவல் ஒன்றுமே தெரியாமல் போன பிறகு, தாயார் தகப்பனார்களுடன் அவன் அதைக் குறித்துச் சில சமயம் சண்டை பிடித்ததும் உண்டு. கொஞ்ச நாளைக்குப் பிறகு, ராஜா



ராமய்யர் மனநோயும் உடல் நோயும் அதிகமாகிக் காலஞ் சென்றார். பிறகு, தாயாருக்கும் பிள்ளைக்கும் ஒத்துக் கொள்ளவேயில்லை. தங்கம்மாள் பிள்ளையைச் சீர்திருத்த எவ்வளவோ முயற்சி செய்தும் பயனில்லாமல் கடைசியில் மனம் வெறுத்து ஹைதராபாத்தில் இருந்த தன் பெண்ணுடன் வசிக்கப் போய்விட்டாள். அம்மாவுடன் ஸ்ரீதரன் சண்டை போட்ட போதெல்லாம், ''படுபாவி! ஒன்றுந் தெரியாத சாதுப் பெண்ணை அநியாயமாய்க் கொன்றுவிட்டாயே?'' என்று திட்டுவது வழக்கம். இம்மாதிரி, சாவித்திரியைப் பிரிந்த பிறகு அவள் விஷயத்தில் அவனுடைய மனம் மாறியதோடு கூட, ''ஐயோ! இந்த மாதிரி செய்து விட்டோமே!'' என்று அடிக்கடி அவன் வருத்தப்பட்டதும் உண்டு. மறுபடியும் ஒரு தடவை சாவித்திரி தன்னைத் தேடி வந்தாளானால், முன்னால் செய்ததற்கெல்லாம் பிராயச்சித்தமாக அவளை ரொம்ப நன்றாக நடத்த வேண்டுமென்று அவன் தீர்மானித்திருந்தான்.

ஆனால் இதெல்லாம் மிகப் பழைய கதை. அவளை மறுபடியும் சந்திப்போம் என்ற நம்பிக்கையை அவன் இழந்து வெகு நாளாயிற்று. அப்புறம் அவனுடைய வாழ்க்கை எப்படி எப்படியோ சீர்குலைந்து, கடைசியில் பாங்கி மோசடி வழக்கில் சிறைப்படும் நிலைமையும் ஏற்பட்டது.

இப்படிப்பட்ட சந்தர்ப்பத்தில் அன்று டெபுடி கமிஷனர் ஆபீஸில் உமாராணியை அவன் தற்செயலாகச் சந்தித்து, அவள்தான் சாவித்திரி என்பது தெரிய வந்ததும் அவனுடைய உள்ளத்தில் ஒரு பெரிய புரட்சி உண்டாயிற்று. இந்தக் கேஸிலிருந்து மட்டும் எப்படியாவது தப்பித்துக் கொண்டால் அப்புறம் தன்னுடைய வாழ்க்கையில் ஒரு புதிய அத்தியாயம் ஆரம்பிக்கிறதென்று தீர்மானித்தான். சாவித்திரியின் புதிய நாகரிகத் தோற்றத்தை நினைக்க நினைக்க அவனுக்குத் தலை கிறுகிறுவென்று சுழன்றது. ஆகா! இவளையா நாம் அவலட்சணமென்றும், பட்டிக்காடு என்றும் அலட்சியம் செய்தோம்! என்ன பிசகு! என்ன பிசகு! நம்முடைய புத்தி ஏன் அப்படிப் போயிருந்தது? - போனதெல்லாம் போகட்டும். நல்ல வேளையாக அதற்கெல்லாம் பரிகாரம் செய்ய இப்போது சந்தர்ப்பம் கிடைத்திருக்கிறது. ஆனால் இந்தக் கேஸில் மட்டும் விடுதலை பெறவேண்டும்.

சாவித்திரி இந்த நிலைமையை எப்படி அடைந்தாள், எவ்வாறு உமாராணி ஆனாள்,

## அருள்வாக்கு

**ம**னஸில் எழும்புகிற பலதரப்பட்ட ஆசைகளுக்காகத்தானே செலவெல்லாம் செய்கிறோம்? கண்டதைத் தின்னத் தோன்றுகிறது, ஸினிமா ஆசை, டிரெஸ் ஆசை என்று இவற்றுக்காகத்தானே செலவு செய்கிறோம்? இந்தச் செலவுக்கெல்லாம் நிறைய ஸம்பாத்தியம் இருந்தால்தான் முடிகிறது என்பதால்தானே எத்தனை துராசாரமான தொழிலானாலும், எந்த அநாசார தேசத்தில் வேண்டுமானாலும் போய்ப் பண்ணுவது என்று ஆகியிருக்கிறோம்? "ஐயோ, இதைத் தின்பது பாபம்; இதைப் பண்ணுவது பாபம்" என்று சாஸ்திரங்களைப் பார்த்துப் பார்த்து மனஸின் ஆசைகளையெல்லாம் குறைத்துக் கொண்டு விட்டால் இத்தனை செலவுக்கு அவசியமில்லை. உள்ளூரோடு எத்தனை எளிய வாழ்க்கை வாழலாமோ அதற்குரிய ஸம்பாத்தியம் தருகிற ஒரு தொழிலைப் பார்த்துக் கொண்டு, நிம்மதியாக இருந்து கொண்டிருக்கலாம். வேண்டாத பொழுது போக்குகள் அலைச்

இத்தனை காலமும் எங்கே என்ன செய்து கொண்டிருந்தாள் என்பதைப் பற்றி யெல்லாம் அவன் சிந்திக்காமலில்லை. ஆனால், வக்கீல் ஆபத்சகாயமய்யரைப் போலவே அவனும் எது எப்படியிருந்தாலும் மன்னித்து விடத் தயாராயிருந்தான். இவ்வளவெல்லாம் அவளைத் தான் கஷ்டத்துக்குள்ளாக்கியிருக்கும் போது, அவளுடைய காரியங்களைப் பற்றிக் கேள்வி கேட்கத் தனக்கு என்ன உரிமை இருக்கிறது? போனதெல்லாம் போகட்டும். இரண்டு தரப்பிலும் எல்லாவற்றையும் மறந்து விட்டுப் புதிய வாழ்க்கை தொடங்குவதுதான் சரி.

சிறைக்குள்ளே தன்னந் தனியாக உட்கார்ந்து, இப்படியெல்லாம் புனருத்தாரண சிந்தனையில் ஆழ்ந்திருந்தவனிடம், வக்கீல் ஆபத்சகாயமய்யர் வந்து, "உன்னிடம் ஒருவர் சிரத்தை எடுத்துக் கொண்டிருக்கிறார். பணம் செலவழித்து உன்னை விடுதலை செய்ய முயற்சி எடுக்கப் போகிறார். ஆனால் அவர் யார் என்று நீ விசாரிக்கக் கூடாது. விடுதலையானதும் சென்னையை விட்டுக் கல்கத்தாவுக்குப் போய்விட வேண்டும்" என்று சொன்னால், அவனுக்கு ஆத்திரம் உண்டாகாதா? ஆனாலும், காரியம் ஆக வேண்டியதை முன்னிட்டு, ஸ்ரீதரன் நிபந்தனைகளுக்குச் சம்மதித்தான். அதை நிறைவேற்றும் உத்தேசம் அவனுக்கு லவலேசமும் இல்லை யாகையால், விடுதலையான மறுநாளே உமாராணியின் பங்களாவைத் தேடிக் கொண்டு வந்து சேர்ந்தான்.

**உ**மா இதை எதிர்பார்க்கவேயில்லை. விடுதலையானதும் ஸ்ரீதரன் என்ன செய்வான் என்பதைப் பற்றி அவள் நினைத்திருந்ததற்கு இது முற்றும் மாறாயிருந்தது. ஒரு வேளை, அவர் விடுதலையடைந்ததும், தனக்கு ஒரு கடிதம் எழுதலாமென்றும், அதில் அவர் தான் செய்த உதவிக்காக ரொம்பவும் நன்றி செலுத்துவாரென்றும், கல்கத்தாவுக்குப் போவதற்கு முன்னர் ஒரு தடவையாவது தன்னை வந்து பார்ப்பதற்கு ஆசைப்பட்டு, அதற்கு அநுமதி கேட்கக் கூடுமென்றும் எண்ணினாள். அப்படி அவர் எழுதினால், அவரைத் தன்னை வந்து பார்த்துப் போகச் சொல்லலாமா, வேண்டாமா என்று உமா சிந்தனை செய்தாள். போனால் போகட்டும் என்று வரச் சொல்வோமே; அவர் வந்து தம்முடைய பழைய காரியங்களுக்காக ரொம்பவும் வருத்தப்பட்டாரானால், "இப்போதைக்கு நீங்கள் வேறு, நான் வேறுதான். கொஞ்சகாலம் நீங்கள் கல்கத்தாவிலேயே இருங்கள். அதற்குப் பிறகு, உங்களுடைய சுபாவம் மாறியிருக்கிறதென்று எனக்கு நிச்சயமானால், பிறகு பார்த்துக் கொள்ளலாம்" என்று பதில் சொல்லலாமா என ஒரு சமயம் நினைப்பாள். அடுத்த நிமிஷம், 'சீ! என்ன சபலம்! அந்த மனுஷரிடம் இனிமேல் இந்த ஜன்மத்தில் சேர்ந்து வாழ முடியுமா?' என்று தோன்றும். அல்லது, அவர் நிபந் தனையின்படி நேரே கல்கத்தாவுக்கே போய் அங்கிருந்து தனக்குக் கடிதம் எழுதக் கூடும்; அந்தக் கடிதத்தில் அவர் நிஜமாகவே பச்சாத்தாபப்படுவதாகத் தெரிந் தால், பிறகு குழந்தை சாருவைப்பற்றி அவருக்கு எழுதித் தெரியப்படுத்தலாம் என்று நினைப்பாள். உடனே, 'வேண்டாம், வேண்டாம்! அவருக்குக் குழந்தை வேறு வேண்டிக் கிடக்கா? சிவ சிவா! அந்தப் புண்ணியவதி - அவர் அம்மா - என் குழந்தையைக் கொன்றாலும் கொன்று விடுவாள்' என்று எண்ணுவாள்.

உமாவின் மனோநிலை இம்மாதிரி இருந்த போது, ஒரு நாள், "ஸ்ரீதரன் பி.ஏ." என்று அச்சடித்த சீட்டை வேலைக்காரன் கொண்டு வந்து கொடுக்கவே, அவளுக்குக் கோபம் அபரிமிதமாய் வந்தது. தான்



சல்கள் இல்லாததால் தெய்வ சிந்தனையும் ஆத்ம விசாரமும் பண்ண நிறைய டயமும் கிடைக்கும். ஒரு 'சேஞ்ச்' வேண்டும் , வெளி லோகத்தைப் பார்க்க வேண்டு மென்றால் க்ஷேத்ரா டனம், தீர்த்தாடனம் செய்யலாம். கோஷ்டியாகப் பலபேர் சேர்ந்து யாத்ரை போனால் அதிலே வேறெந்தப் பொழுதுபோக்குக் கேளிக்கையிலும் கிடைக்காத ஆனந்தம் கிடைக்கும்.

- ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சாரிய சுவாமிகள்.

எதிர்பார்த்தபடி ஒன்றும் நடக்கவில்லை. அந்த மனுஷர் நிபந்தனையை நிறைவேற்றவில்லை. கடிதம் எழுதித் தன்னை வந்து பார்க்க அநுமதி கேட்கவும் இல்லை. துணிச்சலாக நேரிலேயே வந்திருக்கிறார். புருஷன் பாத்தியதை கொண்டாடிக் கொண்டு வந்திருக்கிறார் போல் இருக்கிறது! - பேஷ்! அப்படியா சமாசாரம்?

''பார்க்க முடியாது'' என்று சொல்லி அனுப்பிவிடலாமா என முதலில் நினைத்தாள் உமா. உடனே, அதை மாற்றிக் கொண்டாள். அவரிடம் நமக்கு என்ன பயம்? வரட்டும்; நன்றாகப் புத்தி கற்பித்து அனுப்பலாம்!

''வரச் சொல்'' என்று சொல்லிவிட்டு, உமா ஒரு நிமிஷம் அலட்சியமாய் உட்கார்ந்திருந்தாள். உடனே ஏதோ ஞாபகம் வந்தவளைப் போல், முகத்தைக் கண்ணாடியில் பார்த்துக் கொஞ்சம் அழகுபடுத்திக் கொண்டாள். பிறகு ஜல்வேலாரமாய்ச் சென்று வாசலில் பார்த்தாள்.

ஸ்ரீதரன் மோட்டாரிலிருந்து இறங்கினான். அவன் இப்போது, முன்னே டெபுடி கமிஷனர் ஆபீஸில் பார்த்தது போல் கையில் விலங்குடனும் சோர்ந்த முகத்துடனும் பரிதாபத் தோற்றம் கொண்டிருக்கவில்லை. நாகரிகமாக உடுப்பு அணிந்து கொண்டு, தலையில் தொப்பியுடன் நவயௌவன விடபுருஷனாக விளங்கினான். அன்று விலங்கு போட்டிருந்த கையில், இன்று பாதி பிடித்த ஸிகரெட் காணப்பட்டது.

'லவலேசமும் மாறுதல் இல்லை. ஏழு வருஷத்துக்கு முன் எப்படியோ அப்படியேதான் இன்றும் இருக்கிறார்' என்று உமா எண்ணினாள். இதனால் அவளுடைய கோபம் பன்மடங்கு பெருகிற்று.

ஸ்ரீதரன் டக், டக்கென்று மிடுக்குடன் நடந்து உள்ளே வந்த போது, உமா, ஒரு புத்தகத்தைப் படிக்கும் பாவனையில் இருந்தாள். ஸ்ரீதரனுடைய முகத்தை அவள் ஏறிட்டுப் பார்க்கவில்லை.

ஸ்ரீதரன் உமாவுக்கு எதிரில் கிடந்த ஸோபாவில் ஜம்மென்று உட்கார்ந்தான்.

ஒரு நிமிஷம் கழித்து, ''உமா! என் முகத்தைப் பார்க்க உனக்குப் பிடிக்கவில்லை போல் இருக்கிறது!'' என்றான்.

உமா கையிலிருந்த புத்தகத்தைக் கீழே எறிந்தாள். ஸ்ரீதரனை நேருக்கு நேர் பார்த்தாள். ''ஆமாம்; உமது முகத்தைப் பார்க்க எனக்குப் பிடிக்கவில்லைதான். நீர் எதற்காக இங்கே வரவேணும்? விடுதலையானவுடன் மெட்ராஸை விட்டுப் போய் விடுகிறேன் என்று சொன்னீரா, இல்லையா? அந்த நிபந்தனை மேல்தானே, பணத்தைக் கொடுத்து உம்மை விடுதலை செய்தேன்? பின், ஏன் இங்கே வந்தீர்?'' என்று விடுவிடுவென்று பேசினாள்.

''ஏன் வந்தேனா?'' என்று ஸ்ரீதரன் நிதானமாய்க் கேட்டுவிட்டுச் சிரித்தான். அந்தச் சிரிப்பு உமாவுக்கு நெருப்பாயிருந்தது.

''உன்னை விட்டுப் போக முடியாமல் தான் வந்தேன். கோவிச்சுக்காதே, சாவித்திரி! அந்தப் பழைய கதையையெல்லாம் மறந்துவிடு....'' என்று ஸ்ரீதரன் சொல்வதற்குள், உமா அளவிலாத எரிச்சலுடன், ''கோபமாவது சாவித்திரியாவது, இங்கே சாவித்திரி என்று ஒருவருமில்லை. சாவித்திரி செத்துப் போய் எத்தனையோ காலமாச்சு!'' என்றாள்.

''நிஜந்தான்; நீ இப்போது பழைய பட்டிக் காட்டுச் சாவித்திரி இல்லை. நானும் பழைய ஸ்ரீதரன் இல்லை. இரண்டு பேரும்



"கேபிள் டீ.வி. ஸ்டார் டீ.வி. ஜெமினி டீ.வின்னு வந்திருக்கே நீங்க எதைப் பார்ப்பீங்க?"

"வேலைக்காரி முனியம்மா எதைப் போடச் சொல்றாளோ... அதைத்தான்!"

- ஆர். உமா

● ● ● ● ●



"கோவா போறதுக்கு லீவு தரலேங்கறதுக்காக இப்படியெல்லாம் ஆபீசுக்கு வரக் கூடாது."

● ● ● ● ●



"கற்றுலா வளர்ச்சிங்கற தலைப்பில் நம்ம தலைவரைப் பேசச் சொன்னது தப்பாப் போச்சு."

"ஏன்?"

"டெல்லியில் உடனடியாக பீச் ஹோட்டல் அமைக்க வேண்டும்னு பேசறாரே!"

புனர்ஜன்மம் எடுத்து விட்டோம். அந்தக் கர்நாடக நாட்டுப்புறத்துச் சாவித்திரியை எனக்குப் பிடிக்கவில்லை; வாஸ்தவந்தான்; ஆனால்...."

ஸ்ரீதரன் இப்போது ஸோபாவிலிருந்து எழுந்திருந்து உமாவை நோக்கி நாலடி நடந்து வந்து, ".... ஆனால், உமாராணி பிடித்த பூமியைக்கூட இன்று நான் பூஜை செய்யத் தயார்!" என்று முடித்தான்.

இந்த நாடகப் பேச்சு உமாவுக்கு நாராசமாயிருந்தது. அவளும் எழுந்து நின்று, "ஆனால் நீர் பிடித்த பூமியை மிதிப்பதற்குக்கூட உமாராணி இப்போது தயாராயில்லை. அந்தக் காலம் மலையேறி விட்டது. போம் வெளியே!" என்றாள்.

"வெளியே போக வேணுமா? உன்னை விட்டு விட்டா? முடியாது, உமா! முடியாது! நீ என்னுடைய மனைவி; நான் உனக்குத் தாலி கட்டிய புருஷன். ஞாபகமிருக்கட்டும்" என்றான்.

உமாவின் கோபம் இதனால் கொழுந்து விட்டெரியத் தொடங்கியது.

"மரியாதையாய்ப் போகிறீரா? தர்வானைக் கூப்பிட வேணுமா?" என்று கேட்டாள்

ஸ்ரீதரனும் கோபத்துடன், "எங்கே, கூப்பிடு பார்க்கலாம்" என்றான்.

உமா மேஜை மீதிருந்த மணியை அடித்தாள். அடுத்த நிமிஷம் தர்வான் உள்ளே வந்தான்.

"தர்வான்! இந்த ஜுவானை 'கேட்'டுக்கு வெளியிலே கொண்டு போய் விட்டுட்டு வா!" என்றாள் உமா.

"சலோ, பாபு! சலோ!" என்றான் தர்வான்.

ஸ்ரீதரன், உமாவைக் கண்ணில் பொறி பறக்கப் பார்த்து, "ஓஹோ! இவ்வளவுக்கு ஆயிடுத்தா?.... சாவித்திரி! பொறு! Restitution of Conjugal Rights க்கு (தாம்பத்திய உரிமை), ஸூட் போட்டு உன்னைக் கோர்ட்டிலே கொண்டு வந்து நிறுத்தறேன். தர்வானைக் கூப்பிடறதையெல்லாம் அப்போது பார்க்கிறேன்" என்றான்.

"சலோ பாபு! உன்கி போல் ரொம்ப ஆக்பி பார்த்திருக்கான்!" என்று சொல்லி, தர்வான் ஸ்ரீதரனைப் பிடித்துத் தள்ளப் போனான். "ஹூம்!" என்று அவனை அகட்டி விட்டு ஸ்ரீதரன் தானே விரைவாக நடந்து வெளியே சென்றான்.

ஸ்ரீதரன் போனதும் உமாராணி ஸோபாவில் குப்புறப்படுத்துக் கொண்டு விம்மி அழுதாள். அந்த மாதிரி அவள் அழுது எத்தனையோ வருஷம் ஆயிற்று.

(தொடரும்)

மாருதி வாகனங்கள் வாங்கிட, வருகை தாரீர் ABT
மாருதி வாகனங்கள் சர்வீஸ்
செய்திட நாடிடுவீர் ABT.

# ABT

எல்லா 'மாருதி' வாகனங்களுக்கும் பிரபலமான
ஒரே ஸ்தாபனம் இதுவே.

எல்லோருடைய தேவைக்கும் ஏற்றபடி
உடனடியாகக் கடன் வழங்க வகை செய்யும் திட்டம்.
குறைந்தபட்ச சர்வீஸ் கட்டணம்.
குறைவான வட்டி விகிதம்.





விலாசம்:

**ABT லிமிடெட்,**
162, மவுண்ட் ரோடு, கிண்டி, சென்னை-600 032.
போன்கள்: 2352449/2351449/
2350533/2352621/2352622.
தந்தி: Minicar டெலக்ஸ்: 041-8970 ABT IN.

**ABT லிமிடெட்,**
6, பை பாஸ் சாலை, பாத்திமா நகர்,
மதுரை-625 016. போன்: 37926.

**ABT லிமிடெட்,**
654, அவிநாசி சாலை, கோயம்புத்தூர் - 37
போன்: 215366/216153
டெலக்ஸ்: 041-355 ABT IN

**ABT லிமிடெட்,**
மாம்பலம் சாலை,
சென்னை புறச் சாலை,
திருச்சிராப்பள்ளி-620 005.
போன்: 63199.





★ பெட்டிகளின் உட்புறம் நட்சத்திர ஹோட்டல்களைப் போல் அலங்கரிக்கப்பட்டிருக்கும்...

# உலா வரப் போகும் ஒரு கோடி ரயில்!

"இரயிலிலேயே சென்று சுற்றுலா இடங்களைப் பார்வையிடும் திட்டம் (Palace on wheels Project) ராஜஸ்தானில், வெளிநாட்டுச் சுற்றுலாப் பயணிகளிடையே நல்ல வரவேற்பைப் பெற்றுள்ளது. பல் வகைச் சுற்றுலா மையங்களைக் கொண்டுள்ள தமிழகத்தில் 1993 இறுதியில் இது போன்ற ரயில் இயங்க ஏற்பாடுகள் செய்யப்பட்டு வருகின்றன..." முதல்வர் ஜெயலலிதாதான் இப்படிச் சொன்னார் - 1993 பட்ஜெட்டின் போது...

முதல்வர் விட நினைத்த ரயிலின் பெயர் தென்னிந்திய ரோவர் சிறப்பு ரயில் (South Indian Rover Special Train) தமிழகத்தில் உள்ள கோயில் தலங்களை மட்டுமல்லாமல், தென்னிந்தியாவில் உள்ள இதர சுற்றுலா இடங்களையும் இணைத்து ரயில் விடுவது தான் முதல்வரின் திட்டம்.

ஆனால் ரயில்வே இலாகா, நடைமுறைச் சிக்கல்களைச் சொன்னது. குறிப்பாக தமிழ்நாட்டுத் தலங்கள் பெரும்பாலும் மீட்டர் கேஜ் பாதையில் அமைந்திருக்கின்றன. ஆனால், மற்ற மாநிலங்களில் அது போன்ற இடங்கள் பிராட் கேஜ் மார்க்கத்தில் உள்ளன. இதன் காரணமாக, ஒரே ரயிலில் சகல இடங்களுக்கும் சென்று வருவது சாத்தியமல்ல. ஆதலால் திட்டத்தைச் சுருக்க ஒப்புக் கொண்டது தமிழக அரசு. 1995 துவக்கத்தில் இருந்து இத்திட்டம் அமுலுக்கு வரும். தமிழக அரசின் சுற்றுலா வளர்ச்சி நிறுவனம் விடப் போகும் இந்த ரயிலின் பெயர் 'கோயில் ரயில்' (Temple Tour Train)'.



# பூமியின் நிழல் பார்க்கலாம்!

காதலில் தோல்வி என்றும்
கவலையில் போதை என்றும் -
சுருண்டு கொள்ளும்
மனித நத்தையே! கொஞ்சம் நில்.

வண்டுகளின் கால்களில்
மகரந்த மடல் எழுதி
பூக்களுக்குள் காதல் நடப்பதைக்
கவனித்திருக்கிறாயா?

பளு தூக்கும் வீரனைப் போல்
தன்னிலும் பெரிய சோளமணியைச்
சுமந்து செல்லும் எறும்பின் சாகசத்தில்
சந்தோஷப்பட்டதில்லையா?

ராட்சத ராட்டினத்தில் சுற்றும்போது
அடி வயிற்றில் உயிர் நின்று திரும்பும்
உற்சாகக் குறுகுறுப்பை
ரசித்திருக்கிறாயா?

தன் பிள்ளைகளின்
ஒவ்வொரு சுபகாரியத்திலும்
கணவனை இழந்தவள்
சிந்துகின்ற கண்ணீரின் சூட்டைக்
கணித்திருக்கிறாயா?

அந்தச் சேரியில்
அவன் இறந்த துக்கத்தைவிட
அவனின் இறுதிச் சடங்குக்குக்கூட
வழியில்லையே என்று ஏங்குவோரின்
துக்கம் உணர்ந்து
தவித்திருக்கிறாயா?

நகரும் தண்ணீர்ப் பந்தலாய்
வானில் வலம்வரும் மேகங்கள் உன்னை
வசீகரித்ததில்லையா?
இன்னமும் உனக்குக்
கவலை உடைக்கும் கம்பீரம்
வரவில்லையென்றால் -
தேசிய கீதம் கேட்டுப் பார்.
திரும்பவும் உனக்குள் உயிர்ப்பு வரும்.

- சூரிய தாஸ்

ரூபாய் ஒரு கோடி செலவில் இந்த ரயில் உருவாகிறது. 72 லட்ச ரூபாயை தமிழக அரசும், மீதம் 28 லட்ச ரூபாயை மத்திய அரசுமாகப் போட்டுக் கொள்ளும். மொத்தம் எட்டு பெட்டிகள் கொண்ட ரயிலாக இது இருக்கும். இரண்டு பெட்டிகள் சமையலறை மற்றும் ரயில்வே தொழிலாளர்களுக்காக. மீதி ஆறு பெட்டிகளில் ஒரு பெட்டிக்கு 72 பயணிகள்தான் பயணம் செய்ய முடியும்!

ஒவ்வொரு பெட்டியின் உட்புறமும் சிறப்பான முறையில் அலங்கரிக்கப்படும். ''ஒரு நட்சத்திர ஓட்டலின் அறை போன்று இருக்கும்'' என்கிறார் சுற்றுலா அதிகாரி ஒருவர். தற்போதைய திட்டப்படி பெட்டிகளில் குளிர் சாதன வசதி செய்வதாக இல்லையாம். காரணம், குளிர் சாதன வசதி கொண்ட பெட்டிகள் தயார் செய்ய ஏகமாகச் செலவாவதுதானாம்.

இந்த ரயிலின் பெட்டிகள் எல்லாம், கொஞ்சம் பழம்பெருமை வாய்ந்ததாக இருக்கும். சுமார் 30, 40 வருடங்களுக்கு முன்னர் ஓடிய பெட்டிகளையே உபயோகப்படுத்த இருக்கிறார்கள். இந்தியாவில் உள்ள பல்வேறு பிராந்திய ரயில்வேக்களிலிருந்து இதுபோன்ற ரயில் பெட்டிகள் பெறப்படுகின்றன. பெட்டிகளின் உள் அலங்கார வேலை, இந்தத் துறையின் நிபுணர்களால் பொன்மலையில் வைத்துச் செய்யப்பட்டு வருகிறதாம்.

சென்னை எழும்பூரிலிருந்து கிளம்பும் ரயில் முதலில் சிதம்பரத்தில் நிற்கும். ஆங்காங்குள்ள தமிழ்நாடு ஹோட்டல்களில், பயணிகள் தங்க வைக்கப்படுவார்கள். சிதம்பரத்தை விட்டு, அடுத்து தஞ்சை, திருச்சி, மதுரை, ராமேஸ்வரம் வரை சென்று, ரயில் மீண்டும் எழும்பூருக்கே திரும்பும். சுற்றுலா இடங்களுக்குச் சாலைப் பயணங்கள் சொகுசு பஸ்ஸில். மொத்தமாக, ஒரு வாரப் பயணம் இது.

பயணிகளுக்குச் சாப்பாடு மற்றும் தங்கும் செலவு, பயணச் செலவு எல்லாமாக, நபர் ஒருவருக்குச் சுமார் ஆறாயிரம் ரூபாய் ஆகும் என்று எதிர்பார்க்கப்படுகிறது.

''இப்போது பஸ்ஸில் இதுபோன்ற சுற்றுலாவுக்கு 3000 ரூபாய்தான் செலவாகிறது. ஆகையால், ஆறாயிரம் என்பது அதிகமாகத் தெரிகிறது. இது குறைவதற்கான வாய்ப்பு இருக்கிறது'' என்கிறார் சம்பந்தப்பட்ட அதிகாரி.

வருடத்தில் ஒன்பது மாதங்களே இந்தக் கோயில் ரயில் ஓடும். ஏப்ரல், மே, ஜூன் மாதங்களில், அயல்நாட்டுப் பயணிகள் வெயிலுக்குப் பயந்து இந்தப் பக்கம் எட்டிப் பார்க்காததால் இந்த ஏற்பாடு.

கோயில் ரயிலில் Bar வசதியும் உண்டாம்!

- தில்லப்பா

# K-7

**ஜே.எஸ்.ராகவன்**

**K-7** என்றால் என்ன? 'சோவி இ பிச்சே கியா ஹை?' போன்ற மூளையைக் கசக்கவைக்கும் கிளுகிளுப்பான கேள்விகளின் வரிசையில் வருவது அல்ல. K-7 என்பது புரட்சித் தலைவி, புட்டா சிங், பிரதமர் நரசிம்மராவ் போன்ற பெருந்தலைகளைச் சூழ்ந்துள்ள கறுப்பு 'மியாவ்'கள் கையில் ஏந்தி இருக்கும் AK47 துப்பாக்கிகளின் மூதாதையரும் இல்லை. K-7 என்பது இங்கிலாந்து, பிரான்ஸ் போன்ற புஷ்டியான நாடுகள், பனிபெய்யும் 'சம்மிட்டு'களில் கூடிப் பேச ஏற்படுத்தப்பட்ட G-7 போன்ற கூட்டு அமைப்பும் இல்லை. K-7 என்பது ஏறக் குறைய அம்மணமாகத் தரிசனம் அளிக்கும் அழகிய இளம் சிட்டுகள் இடையே, துருதுருக்கும் கண்களுடன் (மற்றும் கைகளுடன்) வலம் வந்து, தேவைப்பட்ட போது காதல் மற்றும், கொலை செய்ய அரசாங்கத்தால் அனுமதி அளிக்கப்பட்ட ஜேம்ஸ் பாண்ட் போன்ற அதிர்வுக் கட்டையைக் குறிக்கும் 007 போன்ற சங்கேதக் குறியும் இல்லை. பின்னே? K-7 என்பது என்னுடைய கல்லூரி நண்பன், அவனுடைய பெயரைக் குறிக்கும் விதம். பெயர்? கேசவன்!



கேசவன் புகழ் பாடவேண்டும் என்றால் காட்சியை, ஆதென கீர்த்தனாரம்பத்திலே நானும் அவனும் சேர்ந்து கல்லூரியிலே படித்த நாட்களுக்குப் பின்னோக்கி நகர்த்த வேண்டும். கடைசி பெஞ்சை அலங்கரித்து உட்கார்ந்து இருக்கும் சமயங்களில் அவனுடைய கற்பனைப் பறவை சிறகடித்துப் பறக்க ஆரம்பிக்கும். சிருங்கார ரசம் சொட்டும் ஷேக்ஸ்பியரின் 'ரோமியோ அண்ட் ஜூலியட்'டை பாடமாக வைக்காமல், காட்சிக்கு ஒரு கொலை விழும் 'மாக்பெத்'தை பாடமாக வைத்த மகாபாவிகளைத் திட்டிவிட்டு, நம்மை ஆண்ட ஆங்கிலேயர்களை ஒரு பிடி பிடிக்க ஆரம்பிப்பான்.

''என்ன நாக்குடா, அவங்களுக்கு? நம்ம ஊர்ப் பெயர்களை இப்படியா கொலை செய்வாங்க? திருவல்லிக்கேணி! திருநெல்வேலி! திருவனந்தபுரம்! என்ன அழகான பெயர்கள். பொருள் பொதிந்த பெயர்கள்! இதை உச்சரிக்க வக்கில்லாமல், உலக்கையால் அவைகளை இடித்து, சிதைத்து, ட்ரிப்ளிகேன்! ட்டின்னவேலி! ட்ரிவாண்டிரம்! அப்படின்னு கொலை செஞ்சாங்களே, பதிலுக்கு நாம அவங்க பேரைத் தமிழ்ப் படுத்தினா என்ன?''

ஷேக்ஸ்பியர் மாக்பத்தில் வரும் சூனியக் கிழவிகள், எரியும் வாணலியைச் சுற்றி வரும் காட்சியைப் பேராசிரியர், விட்டலாச்சாரியார் கணக்காக விவரிக்கும் போது, கேசவன் தனக்குத் தெரிந்த பிரபலமான ஆங்கிலப் பெயர்களைத் தமிழாக்கத் தொடங்குவான்.

'60 களில் இளம் உள்ளங்களைத் தன் நடிப்பாலும், கவர்ச்சியாலும் ஆட்டுக்குட்டியைப் போலத் துள்ள வைத்த ஹாலிவுட் நடிகை உர்ஸலா ஆண்ட்ரெஸ், கேசவன் புண்ணியத்தில் ஊர்மிளா ஆண்டிரெஸாக உருவெடுத்தாள். 'மூணுக்'கென்றால் விவாகரத்து என்ற நியதியைக் கைப்பிடித்த நடிகை எலிஸபெத் டெய்லரின் கணவர்களில் ஒருவரான நடிகர் ரிச்சர்ட் பர்ட்டன், ரிச்சர்ட் பரதன் ஆனார். இத்தாலிய டைரக்டர் மார்சிலோ மாஸ்த்ரியானி, மார்சிலோ மாசிலாமணியாக்கப் பட்டார்!

திரைகளிலும், ரசிகர்களின் (ஆண்) கனவுகளிலும் தோன்றி இன்ப வேதனைக்கு



சடுபடுத்திய சோஃபியா லாரன், சுகன்யா லாரன் என்று மாறினார். 'லோலோ பிரிகிடா' என்றால் அழகிய வளைவுகள் கொண்டது என்று அகராதியால் ஏற்றுக் கொள்ளும் அளவுக்குப் புகழ் படைத்த மேனியழகு கொண்ட ஜீனா லோலோபிரிகிடா, மீனா லோலோபிரிகிடாவாக தமிழ்ப் படுத்தப்பட்டார். மார்லின் மன்றோ, மாலினி மன்றோவானார். செசில் பி டிமிலி, செந்தில் பி டிமிலியாக்கப்பட்டார்!

கேசவனின் இப்பெயர் மாற்றங்களி லிருந்து இலக்கியப் பெருந்தலைகளும் தப்பவில்லை. ஆலிவர் கோல்ட்ஸ்மித் ஆள வந்தார் கோல்ட்ஸ்மித்தானார். டாக்டர் சாமுவேல் ஜான்சன், டாக்டர் சக்திவேல் ஜான்சன் என்று வழங்கப்பட்டார். துப்பறி யும் நாவல்களை மணங்கு மணங்காக எழுதிக் குவித்த நாவலாசிரியை அகாதா கிரிஸ்டி, சுஜாதா கிரிஸ்டியாக உருவெடுத் தார். ஷெர்லாக்ஸ் ஹோம்ஸை சிருஷ்டித்த ஆர்த்தர் கோனன் டாயில் (நம்மூர் நாவ லாசிரியர்கள், ஆரணி குப்புசாமி முதலி யார், வடுவூர் துரைசாமி அய்யங்கார் முன் உதாரணத்துடன்) ஆக்தார் கோனன் டாயி லாக மாற்றப்பட்டார். இந்திய வேதாந்தம், சித்தாந்தம், ரமண மகரிஷி போன்ற விஷ யங்களைப் பற்றி எழுதி இந்தியாவுக்கும் பெருமை சேர்த்த நாவல் ஜாம்பவான் 'சோமர்செட் மாம்' கேசவனால் வாஞ்சை யுடன் 'சோமசுந்தர மாமா'வாக ஏற்கப்பட் டார்.

அடுத்து விளையாட்டு அரங்கில் நுழைந்த கேசவன், ரோஹன் கவாஸ்கரை, மோகன் கவாஸ்கராக்கினான். அலெக் பெட்ஸர் அஷோக் பெட்ஸராகவும், ஆஸ்தி ரேலிய கிரிக்கெட் வீரர், ரிச்சி பெனோ, இச்சி பெனோவாகவும் மாற்றப்பட்டனர். அந்நாள் டென்னிஸ் வீரர் மானுவல் சன்டானா (கரெக்ட்!) மானுவல் சந்தான மாக உருவெடுத்தார்.

ரகுபதி, ராஜாராம் என்ற மற்ற இரண்டு மாணவர்களை என்னுடைய இரண்டு பக்கங்களில் மாற்றி உட்கார வைத்து, பேரா சிரியர் அட்டென்டென்ஸ் எடுக்கும் போது, ''ரகுபதி, ராகவ, ராஜாராம்'' என்று பஜனை பாணியில் விளிக்க வைத்தான். அவனை வேண்டுமென்றே சதாய்த்த ஒரு ட்யூட்டரை 'இந்த ஆகம்பாக்க ஆசாமியை ஆழம் பார்க் காதீர்கள்' என்று எச்சரித்தான். 'ஜ'வுக்கும் 'ஐ'க்கும் உள்ள வித்தியாசத்தை அலட்சியப் படுத்தி, ''அன்புள்ள ஐயா.....' என்று தமிழாசிரியருக்கு எழுதுவதற்கு பதில், 'அன்புள்ள ஜயா' என்று மாற்றி எழுதி, தமிழாசிரியரிடம் செமத்தியாக வாங்கிக் கட்டிக் கொண்டான். தமிழாசிரியரின் பெண்ணின் பெயர் ஜயா!

சுமார் மூன்று மாமாங்கத்திற்குப் பின் சமீபத்தில் கேசவனை மைலாப்பூரில் ஒரு ஐஸ்கிரீம் பார்லரில் அடையாளம் கண்டு கொண்டேன். ''நல்ல ஞாபக சக்திடா உனக்கு'' என்றான், ஸ்பானிஷ் டிலைட் ஐஸ்கிரீமை உள்ளே தள்ளியபடி.

ஐஸ்கிரீமை சாப்பிட்டுக் கொண்டே பழையதை அசைபோட்டோம்! சிவாஜி, மேஜர் பாணியில், 'அந்த நாள், ஞாபகம், நெஞ்சிலே, வந்ததே... நண்பனே... நண் பனே...' என்று சினிமாடிக்காக முழக்க மிடாவிட்டாலும், பழையதுக்கு, உப்பும், வடுமாங்காயுமாகச் சுவை ஊட்டிய, அவ னுடைய குறும்புகளையும், பெயர் மாற்றங் களையும் நினைவு கூர்ந்தேன்.

''உன்னுடைய பால காண்ட இதய நாயகி, உர்ஸலா ஆண்ட்ரெஸ்... சாரி ஊர் மிளா ஆண்ட்ரெஸை உனக்கு இன்னும் ஞாபகம் இருக்கா?''

''போடா... அதெல்லாம் பழைய சமா சாரம்....'' இப்போ என்னால மாத்தவே முடியாத பேர் என்னன்னா....'' என்ற கேசவன், சோகமாக என்னைப் பார்த்தான்.

''அதென்னடா அப்படிப்பட்ட பேர்?'' என்றேன்.

''பிஎஸ் K-7!'' என்றான் அமைதி யாக.

# மரணயோகம்

ராஜேஷ்குமார்

பனிக்கட்டித் துண்டுகள் மிதக்கும் ஆரஞ்சு ஜூஸை ஒரு வாய் பருகிய கோவிந்தராஜ் - அறைக்கதவு தட்டப்படும் சத்தம் கேட்டு, "எஸ்," என்றார்.

கருநீல ஃபுல் சூட் தரித்த ராஜமாணிக்கம், வியர்வை மின்னும் வழுக்கைத் தலையோடு உள்ளே வந்தார்.

ராஜமாணிக்கம் கோவிந்தராஜின் சக-பார்ட்னர்.

"அடேடே! வா... ராஜ்... நல்ல வெயில் நேரத்துல வந்திருக்கே. ஆரஞ்சு ஜூஸ் சொல்லட்டுமா...?"

"வேண்டாம்..."

ராஜமாணிக்கம் ஃபோம் தைத்த நாற்காலியில் 'தொப்' பென்று உட்கார்ந்து, தலையைப் பிடித்துக் கொண்டார். கோவிந்தராஜ் ஆச்சர்யமாய் அவரை ஏறிட்டார்.

"ராஜ்...! உனக்கு என்னாச்சு...? ஏன்... ரெஸ்ட்லஸ்ஸா தெரியறே...? எனி ப்ராப்ளம் வித் யூ...?"

"வித் அஸ்ன்னு சொல்லு..."

"நீ என்ன சொல்றே?"

"இன்னிக்கு காலை 'தபால்'ல எனக்கு ஒரு லெட்டர் வந்தது. அந்த லெட்டரைப் படிச்சதிலிருந்து வேர்த்து ஒழுகிட்டிருக்கேன்..."

"லெட்டரா...? என்ன லெட்டர்...?"

"படிச்சுப் பாரு..."

ராஜமாணிக்கம் தன் கோட் பாக்கெட்டில் வைத்திருந்த அந்தத் தபால் கவரை எடுத்து நீட்ட - கோவிந்தராஜ் வாங்கிப் பிரித்தார். தமிழ் டைப் ரைட்டிங் மெஷின் ஒன்று - வார்த்தைகளை வாக்கியங்களாக மாற்றியிருந்தது.

திருவாளர்கள் கோவிந்தராஜ் - ராஜமாணிக்கம் அவர்களுக்கு என் வணக்கம்.

நான் யார் என்று உங்களுக்குத் தெரிய வேண்டிய அவசியமில்லை. உங்களைப் பற்றி எனக்குத் தெரிந்த ஒரு விஷயத்தைப் பற்றி - இந்தக் கடிதத்தில் இப்போது சொல்லப் போகிறேன். இன்றைக்குத் தமிழ்நாட்டிலேயே நெம்பர் ஒன் பேரிங் கம்பெனி உங்களுடையதுதான். அதில் சந்தேகமில்லை. கம்பெனியின் இந்த வளர்ச்சிக்குக் காரணமான உங்களைப் பாராட்ட வார்த்தைகளைத் தேடிக் கொண்டு இருக்கிறேன்.

திடீக. ஆறு மாதங்களுக்கு முன்பு வரை கம்பெனியில் - உங்களையும் சேர்த்து மூன்று பார்ட்னர்களாக இருந்தார்கள். இப்போது ஒரு பார்ட்னரான லாரன்ஸ் டேவிட் உயிரோடு இல்லை. காரணம், திடீரென்று வந்த உடல்நலக் குறைவு. படுக்கையோடு படுக்கையாய் - இரண்டு மாத காலம் ஒட்டிக் கொண்டிருந்துவிட்டு - ஒருநாள் கண்ணை மூடிவிட்டார். லாரன்ஸ் டேவிட்டின் மரணம் மற்றவர்களுக்கு இயற்கையானதாகத் தெரியலாம். ஆனால் எனக்கு அப்படித் தெரியவில்லை. நீங்கள் இரண்டு பேரும் சேர்ந்து 'ஸ்லோ பாய்ஸன்' மூலமாக அவரைப் படுக்கையில் தள்ளி - உயிரைப் பறித்திருக்கிறீர்கள். தினமும் இரவு மூன்று பேரும் ஒன்றாய் உட்கார்ந்து மது குடிக்கும் போது - அவருடைய மது தம்ளரில் மட்டும் - அவருக்குத் தெரியாமல் 'ஸ்லோ பாய்ஸனை' கலப்பது உங்கள் வழக்கம். உங்கள் இருவருக்கு மட்டுமே தெரிந்த அந்த உண்மை எனக்கு எப்படித் தெரிந்தது என்று நீங்கள் ஆச்சர்யப்படலாம்... உண்மை நெருப்பைப் போன்றது. அதை அடைகாக்க எந்தப் பொருளாலும் முடியாது.

கடிதம் நீண்டு கொண்டே போகிறது. நான் விஷயத்துக்கு வருகிறேன். பாவத்தில் பெரிய பாவம் கொலை செய்வது. அந்தப் பாவத்தை நீங்கள் செய்திருக்கிறீர்கள். எந்தப் பாவத்துக்கும் பரிகாரம் உண்டு என்று சொல்வார்கள். அதேபோல் இந்தப் பாவத்துக்கும் பரிகாரம் உண்டு. அந்தப் பரிகாரம் என்ன என்பது நாளைய கடிதத்தில் தெரியும்.



- கே. என். பாலகிருஷ்ணன்

- கடிதம் கையெழுத்தில்லாமல் முடிந்திருந்தது.

இப்போது - கோவிந்தராஜ் நெற்றியில் மின்னும் வியர்வையோடு கலக்கமாய் நிமிர்ந்தார்.

''ரா... ராஜ்...! இந்த லெட்டர் எப்ப வந்தது...?''

''இப்பத்தான் பத்து நிமிஷத்துக்கு முந்தி.''

''யார்க்கோ... உண்மை தெரிஞ்சிருக்கு....''

''அதுவும் இத்தனை நாள் கழிச்சு...''

கடிதம் வந்த தபால் கவரைத் திருப்பி - தபால் முத்திரையை உன்னிப்பாய்ப் பார்த்தார்... கோவிந்தராஜ்.

உள்ளூர் தபால் முத்திரை.

''ராஜ்...! எவனோ லோக்கல் ஆசாமி தான்...''

''யாராயிருக்கும்...? 'லாரன்ஸ் டேவிட்டை'த் தீர்த்துக் கட்டின விஷயம் - வெளியே கசிய வாய்ப்பே இல்லையே...?''

''எங்கேயோ தப்புப் பண்ணிட்டோம்...''

''எங்கே...?''

தீர்க்கமாய் யோசிக்க ஆரம்பித்தார்கள்.

அடுத்த நாள். காலை பதினோரு மணி. ஆபீஸுக்குத் தபால் கட்டில் அந்தக் கடிதம் வந்திருந்தது. கோவிந்தராஜும், ராஜமாணிக்கமும் கடிதத்தைப் பிரித்துப் படித்தார்கள்.

கடிதம் மொட்டையாய் ஆரம்பித்திருந்தது.

நீங்கள் செய்த பாவத்துக்குப் பரிகாரம் இதுதான். 'லாரன்ஸ் டேவிட்'டைத் தீர்த்துக் கட்டிய விஷயம் போலீஸ் ஸ்டேஷன் படி ஏறாமல் இருக்க வேண்டும் என்று நீங்கள் நினைத்தால் - எனக்குப் பத்து லட்ச ரூபாய் தரவேண்டும். பணத்தை ஒரு கிழிந்த கோணிப் பையில் போட்டுக் கட்டி - திருவேற்காடு போகும் வழியில் ஏழாவது கிலோமீட்டர் கல்லுக்குப் பக்கத்தில் - இன்று இரவு பதினோரு மணிக்கு வைத்துவிட வேண்டும். பணம் என் கைக்கு வந்ததும் லாரன்ஸ் டேவிட்டை நான் மறந்துவிடுவேன். நீங்களும் என்னை மறந்துவிடலாம்.

பி. கு. : சினிமாவிலும், நாவல்களிலும் வருகிற 'ப்ளாக் மெயிலர்' மாதிரி என்னை நினைத்துவிட வேண்டாம். நான் அடிக்கடி பணம் கேட்க மாட்டேன். நீங்கள் தரப் போகும் பத்து லட்சத்தோடு சரி.

கடிதம் முடிந்து போயிருக்க - கோவிந்தராஜ் தம் மூக்கை இடதுகை ஆட்காட்டி விரலால் நிரடிக் கொண்டே - ராஜமாணிக்கத்தை ஏறிட்டார்.

''பத்து லட்சம் கேக்கறான்...''

''குடுத்துட வேண்டியதுதான்... பணம், பெரிசில்லை நமக்கு...''

''அடிக்கடி பணம் கேட்க மாட்டேன்னு... சொல்லியிருக்கான். அவனை எப்படி நம்பறது...?''

''வேற வழியில்லை. நம்பித்தான் ஆகணும். கேட்ட பணத்தை எடுத்து வைப்போம்...''

மேஜைமேல் இருந்த டெலிபோன் ஒலித்தது. பிரைவேட் டெலிபோன் அது.

கோவிந்தராஜ் ரிஸீவரை எடுத்தார்.

''ஹலோ...''

மறுமுனை கேட்டது.

''என்ன லெட்டர் கிடைச்சுதா?''

''நீ... நீ...?''

''பாவத்துக்குப் பரிகாரம் சொன்னவன்.''

''இதோ பார்... நீ கேட்ட பணத்தைக் கொடுத்துடறோம்... ஆனா திரும்ப... திரும்ப...''

''கேட்க மாட்டேன்...! ஆனா நீங்க என்னை ஏமாத்த நினைச்சா... நான் போலீஸுக்குப் போகத் தயங்க மாட்டேன்...''

''அதெல்லாம் வேண்டாம். கேட்ட பணத்தைக் கொடுத்துடறோம்.''

''பணத்தோடு வந்து சேருங்க...''

ரிஸீவர் வைக்கப்பட்டு விட்டது.

இரவு பதினோரு மணி.

திருவேற்காடு போகும் சாலை. ஏழாவது கிலோமீட்டருக்குப் பக்கத்தில் காரை நிறுத்தினார் ராஜமாணிக்கம். என்ஜினை அணைக்காமலேயே அருகில் உட்கார்ந்திருந்த கோவிந்தராஜை ஏறிட்டார்.

''பணத்தை வைச்சுட்டு வந்துடு...''

கோவிந்தராஜ் காலுக்குக் கீழே இருந்த - பணம் இருந்த கோணிப்பையை எடுத்துக் கொண்டு கீழே இறங்கினார்.

சுற்றிலும் இருட்டு.

தூரத்தில் மட்டும் ரகசியம் - பேசுகிற மாதிரி 'மினுக், மினுக்' வெளிச்சம்.

கோவிந்தராஜ் சுற்றுமுற்றும் பார்த்துக் கொண்டு திருவேற்காடு ஏழு கிலோமீட்டர் என்று சொன்ன கல்லுக்குப் பக்கத்தில் வந்து நின்றார். நெஞ்சு படபடவென்று அடித்துக் கொள்ள, நெற்றி வியர்த்தது.

ராஜமாணிக்கம் காரிலிருந்து குரல் கொடுத்தார்.

''கோவிந்தராஜ்...! கோணிப் பையை கிலோமீட்டர் கல்லுக்குப் பின்னாடி மறைவா வை...''





கோவிந்தராஜ் வைத்துவிட்டு காருக்குத் திரும்பும்போது தள்ளாடினார். ராஜமாணிக்கம் பதறினார்.

''கோவிந்தராஜ்! என்னாச்சு...?''

''திடீர்னு நெஞ்சு வலிக்குது...''

''டென்ஷன் பட்டாலே இப்படித்தான்... சரி... கார்ல ஏறு. நம்ம டாக்டர்கிட்டே போயிட்டுப் போகலாம்...''

கோவிந்தராஜ் காருக்குள் ஏறி உட்கார்ந்து - நெஞ்சை நீவியபடி சாய்ந்து கொண்டார்.

''பெய்ன் ரொம்ப இருக்கா...?''

''கொஞ்சம் கொஞ்சமா ஜாஸ்தியாயிடுத்து...''

''இதோ... பத்து நிமிஷத்துல டாக்டர்கிட்டே போயிடலாம்.''

காரை விரட்டினார் ராஜமாணிக்கம்.

அடுத்த பதினைந்தாவது நிமிடத்தில் -

விக்னேஷ்வரா நர்ஸிங்ஹோமில் - டாக்டர் ஹரிஹரன் கோவிந்தராஜைப் பரிசோதித்துப் பார்த்துவிட்டு - 'மைல்ட் ஹார்ட் அட்டாக்' என்றார். ராஜமாணிக்கம் பதற்றப்பட்டார்.

''ஆபத்தில்லையே டாக்டர்?''

''நத்திங் டு ஒர்ரி... நீங்கதான் சரியான நேரத்திலே கொண்டு வந்துட்டீங்களே...? ரெண்டு நாள் ஹாஸ்பிடல்ல இருந்து ரெஸ்ட் எடுத்துக்கிட்டாப் போதும்...''

**கோ**விந்தராஜை ஹாஸ்பிடலில் அட்மிட் செய்துவிட்டு - ராஜமாணிக்கம் வீடு திரும்பிய போது - பன்னிரண்டு மணி.

போர்டிகோ தூண் ஓரமாய்ச் சுருண்டு படுத்திருந்த வேலைக்காரன் எழுந்து நின்றான்.

''தருண் வந்தானா... மணி...?''

''என்னய்யா... இன்னும் வரலைங்கய்யா...''

''போன் ஏதாவது...?''

''வரலை...''

''சரி... நீ அவுட் ஹவுஸுக்குப் போய்ப் படுத்துக்க...''

தலையாட்டிவிட்டு - அவன் சற்றுத் தொலைவில் இருந்த அவுட் ஹவுஸை நோக்கிப் போனான். இருட்டுக்குள் அவன் மறைந்த அதே விநாடி - காம்பௌண்ட் கேட்டில் வெளிச்சம் விழுந்தது.

மாருதி ஜிப்ஸி உள்ளே நுழைந்து - போர்டிகோவை நோக்கி வேகமாய் வந்து நின்றது.

ட்ரைவிங் சீட்டிலிருந்து அந்த இளைஞன் வெளிப்பட்டான். ராஜமாணிக்கத்தின் சாயல். அவனை வேகவேகமாய் நெருங்கிய ராஜமாணிக்கம் சுற்றுமுற்றும் பார்த்துவிட்டுக் கேட்டார்.

''என்ன தருண், காரியம் முடிந்ததா?''

''முடிந்தது டாட்...''

''ஏன் இவ்வளவு லேட்...?''

''வழியில லெவல் க்ராஸிங் கேட்டைப் போட்டுட்டான். அரை மணி நேரம் பாழ்...''

''சரி... கோணிப்பையை எடுத்துக்கிட்டு உள்ளே வா...! யார் கண்ணிலேயும் நீ தட்டுப்படலையே?''

தருண் சிரித்து - ட்ரைவிங் சீட்டுக்குக் கீழே இருந்த கோணிப்பையை எடுத்துக் கொண்டு - ராஜமாணிக்கத்தைப் பின்தொடர்ந்து உள்ளே போனான்.

''என்னைப் பத்திய கவலையை விடுங்கப்பா... உங்க பார்ட்னரைப் பத்திச் சொல்லுங்க... அவருக்கு உங்க மேலே சந்தேகம் வந்துடலையே...?''

''எப்படி வரும்...?'' சிரித்த ராஜமாணிக்கம் சோபாவில் சாய்ந்து கொண்டு சொன்னார்.

''அவனுக்குச் சந்தேகம் வரலை. நெஞ்சு வலிதான் வந்தது. கம்பெனி பணம் பத்து லட்சம் இப்படி யாருக்கோ ஒருத்தனுக்குப் போகுதேன்னு டென்ஷன் பட்டுப் போய், மைல்ட் ஹார்ட் அட்டாக். என்னோட பார்ட்னர் இப்போ விக்னேஷ்வரா நர்ஸிங்ஹோம்ல ஒரு பேஷண்ட். ரெண்டு நாளைக்கு பெட் ரெஸ்ட் வேணும்னு டாக்டர் சொல்லிட்டார்.''

''டாட்! அந்த மிரட்டல் கடிதங்கள் ரெண்டும் இப்ப உங்ககிட்ட இருக்கா... இல்லை... பார்ட்னர்கிட்டே இருக்கா...?''

''யார்கிட்டேயும் இல்லே... அது அப்பவே சாம்பலாயாச்சு...''

''ரெண்டு மாசம் கழிச்சு... இதே மாதிரி லெட்டர் போட்டு ஒரு அஞ்சு லட்சம் கேட்கலாமா...?''

''பின்னே... கோவிந்தராஜ் கணக்குலே இருக்கிற லாபம் பூராவும் நம்ம பாக்கெட்டுக்கு வரவேண்டாமா...?''

அப்பாவும் மகனும் பரஸ்பரம் தோளைத் தட்டிச் சிரித்துக் கொண்டிருக்கும்போதே -

வாசலில் -

அந்த வாகன இரைச்சல் கேட்டது.

திரும்பிப் பார்த்தார்கள். அதிர்ந்தார்கள்.

ஒரு டாக்ஸியோடு - போலீஸ் ஜீப். கோணிப்பையை சோபாவுக்குக் கீழே தள்ளினான் தருண்.

தபதபவென்று பூட்ஸ் சத்தம். ஒரு இன்ஸ்பெக்டர், நான்கைந்து கான்ஸ்டபிள்கள்... ஹாலுக்குள் நுழைந்து சூழ்ந்தார்கள்.

'எங்கே தப்பு செய்தோம்...?'

வியர்வையோடு - அப்பாவும் மகனும் யோசித்துக் கொண்டு நிற்க - இன்ஸ்பெக்டர் ராஜமாணிக்கத்தை நெருங்கினார்.

''உங்க கம்பெனி பார்ட்னர் லாரன்ஸ் டேவிட்டை 'ஸ்லோ பாய்ஸனிங்' மூலமாய்க் கொலை செய்த குற்றத்துக்காகக் கைது செய்ய

அரெஸ்ட் வாரண்ட்டோடு வந்திருக்கோம்...''

ராஜமாணிக்கம் அவஸ்தையாய்ச் சிரித்தார்.

''என்ன சொல்றீங்க... இன்ஸ்பெக்டர்...? என்னோட பார்ட்னர் லாரன்ஸ் டேவிட்டைக் கொலை செய்தேனா...?''

''ம்... உங்க வாக்குமூலம் சொல்லுதே...?''

''வாக்குமூலமா...?''

''எஸ்... இதைக் கொஞ்சம் பார்க்கறீங்களா...?'' இன்ஸ்பெக்டர் இரண்டு காகிதங்களை முகத்திற்கு நேராய்ப் பிடிக்க - ராஜமாணிக்கம் அவைகளைப் பார்வையில் வாங்கித் திடுக்கிட்டார்.

அவர் டைப் பண்ணிய மிரட்டல் கடிதங்களின் ஜெராக்ஸ் காப்பிதான் அது.

''இ... இது... இது... உங்களுக்கு...?''

''எப்படிக் கிடைச்சதுன்னு கேட்கறீங்களா...? ரொம்ப ஈஸி. கடந்த ரெண்டு வார காலமாகவே... முதலமைச்சருக்கும் மற்ற அமைச்சர்களுக்கும் கொலை மிரட்டல் கடிதங்கள் வந்துக்கிட்டிருக்கிறதாய் டிபார்ட்மெண்ட்டுக்குத் தகவல் கிடைச்சது... அப்பேர்ப்பட்ட லெட்டர்ஸை எழுதறது எதிர்க்கட்சி ஆட்களாய்த்தான் இருக்கணும்னு நினைச்சு... சில பேரை லிஸ்ட் பண்ணி - அந்த ஆட்கள் போஸ்ட் ஆபீஸுக்கு வந்து லெட்டர்களை போஸ்ட் பண்றாங்களான்னு ரகசிய போலீஸை மஃப்டியில் உலாவவிட்டு கண்காணிச்சுக்கிட்டு இருந்தோம். அப்படிக் கண்காணிக்கிற நேரத்துலதான் நீங்க ராத்திரி பதினோரு மணிக்கு மேல கார்ல அடையாறு போஸ்ட் ஆபீஸுக்கு வந்து - லெட்டரை போஸ்ட் பண்ணினீங்க...! போஸ்ட் ஆபீஸ் வாசல்ல பிச்சைக்காரர் மாதிரி படுத்துட்டிருந்த எங்க டிபார்ட்மெண்ட் ஆசாமிக்கு உங்களை யாருன்னு தெரிஞ்சிருக்கு. இவ்வளவு பெரிய ஆள் ராத்திரி நேரத்துல... அதுவும் பதினோரு மணிக்குமேல் - லெட்டரைக் கொண்டு வந்து போஸ்ட் பண்ண வேண்டிய அவசியம் என்ன...? எங்களுக்கு போன் பண்ணி சந்தேகத்தைச் சொன்னார். நாங்க உடனே சூபரின்டெண்டெண்ட் பர்மிஷனோடு தபால் பெட்டியில் இருந்த உங்க லெட்டரை எடுத்து 'ஸ்டீம் ஓப்பனர்' மூலம் கவரோட வாயைப் பிரிச்சு படிக்கப் பார்த்தோம்... விவரம் புரிந்தது. அந்த லெட்டரை ஜெராக்ஸ் எடுத்துக்கிட்டு லெட்டரைப் பழையபடியே ஒட்டி அனுப்பிட்டோம்... ரெண்டாவது நாளும் நீங்க கொண்டு வந்து போட்ட லெட்டரை எடுத்துப் படிச்சோம். திருவேற்காடு ஏழாவது கிலோமீட்டர் கல், பத்து லட்சம், கோணிப்பை - விவரங்கள் கிடைச்சது. அந்த லெட்டரையும் ஜெராக்ஸ் எடுத்துக்கிட்டு... உங்களைக் கண்காணிக்க ஆரம்பிச்சோம்... தருண் பணம் இருந்த கோணிப்பையை எடுத்துக்கிட்டு வர - ஒரு பிரைவேட் டாக்ஸியில் அவனை ஃபாலோ பண்ணினோம். இந்த விவரம் போதும்னு நினைக்கிறேன். கையை நீட்டறீங்களா... ரெண்டு பேரும்...?''

அப்பாவும் மகனும் கைகளை நீட்ட - ஒரே விலங்கு இரண்டு பேர் கைகளிலும் ஏறியது.

ஜீப்பை நோக்கி நடக்கும்போது - ஸ்டூலின் மேலிருந்த டெலிபோன் அடித்தது.

இன்ஸ்பெக்டர் போய் ரிஸீவரை எடுத்தார்.

''ஹலோ...''

''....''

''எஸ்...! சொல்லுங்க... டாக்டர்...''

''....''

''ஈவிட்...? எப்போ...?''

''....''

''சொல்லிடறேன்...'' ரிஸீவரை வைத்த இன்ஸ்பெக்டர் - ராஜமாணிக்கத்தை ஏறிட்டார்.

''ஹாஸ்பிடல்ல... அட்மிட்டாகியிருந்த உங்க பார்ட்னர் கோவிந்தராஜ்... ரெண்டாவது தடவை வந்த ஹார்ட் அட்டாக்ல இறந்துட்டாராம்... டாக்டர் போன் பண்ணிச் சொன்னார்.''

போலீஸ் ஜீப்பை நோக்கி நடந்த ராஜமாணிக்கத்துக்கு எப்போதோ - எங்கேயோ படித்த ஒரு பாடலின் வரி ஞாபகத்துக்கு வந்தது.

''முன்னை இட்ட தீ...''

''பையன் என்ன சொல்லிட்டான்னு அவனைத் திட்டறீங்க?''

''உங்களைப் பார்த்து, 'இந்த மாமாவுக்கு இருக்கிற தொப்பைக்கு போலீஸ்லே சேர்ந்தா நல்லா இருக்குமே'ன்னு சொல்றான்!''

- குமார்



**''நாடு, மொழி, மதம் போன்ற வேறுபாடுகளையெல்லாம் கடந்து செயல்படுவது மனித நேயம். எனது கிரீஸ், இத்தாலி பயணத்தின்போது இதை நான் மனப்பூர்வமாக உணர்ந்தேன்!'' என்கிறார் நடிகை ரேவதி.**

# உருக்கமான கதை சொன்ன கப்பல் பயணம்

**- நடிகை ரேவதியின் அனுபவம்**

''பத்துமாதம் படித்துத் தெரிந்து கொள்கிற வாழ்க்கையை, பத்து நாள் பயணம் கற்றுக் கொடுத்துவிடும் என்று நினைக்கிறவள் நான். எனவே நான் நடிக்க ஒப்புக் கொண்ட படம் ஒன்று கேன்சல் ஆகப்போகிறது என்று கால்ஷீட் கொடுத்திருந்த தேதிக்குப் பத்துநாள் முன்பாகவே தெரிய வந்ததும் சுற்றுலா கிளம்பவேண்டும் என்று தோன்றி விட்டது. என் கணவர் பிஸியாக இருந்ததால் தோழியுடன் புறப்படத் தீர்மானித்தேன். அபர்ணாவுக்கு விஷயத்தைச் சொல்ல, அவளுக்கு ஒரே சந்தோஷம். நான் 'அந்தமான் தீவுகளுக்குப் போகலாமா?' என்று கேட்டபோது, அபர்ணா, ''வேண்டாம்! கிரீஸ், இத்தாலி இரண்டு நாடுகளுக்கும் போய்வரலாம்'' என்றாள். எனக்கும் பள்ளி நாட்கள் முதலே, ஐரோப்பிய நாடுகள் மீது தனிக்காதல். மடமடவென்று பயணத்துக்கான ஏற்பாடுகளில் இறங்கினோம்..

''ஐரோப்பா முழுக்கப் பரவிக் கிடக்கும் 'யூரோ ரயில் நெட் ஒர்க்' மூலம் பயணம் செய்வதுதான் வசதியானதும், சிக்கனமானதும் என்று விஷயம் தெரிந்தவர்கள் கூறிய ஆலோசனையின் பேரில், யூரோ ரயில் மூலமான பயணத்துக்குரிய டிக்கெட்களை இந்தியாவிலேயே பதிவு செய்து கொண்டோம். அயல்நாடு செல்பவர்களுக்காக அப்போது தரப்பட்ட அன்னியச் செலாவணித் தொகையான ஐந்நூறு அமெரிக்க டாலர் போதாது என்று ஒருசிலர் பயமுறுத்தினார்கள். ஆனால் அதையும் ஒரு சவாலாக எடுத்துக் கொண்டு, வெகு சிக்கனமாகச் செலவழிப்பது என்று திட்டமிட்டுக் கொண்டோம். நிறைய லக்கேஜும் சேர்த்துக் கொள்ளவில்லை. இரண்டு ஜீன்ஸ், இரண்டு டீ-ஷர்ட்ஸ் மற்றும் சில அத்தியாவசியமான பொருட்கள். அவ்வளவுதான்.

''முதலில் சென்றது இத்தாலி. அப்புறம் கிரீஸ். இரண்டு நாடுகளிலும் நாங்கள் நிறைய மாணவர்களும், மாணவிகளும் சுற்றுலா வந்ததைப் பார்த்தோம். இவர்களில் அயல்நாடுகளிலிருந்து வந்த பள்ளி மாணவர்கள் கூட உண்டு! 'இத்தகைய வாய்ப்புகள் நம் நாட்டு மாணவ, மாணவிகளுக்கு என்று கிடைக்கும்?' என்பதாக ஒரு ஏக்கம் உண்டாயிற்று. நாங்கள் பார்த்த சுற்றுலா இடங்களைப் பற்றியல்லாமல் ஒரு அனுபவத்தை மட்டும் இங்கே சொல்கிறேன்.

''பிரின்ஸி. இது இத்தாலியில் உள்ள ஒரு துறைமுகம். இங்கிருந்து 36 மணி நேர கப்பல்பயணம் கிரீஸ். இரவு பத்துமணிக்குக் கப்பல் புறப்படும் நேரம். எட்டுமணிக்

கெல்லாம் துறைமுகத்தில் ரிப்போர்ட் செய்ய வேண்டும். அபர்ணாவும் நானும் துறைமுகம் சென்றபோது, அங்கே எங்கள் வயதை யொத்த இளைஞர்களும், யுவதிகளும் நிறையப்பேர் இருந்தார்கள். அவர்களும் எங்களைப் போல் இத்தாலியை சுற்றிப் பார்த்து விட்டு, கிரீஸ் செல்வதற்காக வந்திருந்தவர்கள்.

''டிக்கெட்டுகளைச் சரி பார்த்துவிட்டு, கப்பலுக்குள் போக அனுமதிப்பார்கள்' என்று சொன்னார்களே யொழிய மணி ஒன்பதாயிற்று, பத்தாகிவிட்டது... யாரும் 'செக்' பண்ண வரவில்லை.



● கிரீஸில், தோழியுடன்

''வெறுத்துப்போய் ஓர் இளைஞன் விடுவிடுவென அலுவலகத்தின் உள்ளே சென்று விசாரித்து விட்டு வந்தான். ''ஏதோ அல்பேனிய நாட்டு அகதிகள் பிரச்னையாம். அதனால் தான் தாமதமாம்'' என்று கூறினான். அல்பேனிய அகதிகள் பிரச்னைக்கும், நாங்கள் கிரீஸ் போவதற்கும் என்ன சம்பந்தம் என்று அவனுக்கும் தெரிய வில்லை; எங்களுக்கும் புரியவில்லை.

''பதினோருமணிவரை இதே நிலைமை நீடித்தது. ஓர் இளைஞனும், யுவதியும், ''இந்தத் தாமதத்தை எதிர்த்துப் போராட வேண்டும். ஒரே குரலில் நம் எதிர்ப்பைத் தெரிவிப்போம்'' என்று கூறி விட்டு ''ஏன் தாமதம்?'' என்று கத்த ஆரம்பித்தனர். பிறரையும் அந்த 'ஜுரம்' பற்றிக் கொள்ள, எல்லோருமே அவர்களோடு சேர்ந்து கொண்டு கோஷம் எழுப்பினோம்.

''இதன் விளைவாகச் சிறிது நேரத்தில் எங்களுக்குக் கப்பலுக்குள்ளே செல்ல அனுமதி கிடைத்தது. அப்புறம்தான் 'அல்பேனிய அகதிகள் பிரச்னை' விஷயம் என்னவென்று புரிந்தது. அல்பேனியா நாட்டில், ஆட்சியாளர்களின் கொடுமை தாங்காமல் அந்த நாட்டு மக்கள் பலர் அகதிகளாகத் திருட்டுத் தனமாய் அந்தக் கப்பலில் ஏறியிருந்தார்கள். அந்தக் கப்பல் அல்பேனியா வழியாக இத்தாலி வந்ததைப் பயன்படுத்திக் கொண்டிருக்கிறார்கள். ஆனால் இத்தாலிய அரசு அவர்களை இத்தாலியில் இறங்க அனுமதிக்கவில்லை. கப்பலினுள் ஓர் அறைக்குள் அவர்கள் சுமார் முப்பது நாற்பது பேர் அடைத்து வைக்கப்பட்டிருந்தனர்!

''இதற்கிடையில் 'டுமீல் டுமீல்' என்று துப்பாக்கிச் சத்தம். 'அப்படியே



தளத்தில் படுத்துக் கொள்ளுங்கள்' என்று கூக்குரல்! காதுகளைப் பொத்திக் கொண்டு, கப்பல் தளத்தில் குப்புறப் படுத்துக் கொண்டோம். மனத்துக்குள் "திக்...திக்!" பத்து நிமிடம் கழித்து, அமைதியானவுடன் மெல்ல எழுந்து பார்த்தோம். சில அகதிகள் திருட்டுத் தனமாகக் கப்பலிலிருந்து தப்பிச் செல்ல முயல, இத்தாலிய போலீஸ் அவர்களை நோக்கிச் சுட்டதன் விளைவுதான் துப்பாக்கிச் சத்தம் என்று தெரிந்தது.

"இந்த விஷயத்தைக் கேள்விப்பட்ட பத்திரிகைக்காரர்களும், டி.வி.க்காரர்களும் கப்பலுக்குப் படையெடுக்கத் தொடங்கி விட்டனர்.

"இறுதியில் அகதிகளை அல்பேனியாவுக்கே திருப்பி அனுப்பி விடுவது என்று இத்தாலிய அரசு எடுத்த முடிவின்படி கப்பல் அல்பேனியாவுக்குப் புறப்படும் என்று கூறிவிட, நாங்கள் எல்லோரும் வேறு கப்பல் மூலம் கிரீஸ் போகும்படி ஆகி விட்டது.

"அகதிகள் விஷயம் மனசில் பாரமாக அழுத்தினாலும் சுமார் பன்னிரெண்டு மணி நேரம், முன்பின் தெரியாதவர்கள் ஒன்று சேர்ந்து இருந்த அந்தச் சூழ்நிலை எங்களுக்குள் ஒரு நெருக்கத்தை ஏற்படுத்தி விட்டது.

"கப்பலின் மேல்தளத்தில் ஒன்றாய்க் கூடி, இசைக்கேற்ப ஆடினோம்; அவரவர் விருப்பப்படி பாட்டுகள் பாடினோம். நான் கூட இரண்டு இந்திப் பாடல்களும், ஒரு தமிழ்ப்பாட்டும் பாடினேன். ஒவ்வொருவரும் தம்மைப்பற்றியும் தம் நாட்டைப் பற்றியும் கூறினார்கள்.

"இந்தியர்கள் நாங்கள் இருவர்தான். மற்றவர்கள், ஆஸ்திரேலியா, ஜப்பான் அமெரிக்கா, பிரான்ஸ் என்று பல நாட்டு இளைஞர்கள், யுவதிகள். இருப்பினும் மதம், மொழி, இனம், நிறம் என்று பலவித வேறுபாடுகளையும் மீறி அனைவரும் மனிதர்கள் என்கிற உணர்வுதான் எங்களிடையே நிலவியது.

"பிரியும்போது நாங்கள் ஒருவருக்கொருவர் சிறு நினைவுப் பரிசுகளைப் பரிமாறிக் கொண்டோம். இன்னும்கூட, அவர்களில் ஐந்தாறு பேருடன் எனக்குக் கடிதத் தொடர்பு இருக்கிறது. பிறந்தநாள் புத்தாண்டு வாழ்த்துக்களை ஒருவருக்கொருவர் அனுப்பி மகிழ்கிறோம்."

சந்திப்பு : எஸ்.சந்திரமௌலி

காவேரி பிறக்கும் பிரம்மகுண்டம்...

# காவேரி பிறக்கும் இடம்; கனகா கலக்கும் தலம்!

தலைக் காவேரியின் தரிசனம் என்பது விதைக்குள் இருக்கும் விருட்சத்தைத் தரிசிக்கிற அனுபவம். இத்தனை சிறிய இடத்திலிருந்துதானா அத்தனை அகண்ட காவேரி உற்பத்தியாகிறாள் என்கிற வியப்பு! ஏறத்தாழ ஐயாயிரம் அடி உயரமுள்ள இந்த இடத்தைத் தனது பிறப்புக்காகக் காவேரி தேர்ந்தெடுத்தது எப்படி?

முன்னொரு காலத்தில், பிரம்மகிரி என்று அழைக்கப்படும் இந்த மலைப் பிரதேசத்தில், கவர மகரிஷி என்பவர் ஆசிரமம் அமைத்து, இறைவனை வழிபட்டு வந்தார். மக்கட்பேறு இல்லாததால், மக்கட் பேறு வேண்டியும் தவம் செய்தார்.

இவரது தவத்தில் காட்சியளித்த பிரம்மா, தமது வளர்ப்பு மகளான லோபமுத்ராவைக் கவரமகரிஷிக்கு மகளாகத் தந்து ஆசீர்வதித்தார்.

கனகா பிறக்குமிடம்...



மகளைப் பிரியமுடன்
பருவமடைந்த அவளின்
முழுவதும் பிரபலமானது
இமயமலையிலிருந்து தெ
வந்தார் அகஸ்தியர்.

லோபமுத்ராவின்
ஆச்சரியப்பட வைத்தது.
மணம் செய்து கொள்ள
விட்டு ஒரு கணநேரமு
அப்படியொரு வாக்குக்
மணத்திற்குச் சம்மதிக்கி
கூற, அந்த நிபந்தனைக்கு
தியர்.

திருமணம் முடிந்த
மலைக்கு அந்தப் பக்க
நீராடப் புறப்பட்டார் அ
லோபமுத்ராவைத் தமது

திரிவேணி சங்கமம்



வளர்த்து வந்தார் மகரிஷி. அழகு, அந்த வட்டாரம் . இந்தச் சமயத்தில்தான் ற்கே தீர்த்த யாத்திரையாக

அழகு அகஸ்தியரையும் எனவே, அவளைத் திரு விரும்பினார். 'என்னை பிரிந்திருக்கக் கூடாது. கொடுத்தால் நானும் திரு ன்!' என்று லோபா முத்ரா ஒப்புக் கொண்டார் அகஸ்

றகு, ஒருநாள், பிரம்மகிரி ள்ள கனகா ஆற்றுக்கு ஸ்தியர். அப்போது அவர் கமண்டலத்துக்குள் நீராக





உருமாற்றி வைத்து விட்டுச் சென்றார். செல் லும் போது, தமது சீடர்களிடமும் விஷயத் தைக் கூறி, கமண்டலத்தைப் பத்திரமாகப் பாதுகாக்குமாறு கூறி விட்டுச் சென்றார்.

சென்றவர் நீண்ட நேரமாகியும் திரும்பி வரவில்லை.

● பிரம்மகிரி சிகரத்திலிருந்து பார்க்கும்போது கீழே தெரியும் தலைக் காவேரி...

அகஸ்தியர், தனக்குக் கொடுத்த வாக்குப்படி நடந்து கொள்ளவில்லையே என்கிற கோபம் லோபமுத்ராவுக்கு. அதனால் கமண்டலத்திலிருந்து எகிறிக் கீழே குதித்தாள்.

இதைக் கண்ட சீடர்கள், அகஸ்தியர் திரும்பி வரும் வரை எங்கும் போக வேண்டாமென்று லோபமுத்ராவைக் கெஞ்சிக் கேட்டுக் கொண்டார்கள். ஆயினும் அவள் கோபம் தணியவில்லை. அவர்கள் கெஞ்சலையும் புறக்கணிக்க முடியவில்லை. அதனால் சில அடி தூரம் பூமிக்குள்ளேயே ஓடிப் பிறகு வெளிப்பட்டு, நதியாக நடக்க ஆரம்பித்தாள் லோபமுத்ராவான காவேரி.

அங்கிருந்து புறப்பட்ட காவேரி கீழிறங்கிச் சுமார் எட்டு கி.மீ. தூரத்திலுள்ள பாகமண்டலா என்னும் இடத்திற்கு வந்தபோது, அங்கே ஆசிரமம் அமைத்துச் சிவ பெருமானை பூஜித்து வந்த பாகண்ட மகரிஷியும் அவரது பத்தினியும் சிவனை வழிபட்டுக் காவேரியின் பயணத்தைத்

கமலமனராஜன்



''மூத்து, திகம்பரம், குப்புசாமி, சண்முகம், ஆறுமுகம், ராஜாபாதர் ஆகியோரைக் கட்சியிலிருந்து விலக்கியிருக்கிறோம்!''

''தலைவரே! கட்சியிலே இருக்கிறதே அவ்வளவு பேர்தான்!''

- கார்த்திக் ராஜா

---

தடுத்து நிறுத்தக் கோரினர். ஆயினும் முடியவில்லை. இருப்பினும் பாகண்ட மகரிஷியின் வேண்டுதலுக்கு இரங்கிய காவேரி, அந்த இடத்தை ஒரு புண்ணிய க்ஷேத்திரமாக ஆசீர்வதித்துவிட்டுத் தனது பயணத்தைத் தொடர்ந்தாள்.

இதற்கிடையில் ஆசிரமத்திற்குத் திரும்பிய அகஸ்தியர், விஷயமறிந்து, காவேரியைத் தொடர்ந்து சென்றார். தலைக்காவேரியிலிருந்து 37 கி.மீ. தூரத்திலுள்ள பாலமுரி என்னுமிடத்தில் காவேரியைச் சந்தித்தார்.

அகஸ்தியரோடு, அங்கிருந்த அரசனும் மக்களும் சேர்ந்து, காவேரியின் பயணத்தை முடிக்கக் கோரியபோதுதான் சாந்தமடைந்தாள். ஆயினும் மானுட நலனுக்காகத் தான் ஆறாக உருவெடுத்ததை மாற்றிக் கொள்ளத் தயாராயில்லை, காவேரி. வேண்டுமானால், இன்னொரு மானுட உருவும் எடுத்து, தனது கணவரான அகஸ்திய முனிவருக்குச் செய்ய வேண்டிய பணிவிடைகளைச் செய்வதாகக் கூறி, அதன்படியே அகஸ்தியரோடு சென்றாள்.

காவேரி நதியாக ஓடியவள், தான் ஒவ்வோர் ஆண்டும் கங்கை முதலிய புண்ணிய நதிகளோடு சேர்ந்து வந்து, தான் முதன் முதலில் கமண்டலத்திலிருந்து கீழே குதித்த இடத்தில் தீர்த்த வடிவமாகக் காட்சி தருவதாக மக்களுக்கும் அரசனுக்கும் வாக்குக் கொடுத்து ஆசீர்வதித்துச் சென்றாள்.

அன்று அகஸ்தியரின் கமண்டலத்திலிருந்து காவேரியாகக் கீழே குதித்த இடம்தான் இன்றைக்குப் பிரம்ம குண்டம் என்று அழைக்கப்படும் தலைக்காவேரி.

ஒவ்வோர் ஆண்டும் அக்டோபர் மாதம் துலாராசியில் சூரியன் பிரவேசிக்கும் அந்த முகூர்த்தத்தின்போது, இந்த பிரம்ம குண்டத்திலுள்ள காவேரி, பால் பொங்குவதுபோல் சிலகணநேரம் பொங்கி வருவாளாம். அது, அன்றைக்கு வாக்குக் கொடுத்தபடி, கங்கை முதலிய புண்ணிய நதிகளோடு வந்து பக்தர்களுக்குக் காவேரி தரிசனம் தரும் நேரம் என்று சொல்லுகிறார்கள். அப்போது, அந்தத் தீர்த்தத்தை எடுத்து பக்தர்களின் மேல் தெளிப்பார்கள். அது மிகப் பெரிய புண்ணியப் பேறு என்று கருதப்படுகிறது!

தலைக்காவேரிக்குச் சற்று உயரத்தில் சிவ, கணேச ஆலயங்கள். அகஸ்தியர் தமது தவவலிமையால் மணலையே லிங்கமாக்கி வழிபட்டாராம். அந்த லிங்கம்தான் இப்போதும் அங்கே காட்சி தருவதாகச் சொல்கிறார்கள். அகஸ்தியர் வழிபட்டதால், அகஸ்தீஸ்வரர் என்று பெயர் பெற்றார் ஈசன்.

இந்தக் கோவிலை ஒட்டிய வட புறத்தில் இருப்பது பிரம்மகிரி சிகரம். கோவிலிலிருந்து முன்னூறு அடி உயரம். இந்தச் சிகரத்தில்தான் சப்தரிஷிகளும் வந்து தவம் செய்தார்கள் என்பது ஐதீகம். சிகரத்தின் மேலிருந்து வடபுறத்தில் கீழே பார்த்தால் கனகா நதியின் உற்பத்தி ஸ்தானம் பளிச் சென்று தெரிகிறது.

இந்தக் கனகாதான் பாக மண்டலாவில் காவேரியோடு கலக்கிறாள். தவிர, சுஜ்யோதி நதி, சரஸ்வதி மாதிரி கண்ணுக்குத் தெரியாமல் அந்தர்வாகினியாக வந்து கலப்பதாகவும் ஐதீகம். அதனால் பாக மண்டலா திரிவேணி சங்கமமாகிறது. இங்கு தலை முழுகுவது மிகவும் புண்ணியம்.

தவிர, பாகமண்டலா க்ஷேத்திரமே முன்னோர்கள் வசிக்கும் தலமாகத்தான் சொல்லப்படுகிறது. அதனால் இங்கு வந்து பித்ருக் கடன்களைச் செய்யும் போது, பித்ருக்கள் மிகவும் சந்தோஷமடைவார்கள் என்பதால், பலரும் இங்கே வந்து செய்கிறார்கள்.

இந்தத் தலத்தின் இன்னொரு விசேஷம், பாகண்டேஸ்வரர் கோவில். முன்பு இங்கு வாழ்ந்திருந்த பாகண்ட மகரிஷிக்கு இறைவன் காட்சி தந்த தலம். அவர் பிரதிஷ்டை செய்து வழிப்பட்ட லிங்கமாதலால், ஈஸ்வரனும் பாகண்டேஸ்வரர் ஆனார். பாகண்ட மகரிஷிக்கு முருகனும் இங்கே காட்சி தந்தார் என்பதால் மேலும் விசேஷமாகச் சொல்கிறார்கள்.

பாகண்ட மகரிஷி முருகனையும் சிவனையும்தான் வணங்கினார் என்பதில்லை. விநாயகர், விஷ்ணு ஆகியோரையும் பிரதிஷ்டை செய்து வணங்கினார் என்பதால், பாகண்டேஸ்வரர் கோவிலுக்குள்ளேயே முருகன், விஷ்ணு, விநாயகர் ஆலயங்களும் இருக்கின்றன என்பது விசேஷத்திலும் விசேஷம்!

வண்ணப்படங்கள்: கோபிநாத்

சம்மர் ஷவர் !!

# லிவ்பெட்

## ஹங்காமா!




**லிவ்பெட்** பாட்டில்கள்

* முதன்மையான தரம்
* அழகிய கண்கவர் வடிவங்கள்
* மனதை கொள்ளை கொள்ளும் நிறங்கள்.




மேலும், நீங்கள் வாங்கும் ஒவ்வொரு **லிவ்பெட்** பாட்டிலுடனும் ஒரு மீரா ஹெர்பல் சீயக்காய் பவுடர் சாஷே இலவசமாக கிடைக்கிறது.

## இந்த அரிய வாய்ப்பை நழுவ விடாதீர்கள்!
## முதன்மையான பெட் பாட்டில்! புதிய வடிவங்களில்!
## இலவச சிறப்புப் பரிசுடன்!



**லிவியா பாலிமெர் பாட்டில்ஸ் பி.லிட்.,**
மண்டையூர் சாலை, மண்டையூர், புதுக்கோட்டை மாவட்டம்.
தமிழ்நாடு - 622515 ☎ 04339 - 418/472.

14.8.1994 வரை இந்த சலுகை தமிழ்நாடு, பாண்டிச்சேரி மற்றும் கேரளாவில் கிடைக்கும்.
முந்துங்கள், இந்த அரிய வாய்ப்பை நழுவ விடாதீர்கள்.

லிவ்பெட் பாட்டில்கள் இச்சலுகை இல்லாமலும் கிடைக்கின்றன.

# OWN YOUR FLAT AT MADRAS

FLATS UNDER CONSTRUCTION




- ▲ உங்கள் பட்ஜெட்டுக்கு ஏற்ற வகையில் லக்ஸ் ஃபிளாட்டுகளும் பங்களாக்களும் சென்னை நகரின் பல்வேறு கௌரவமான பகுதிகளில் கிடைக்கும்.
- ▲ கட்டடப்பணியின் முன்னேற்றத்தையொட்டி, வட்டியில்லாத தவணைமுறையில் கட்டணம் செலுத்தலாம். அல்லது மொத்த கட்டணமும் செலுத்தி பத்து சதவிகிதம் தள்ளுபடி பெறலாம்.
- ▲ முன்னணி நிதி நிறுவனங்கள் மூலம் கடன் வசதி செய்து தரப்படும்.
- ▲ நவீன வசதிகளுடன் கூடிய கட்டடங்கள் ரசனையுடன் அழகாக வடிவமைக்கப்படுகின்றன.
- ▲ தரமான கட்டமைப்பு; நிர்ணயித்த காலக்கெடுவுக்குள் முடிக்கப்படும்.




## ASSOCIATED BUILDERS

2nd Floor, 26, Ranganathan Street, T. Nagar, Madras - 600 017. INDIA
Ph : Off : 440224 / 440210. Res : 2345244. Fax : (044) 2344333

## 75. வானரங்களின் களியாட்டம்

“மகேந்திரமலை மேலிருந்து நான் ஆகாயத்தில் கிளம்பியது உங்களுக்குத் தெரியுமே. கிளம்பி சமுத்திரத்தைத் தாண்டி ஆகாயத்தில் சென்று கொண்டிருந்தபோது திடீர் என்று கடலிலிருந்து முன் அங்கே இல்லாத ஒரு மலை கிளம்பிற்று. 'ஓகோ! என்னைத் தடுப்பதற்கு இது ஒன்று ஏதோ நிமிர்ந்து என் வழியை அடைக்கிறது. இதை உடைத்து எறிய வேண்டும்' என்று நிச்சயித்தேன். நிச்சயித்துப் பொன் மயமான அந்த மலையை என் வாலால் அடித்தேன். மலை அந்த அடியை வினயமாக வாங்கிக் கொண்டு மிக இனிய குரலில் 'மகனே! நான் பகைவனல்ல. உன் தந்தையால் காப்பாற்றப்பட்டு நன்றி மறவாதவன் நான். என்னைக் கொல்ல வந்த இந்திரனுடைய வஜ்ராயுதத்தினின்று தப்பி, உன் தகப்பனார் வாயுவினுடைய உதவியால் பறந்து கடலில் மூழ்கி மறைந்து பிழைத்திருக்கிறேன். முன் நாட்களில் மலைகளெல்லாம் சிறகு பெற்று உலகம் பயந்து நடுங்கும்படி இங்குமங்கும் ஆகாயத்தில் பறந்து கொண்டிருந்தன. அந்தக் காலத்தில் இந்திரன் உலகத்தின் பெரும் பயத்தைத் தீர்க்க மலைகளைத் துரத்தித் துரத்தி அவற்றின் சிறகுகளை வெட்டித் தள்ளினான். அப்போது வாயு பகவான் எனக்குச் செய்த உதவியால் அல்லவா நான் சிறகுடன் பறந்து கடலில் மூழ்கித் தப்பினேன்? அந்த உதவியை நான் மறக்கவில்லை. நீ ஆகாயத்தில் தாவி யாரும் செய்யாத கஷ்டமான காரியத்தைச் செய்கிறாய். உனக்குச் சிரமம் தீர வந்து நிற்கிறேன். என்மேல் கொஞ்ச நேரம் தங்கி இளைப்பாறிப் பிறகு ராம காரியத்தைப் பூர்த்தி செய்யச் செல்வாய்' என்றான். நான் இந்த உபசாரத்தைப் பெற அவகாசமில்லை என்று சமாதானம் சொல்லி, மலையிடம் விடைபெற்றுக் கொண்டு தங்காமல் சென்றேன்.”

இவ்வாறே பிறகு ஒன்றன்பின் ஒன்றாக சமுத்திரம் தாண்டும்போது நடந்த நிகழ்ச்சிகள், லங்கா நகரம் பிரவேசித்த போது நடந்த நிகழ்ச்சிகள், நகரத்திலும் ராவணனுடைய அரண்மனையிலும் தேடிச் சீதையைக் காணாமல் போனது, பிறகு அசோகவனத்தில் போய்ச் சீதையைக் கண்டது, ராவணன் வந்து சீதையை வருத்திக் கேட்டுக் கொண்டது, சீதை அவனைத் துச்சமாக எண்ணிப் பேசியது, ராக்ஷசன் சீதையைப் பய முறுத்தியது, ராக்ஷசிகள் சீதையைப் பலவாறு தொந்தரவு செய்து பயமுறுத்தியது, சீதை உயிர் நீக்க நிச்சயித்தது, பிறகு சீதையுடன் தான் பேசி ராமனைப் பற்றிச் செய்தி சொன்னது எல்லாம் ஒன்றும் விடாமல் ஹனுமான் வானர வீரர்களுக்குச் சொன்னான்.

சக்கரவர்த்தித் திருமகன்

சீதை தனக்குச் சொன்னதையெல்லாம் கண்களில் நீர் ததும்பச் சொன்னான். பிறகு வனத்தை அழித்ததையும், ராக்ஷச வீரர்களைக் கொன்றதையும், இந்திரஜித்தால் கட்டப்பட்டு, ராவணன் முன் கொண்டு போகப்பட்டதையும், வாலுக்குத் தீ வைக்கப்பட்டதையும், நகரத்தைத் தான் கொளுத்தியதையும் எல்லாம் நடந்தவாறு முழுக் கதையும் வானரர்களுக்கு ஹனுமான் சொன்னான்.

இம்மாதிரி கட்டங்கள் வரும்போது வால்மீகி ராமாயணத்தில் ஒன்று நாம் காண்கிறோம். முன் நடந்த நிகழ்ச்சிகளை ஏதேனும் ஒரு பாத்திரம் வழியாகத் திரும்பச் சொல்ல நேரும் இடங்களில் தயங்காமலும் ஏதும் விடாமலும் எல்லா நிகழ்ச்சிகளையும் மிக அழகாக மறுபடியும் கவி பாடுகிறார். பாராயணமாகப் படிப்போருக்கு இது மிக ஆனந்தம் தருகிறது. விஸ்தார காவியங்

ராஜாஜி




களில் இது ஒரு தனி அழகு. இங்கே நான் அந்த மாதிரி நடந்ததையெல்லாம் மறுபடியும் ஹனுமான் வாயில் வைத்துத் தமிழில் சொல்லுவது சரியாக இராது. அதிகம் நீண்டு போகும். படித்ததையே படிக்க வேண்டியதாகும். அது இந்தக் காலத்தோருக்குப் பிடிக்காது!

ஏதேனும் அபாயம் தீர வேண்டும் அல்லது எடுத்த காரியம் ஏதேனும் வெற்றிகரமாக நடைபெற வேண்டும் என்று விரும்புகிறவர்கள் சுந்தர காண்டத்தை பாராயணம் பண்ணுவது நம்முடைய வழக்கம். கடலைத் தாண்டும் போதும் பிறகும் நடந்த வரலாற்றை ஹனுமான் எடுத்துச் சொல்லும் இந்த அத்தியாயத்தைப் பாராயணம் செய்தால் சுந்தரகாண்டம் முழுதும் பாராயணம் செய்த பலனை அடையலாம்.

நடந்த நிகழ்ச்சிகளை ஒன்றும் விடாமல் விஸ்தாரமாகச் சொல்லி முடித்து ஹனுமான் சொன்னான்:

''நம்முடைய முயற்சி இவ்வாறு சுபமாக முடிந்தது. ஆனால் இதற்கெல்லாம் மூல பலம் சீதையின் சீலமே, அவள் சக்தியே என்பதை நாம் உணர வேண்டும். என் மனத்தில் அந்தப் புனித தேவியின் காலடியில் இன்னும் நான் பணிந்தே நிற்கிறேன். சீதையை நினைக்கும் போது அவளை இந்த ராக்ஷசன் எவ்வாறு பிடித்துத் தூக்கிச் செல்ல முடிந்தது. அந்தக் கணமே எரிந்து அவன் சாம்பலாகப் போயிருக்க வேண்டுமல்லவா என்று வியக்க வேண்டி இருக்கிறது. ஆனால் ராவணனுடைய தபோபலமும் பெரிது. அது அவனை ஓரளவு

இன்னும் காத்து வருகிறது. ஆயினும் இஷ்டப் பட்டால் சீதை அவனை எரித்தே யிருப்பாள். தன் கணவன் ராமசந்திரனால் இவன் தண்டனை அடைய வேண்டும் என்று சகித்துக் கொண்டிருக்கிறாள். இப்போது உங்கள் யோசனை என்ன? இப் போதே லங்கை சென்று ராவணனை வதம் செய்து லங்கையையும் அதன் அரக்கர் கூட்டத்தையும் நாமே அழித்து விட்டு சீதையையும் அழைத் துக் கொண்டு ராமனிடம் தேவியைச் சமர்ப்பித்துச் சந்தோஷிக்கச் செய்ய லாமா? இதைப் பற்றி நீங்கள் யோசிக்க வேண்டும்.

''நமக்கு இதைச் செய்யும் சக்தி இல்லாமல் இல்லை. நான் ஒருவ னாகவே அந்தக் கூட்டத்தை அடை யாளமின்றி அழித்து விடுவேன். ஜாம்பவான் ஒருவரே போதும், அந்த அரக்கர் சேனை முழுவதையும் அழிக்க. வாலி புத்திரன் யுவராஜா ஒருவன் போதாதா அவர்களை சம் பூரணமாக வதம் செய்வதற்கு? பனஸன், நீலன் இவர்களுடைய பராக்கிரமம் போதும், லங்கையை ராவணனையும் சேர்த்து அழித்து வெற்றியுடன் திரும்பிவர. மைந்தன், த்விவிதன் இந்த அசுவனி புத்திரர்கள் இருவருமே சென்று இந்தக் காரி யத்தை எளிதில் முடித்து விட்டுத் திரும்புவார்கள். பிதாமகருடைய வரங்களைப் பெற்றிருக்கிற இவர் கள் வெகு எளிதில் ராவணனைக் கொன்று வெற்றி முழக்கத்துடன் திரும்புவார்கள்.

''இப்படி நமக்குள் பலர் இருக்கி றார்கள், ராவணனையும் அவன் அரக் கர் கூட்டத்தையும் அழிக்க வல்லவர் கள். லங்கையில் நான் முழக்கம் செய்துமிருக்கிறேன். 'ராமதூதன் நான். சுக்ரீவனுடைய மந்திரி. உங் களை வதம் செய்ய வந்திருக் கிறேன்'என்று கர்ஜித்திருக்கிறேன். துஷ்டன் ராவணனுடைய நந்தவனத் தில் சிம்சுபா மரத்தடியில் ராக்ஷஸி களால் சூழப்பட்டுச் சிறைபட்டுக் கிடக்கிறாள் வைதேஹீ என்கிற அந்த பதிவிருதா தேவி. மேகங்களால் மூடப்பட்டுத் தெரிந்தும் தெரியா மலுமிருக்கிற சந்திரனைப்போல் அசோகவனத்தில் சிறைப்பட்டுக் கிடக்கிறாள். எப்போது ராமன் வரு





# சேவையின் புனிதத்தை தம் வாழ்வில் செயல்படுத்திக் காட்டினார் ஒரு தொழிலதிபர்.

சேவை, எளிமை, தன்னடக்கம், அமைதி ஆகிய குணப் பண்புகளுடன் புண்ணியப் பாதையில் வாழ்வுப் பயணத்தை மேற்கொண்ட அப்பெருந்தகை சாந்தமும் சன்மார்க்கமும் கொண்ட ஆன்மீகச் செல்வராகத் திகழ்ந்தார்.

வருமானத்தை ஈட்டும் நோக்கத்தில் மட்டும் பெருந்தகை பி. ஏ. சி. ராமசாமி ராஜா தொழில்களை தொடங்கினாரில்லை! சமுதாயப் பொறுப்புடன் தாம் செயலாற்றிய சுற்றுப்புற மக்களுக்கு வளமான வாழ்வளிக்கும் குறிக்கோளுடன்தான் பெருந்தொழில்களை உருவாக்கினார் அப்பெருந்தகை. தொடங்கிய தொழில்களெல்லாம் மலர்ச்சி பெற்று, வெற்றி மணக்கும் வேளையிலும், அப்பெருமகனாரின் பணிவும் அடக்கமும் மக்கள் மனத்தில் நின்று நிலைபெற்று என்றும் நினைக்கத்தக்க மாமனிதராய் விளங்கினார்.

அப்பெருந்தகை உருவாக்கிய 'ராம்கோ' இன்று ஒன்பது நிறுவனங்களாக, பதினாறு தொழில் பிரிவுகளாக பருத்தி நூல், துணி, சிமெண்ட், ஃபைபர் சிமெண்ட் ஷீட்டுகள், குழாய்கள், மருத்துவத் துணி, பஞ்சு, ஸாஃப்ட்வேர் சிஸ்டம், பிளாஸ்டர் ஆப் பாரிஸ் ஆகிய பணிகளில் தழைத்துச் செழித்து வளர்ந்து வருகின்றது.

கல்விச் சாலைகள், மருத்துவ மனைகள், அறக்கட்டளைகள் ஆகியவை உருவாக்கம் கொள்ளவும், அடக்கத்துடன் அப்பணியில் சேவை செய்யவும் இந்த வளர்ச்சியும் வளமும் உள்ளுணர்வைத் தூண்டின.

## நன்னெறியும் நல்லறமும் கொண்ட நிர்வாக முறையைப் பின்பற்றிய ராம்கோ குரூப் நிறுவனருக்கு இது ஒரு புகழாரம்.

ராஜபாளையம் மில்ஸ் லிமிடெட் • ராஜபாளையம் ஸ்பின்டெக்ஸ் • மதராஸ் சிமெண்ட்ஸ் லிமிடெட்
• ராம்கோ இண்டஸ்ட்ரீஸ் லிமிடெட் • ராம்கோ சிஸ்டம்ஸ் • ஸ்ரீ ராம்கோ ஸ்பின்னர்ஸ்
• தி ராமராஜு சர்ஜிக்கல் காட்டன் மில்ஸ் லிமிடெட் • சுதர்சனம் ஸ்பின்னிங் மில்ஸ் • ஜெயராம் மில்ஸ் லிமிடெட்
• ஸ்ரீ விஷ்ணு சங்கர் மில்ஸ் லிமிடெட் • ஆர்த்தோஃபிக்ஸ் இந்தியா லிமிடெட்.

அறச் சிந்தனையும், தெய்வத் திருவருளும் பல்ப்பல நலந்தரும் பணிகளை ஆற்றிட எங்களுக்கு வாய்ப்புகளை நல்கின. அவை:

- ராஜா அறக்கட்டளை
- பி. ஏ. சி. ராமசாமி ராஜா கல்வி அறக்கட்டளை
- பி. ஏ. சி. ராமசாமி ராஜா பாலிடெக்னிக்
- பி. ஏ. சின்னய ராஜா மெமோரியல் ஹையர் செகண்டரி பள்ளி
- பி. ஏ. சி. ஆர். அம்மணி அம்மாள் பெண்கள் ஹையர் செகண்டரி பள்ளி
- சின்மயா வித்யாலயா பி. ஏ. சி. ராமசாமி ராஜா மெட்ரிக்குலேஷன் ஹையர் செகண்டரி பள்ளி
- சின்மயா வித்யாலயா நர்சரி பள்ளி
- பி.ஏ.சி.ஆர். சேதுராமம்மாள் தொடக்கப் பள்ளி
- டி.ஏ.கே. எம். ராமம்மாள் தொடக்கப் பள்ளி



அமரர் பி. ஏ. சி. ராமசாமி ராஜா அவர்கள்
ராம்கோ குரூப் நிறுவனர்.




# ராம்கோ குரூப்

FOUNTAINHEAD 1056-94

வான் வருவான் என்று அவன் தியானமாகவே, வேறு எதையும் சிந்திக்காமல் வாடி வதங்கித் தவமிருந்து வருகிறாள். கொடிய ராக்ஷஸிகள் அவளைத் துன்புறுத்திக் கொண்டிருப்பதை இந்தக் கண்களால் பார்த்தேன். காட்டில் துன்புறுத்தப்பட்ட மானைப் போல் அந்த வனத்தில் அவலக்ஷண சொரூபங்களான அரக்கிகளின் மத்தியில் அகப்பட்டுக் கொண்டு வருந்தி வருகிறாள். அவளுடன் நேரில் நின்று பேசிச் சமாதானப் படுத்தினேன். 'ராம லக்ஷ்மணர்கள் வருவார்கள். ராமனால் ராவணன் சீக்கிரமாகவே வதம் செய்யப்படுவான்' என்று சொல்லியிருக்கிறேன். யோசித்து இனி செய்ய வேண்டியது என்னவென்று தீர்மானியுங்கள்'' என்றான்.

இதைக் கேட்டுக் கொண்டிருந்த அங்கதன் கோபக் கொதிப்புடன் குதித்தெழுந்து ''நான் ஒருவனே போதும். அப்படியிருக்க நாம் இத்தனை வீரர்களும் இருக்கிறோம். இவ்வளவு நாட்களான பின் நாம் சீதையை அழைத்துப் போகாமல் ராமனிடம் வெறுங்கையாகத் திரும்பிச் செல்வது சரியல்ல. லங்கை சென்று, அரக்கர் சேனையையும் ராவணனையும் வதம் செய்து சீதையுடன் கிஷ்கிந்தை திரும்புவோம்'' என்றான்.

யுவராஜன் சொன்னதைக் கேட்ட ஜாம்பவான் மெதுவாகப் பேசினான்.

''அப்படியல்ல, என் அன்புக்குரிய ராஜகுமாரனே! நாம் ராம லக்ஷ்மணர்களிடம் விஷயத்தையெல்லாம் சொல்லி, அதன்மேல் அவர்கள் சொல்லுவது போல் செய்ய வேண்டும். ராகவனுடைய காரியத்தை அவர் எண்ணத்தின்படி முடிவு செய்ய வேண்டும். அதுவே முறை'' என்று மிக முதிர்ந்த அறிவுள்ள ஜாம்பவான் சொன்னான்.

இதுவே சரியென்று வானரக் கூட்டம் ஹனுமான் அங்கதன் எல்லாரும் உள்பட ஒப்புக் கொண்டார்கள். அங்கிருந்து ஆகாயத்தில் கிளம்பி, கிஷ்கிந்தை நோக்கி மிக வேகமாகச் சென்றார்கள்.

வானர ராஜனுடைய நந்தவனத்துக்கு அருகில் இறங்கினார்கள். அந்த வனத்தில் புகுந்து தேன்குடித்து, பழங்கள் உண்டு, காவற்காரர்கள் என்ன சொன்னாலும் கேட்காமல் அவர்களையும் அடித்து விரட்டி, எதேச்சையாக நடந்து கொண்டு தோட்டத்தையும் நாசம் செய்தார்கள். அவர்கள் செய்த களியாட்ட அட்டகாசத்தைப் பொறுக்காத ததிமுகன் - அவன் நந்தவனத்துக்குக் காவலதிகாரியும் சுக்ரீவனுடைய மாமனும் - வேகமாகச் சென்று அரசனிடம் போய் ''நந்தவனம் பாழாய்ப் போயிற்று. தெற்கே சென்று வானரர்கள் திரும்பிவந்தவர்கள் அங்கே இறங்கி வெகு மோசமாக நடந்து கொள்கிறார்கள். நான் என்ன சொல்லியும் கேட்கவில்லை. என்னையே அடித்தும் குத்தியும் புறக்கணித்து அவமானப்படுத்தி, இஷ்டப்படி தேன்குடித்து, பழங்கள் பறித்துத் தின்று விட்டுப் போதையாகக் கிடக்கிறார்கள். செடிகளையும் கொடிகளையும் நாசமாக்கி விட்டார்கள். இவர்களை உடனே அரசன் தண்டிக்க வேண்டும்'' என்றான்.

சுக்ரீவன் விஷயத்தைக் கண்டு கொண்டான். 'ஹனுமானும் ஜாம்பவானும் அங்கதனும் காரியசித்தியடைந்து வந்து விட்டார்கள், வெற்றி வெறியில் இவ்வாறு செய்திருக்கிறார்கள்' என்று உணர்ந்து கொண்டு லக்ஷ்மணனுக்கு விஷயத்தைச் சொன்னான்.

''ததிமுகனே! உடனே அவர்கள் அனைவரையும் இவ்விடம் வரச் சொல்'' என்று சுக்ரீவன் உத்தரவிட்டதும் ததிமுகனும் நிலைமையை உணர்ந்து, மிக வேகமாக ஆகாய மார்க்கமாகவே வானரர்கள் இருந்த இடம் சென்று அவர்களுக்கு அரசன் உத்தரவைத் தெரியப்படுத்தினான்.

(தொடரும்)



''அந்த அதிகாரிக்கு மானேஜர் பாராட்டு விழா நடத்துகிறாரே எதற்கு?''

''ஆபீஸ் வாசலில் உள்ள 'அன்புடன் வருக' என்ற வாசகத்தைத் தூக்கி எறிஞ்சுட்டு, 'அன்பளிப்புடன் வருக'ன்னு துணிஞ்சு எழுதினாராம்!''

- மு.க. கண்ணன்

இப்பொழுது

# மாபெரும் தமிழ்ப் புத்தாண்டு சுலபத் தவணைத் திட்டம்

## உஷா எக்ஸ்போர்ட் வெரைட்டி

## மாதம் ரூ. 230 மட்டுமே



நீங்கள் வாங்கும் மாடலுக்கேற்ப

இத்திட்டம் கம்பெனி ஷோரூம்களில் மட்டுமே !

முந்துங்கள் !

இத்திட்டத்தின் மூலம் பயனடையுங்கள்.

- **கம்பெனி ஷோரூம்,**
  49, ஸ்டேட் பாங்க் ரோடு,
  கோவை ✆ : 212374
- **கம்பெனி ஷோரூம்**
  118, ஒப்பணக்காரத் தெரு
  கோவை ✆ : 34729
- **கம்பெனி ஷோரூம்**
  51, செர்ரி ரோடு
  சேலம் ✆ : 65564
- **கம்பெனி ஷோரூம்**
  31, டவுன் ஹால் ரோடு,
  மதுரை ✆ : 24971
- **கம்பெனி ஷோரூம்**
  1, திரு.வி.க. ரோடு,
  (ஆனந்த் தியேட்டர் எதிரில்)
  சென்னை ✆ : 8262604

# மறக்கப்பட்

● பழங்கலை விளையாட்டுக்களில் இன்றைக்கும் தேசிய அளவில் பரபரப்பாக இருப்பது கபடி...



ஆடு புலி ஆட்டம், பரமபத சோபனப்படம் என்றெல்லாம் அறைக்குள்ளே ஆடும் ஆட்டங்கள் சில இன்றளவும் புதிய வடிவங்கள் எடுத்துப் புழக்கத்தில் இருந்தாலும், உடலுக்கும் உள்ளத்துக்கும் அறிவுக்கும் வலுவூட்டிய நம்முடைய பரம்பரையான பல விளையாட்டுக்களை இப்போது நாம் சுத்தமாகவே மறந்துபோய் விட்டோம்.

தமிழ் நாட்டுப் பெண்கள் மிகவும் விரும்பி ஆடிய பாண்டி ஆட்டம் இன்று எத்தனை பேருக்குத் தெரியும்? மெருகு ஏற்றிய மாதிரி சாணம் தெளித்துக் கெட்டிப் பட்ட மண்தரையில் கோலம் போட்ட மாதிரி கோடுகிழிக் கட்டங்கள் போட்டு, ஒற்றைக் காலை மடக்கி, ஒற்றைக் காலில் குதித்து ஆடுகிற இந்தப் பாண்டி ஆட்டத்துக்குத் தேவை ஒரு சிறிய ஓட்டாஞ்சில் மட்டுமே. அதை லாகவமாக வீசிப் போட்டுக் குதித்து மிதித்து, அதை ஒரே காலின் பாத நுனியால் செதுக்கித் தள்ளி... வளரும் பெண் குழந்தைகளின் கால்களுக்கும் உடலுக்கும் வலுவூட்டுகிற ஆட்டம் இது!

குஜராத் மாநிலத்தில் தேசிய விளையாட்டாகவே கௌரவம் பெற்றுள்ளது 'தண்டியா ராஸ்!' கண்ணன் கோபிகைகளோடு ஆடிப்பாடி மகிழ்ந்த ஆட்டம். பளபளப்பான வண்ணங்கள் பூசிய கடைசல் கழிகளைத் தாள லயத்தோடு மோதி ஒலியெழுப்பி, இடுப்பை வளைத்துக் கால்களில் தாளமிட்டுக் குதித்துச் சுற்றிச் சுழன்று

ஆடுகிற இந்தக் கோலாட்டம் தமிழகத்திலும் உண்டு.

நன்கு மழை பெய்து வளம் சிறக்க வேண்டும் என்பதற்காக, முன்பெல்லாம் கிராமப் புறங்களில் ''கோலாட்ட ஜோத்ரை'' என்றே ஒரு விளையாட்டு விழா உண்டு. சின்னஞ்சிறு பெண்கள், நந்தி தேவருக்கான சிலையைக் களிமண்ணில் வடித்து வைத்துப் பத்து நாட்கள் வழிபடுவார்கள். காலையிலும் மாலையிலும் கோலாட்டம் ஆடிச் சுற்றி வருவார்கள். அக்கம் பக்கத்து ஊர்களுக்கெல்லாம் சென்று கும்மி கோலாட்டம் ஆடி மகிழ்வார்கள். அரசர்கள், ஜமீன்தார்கள், பிரபுக்கள் எல்லாம் இந்தக் குழுக்களுக்குப் பரிசளித்து மரியாதை செய்வார்கள். ஐப்பசி மாதக் கடைசியில் தொடங்கிக் கார்த்திகை மாதம் ஆரம்பத்தில் நதியில் கொண்டுபோய், வழிபட்டு வந்த 'பஸவன்' என்கிற நந்தியைக் கரைத்து விடுவதோடு ஜோத்ரை விழா நிறைவுறும். கன்னிப் பெண்களின் திருவிழா என்றாலும் பெரியவர்களும் சேர்ந்து ஆடி உற்சாகப் படுத்துவதுண்டு.

'கும்மியும் கோலாட்டமும்' என்று தொடரே உண்டு. வெறும் கைகளை மட்டும் கொட்டி ஆடுவது கும்மி. மகாகவி பாரதியின் பாடல் நினைவுக்க வரவேண்டுமே! பெண்கள் விடுதலைக்காக அவர் பாடினார்.

'கும்மி யடிதமிழ் நாடுமுழுதுங்
குலுங்கிடக் கைகொட்டிக் கும்மியடி
நம்மைப் பிடித்த பிசாசுகள் போயின
நன்மை கண்டோ மென்று கும்மியடி!

- சின்னஞ்சிறு பெண் குழந்தைகள் இப்படிக் கும்மி கோலாட்டம், என்றெல்லாம் ஆடி மகிழ்ந்த காலங்களில் அவர்களுடைய ஆரோக்கியமும் சிறப்பாகவே இருந்தது. இன்று கலாக்ஷேத்ரா போன்று பாரம்பரியக் கலைகளைக் காப்பாற்றும் அமைப்புகளின் விழாக்களில் மட்டும் அரங்கேறுகின்றன, இவை.

பெண்கள் மட்டுமே ஆடிவந்த இன்னும் ஒரு விளையாட்டு 'ஸ்கிப்பிங்' எனப்படுகிற கயிற்றாட்டம். இப்போது இது ஒன்றுதான் உடற்பயிற்சி



# விளையாட்டுகள்



* சிலம் விளையாட்டு - மறக்கப்பட்டுவரும் கலைகளுள் ஒன்று...

என்கிற முத்திரையோடு ஆண்களையும் ஆடவைத்திருக்கிறது. 'உடல் இளைக்க வேண்டுமா, சர்க்கரையைக் கட்டுப்படுத்த வேண்டுமா.. தொப்பை குறைய வேண்டுமா? ஸ்கிப்பிங்' பழகுங்கள் என்று டாக்டர்கள் சொல்கிறபோதுதான் பதில் பேசாமல் குதிக்கத் தயாராகிவிடுகிறோம்.

'அம்மானை' என்று ஓர் ஆட்டம். மரக்கடைசல் உருண்டைகள் மூன்று. மாற்றி மாற்றி மேலே வீசி ஆடுவது. இரண்டு கைகளிலும் இரண்டு பிடித்துக் பிடித்து வீசிக் கொண்டிருக்க ஒரு பந்து மாறிமாறி மேலேயே இருக்கும்படியான ஆட்டம். இதில் மிகவும் முக்கியமானது Concentration என்கிற ஒரு முகச் சிந்தனை. நிதானம் சிறிது தவறினாலும் ஒரு பந்து கீழே விழுந்து விடும்.

அதேபோல் 'கழைக் கோடி' என்கிற சிறு காய்கள் - சிமெண்ட் நிறத்தில் இருக்கும். ஐந்து காய்களைத் தரையில் வைத்து, ஒன்றாக, இரண்டாக, மூன்றாக நான்காகத் தூக்கிப் போட்டுப் பிடிப்பார்கள். கடைசியில் ஐந்து காய்களையும் சேர்த்துப் போட்டுப் பிடிக்க வேண்டும்.

கழைக் கோடிக் காய்களின் இடத்தில் சின்னஞ்சிறு கூழாங்கற்களும் பிடிப்பதுண்டு. 'கல்லாட்டம்' என்பார்கள். கற்களைத் தூக்கி மேலே போட்டுப் புறங்கையில் ஏந்துகிற நிலையில், மூட்டு எலும்புகளில் கல் பட்டால் ஏற்படுகிற வலியும் சுகம் தான்.

பழங்கால வீடுகளில் இன்னும் வசிப்பவர்கள் பரண்மீது பாருங்கள், ஒருவேளை 'பல்லாங்குழி' அகப்பட்டாலும் அகப்படும். மரப் பலகையில் பக்கத்துக்கு ஆறாக இரண்டு வரிசைகளில் குழிகள் இருக்கும். நடுவில், இரண்டு ஓரங்களிலும் தனியாக ஒவ்வொரு குழி இருக்கும். இவற்றைக் காசிக் குழி



என்பார்கள். இவற்றில் ஒவ்வொரு சோழியும் மற்ற பன்னிரண்டு குழிகளுக்கும் ஆறு அல்லது பன்னிரண்டு சோழிகள் விதமும் நிரப்புவார்கள். பக்கத்துக்கு ஒருவராய் அமர்ந்து, இருவர் ஆடுகிற ஆட்டம் இது. நேரம் போவதே தெரியாது.

சீட்டுக் கட்டு ஆட்டத்தில் எதிராளியின் கையில் இன்னின்ன பாயிண்டுகள் இருக்கும் என்று தேர்ந்த ஆட்டக்காரர்கள் கணக்

# SYNERGY INVITES RETIRED PEOPLE TO BE ITS AMBASSADORS.

Does retirement mean lots of spare time,
a feeling of being dependent.
No longer.

Synergy introduces a special retirement perk. A new career.

A fast growing financial institution employing innovative approaches to financial, management, Synergy Financial seeks to appoint retired citizens as synergy's ambassadors.

***What you have to do?***

Moblilise fixed deposits for Synergy.

***What you should be?***

- Retired/about to retire
- Good communicative skills.

***What's in it for you?***

- Attractive remunerative package.
- Flexible working hours
- Convenience of working from your own home.
- Association with a pioneering finnancial institution.

So, if you are retired/about to retire, start a new career.
Be an ambassador for Synergy at
**Bangalore, Bombay, Coimbatore, Madras,**
**Salem, Trichur, Vijayawada.**

Interested! Write to:

The Director



## SYNERGY FINANCIAL EXCHANGE LTD

4th Floor, 98, Dr. Radhakrishnan Salai,
Madras - 600 004. Tel : 840651, 841250

● Bangalore ● Bombay ● Coimbatore ● Salem ● Trichur ● Vijayawada

***DISCOVER SYNERGY, DISCOVER GOLD.***



✱ பாண்டி ஆட்டம்..(படம்:கோபிநாத்)

கெட்டு விடுகிற மாதிரி, பல்லாங்குழி ஆட்டத்திலும் இந்தக் குழியில் சோழியை எடுத்து ஆடினால் வெற்றி கிடைக்கும் என்று கணக்கிடுகிற 'நிபுணி'கள் உண்டு.

குன்றிமணி, புளியங் கொட்டை, மொச்சை விதை.. என்று சோழிகளின் இடத்தில் - கிடைக்காதவர்கள் - பயன்படுத்துவார்கள்.

பல்லாங்குழிப் பலகைகள் பழைய கால வீடுகளில் பிருந்த கலை நுணுக்கத்தோடு இருந்ததுண்டு. மீன் வடிவத்தில், பறவை வடிவத்தில் என்று அழகாக இருக்கும். சற்று வசதியானவர்கள் பித்தளை, தாமிரம் போன்ற உலோகங்களில் ஆன வேலைப்பாடான பல்லாங்குழிகளையும் வைத்திருந்தார்கள்.

**அ**துசரி-எல்லாம் 'பொம்பளைங்க சமாசாரமாவே இருக்கே' என்று கேட்கிறவர்களுக்காக இனி-

பம்பரங்கள்: வண்ண வண்ணமாய்க் கடைசல் மரங்களில் தயாரானவை. கயிறு சுற்றி, விடுகிற வேகச் சுழற்சியில் கிறங்கும்.

'சாட்டையில்லாப் பம்பரம்போல் ஆட்டுவித்தாய் ஆண்டவனே' என்றெல்லாம் 'பாடல் பெற்ற' விளையாட்டு இது. புழுதி பறக்கும் தரைகளில், முன்பெல்லாம் அமோகமாகச் சிறுவர்கள் ஆடிய ஆட்டம் பம்பரம்.

விதம் விதமான பம்பர விளையாட்டுக்கள். எதுவானாலும் வெற்றி தோல்விக்கு அடிப்படை 'கோஸ்' எடுப்பது. சுழலும் பம்பரத்தைக் கயிற்றில் வாங்கி மேலே வீசிப் பிடிக்க வேண்டும். பம்பரம் நழுவிவிட்டால் ஆட்டம் அம்பேல்!

**கொ**ஞ்சம் ஆபத்தானது 'கிட்டிப்புள்'. மூன்றங்குலக் கட்டை ஒன்றில் இருபுறமும் கொஞ்சம் கூராய்ச் சீவியது 'புள்'. இதைத் தரையில் வைத்து முழ நீளம் உள்ள வேறு ஒரு கோலால் தட்டி எறிவது இந்த விளையாட்டின் அடிப்படை. தட்டுகிற வேகத்தில் புறப்படுகிற புள் பறவை மாதிரி 'சர்ர்'ரென்று பறப்ப தால் 'புள்' என்று பெயர் வந்திருக்கலாம். சீறிப் பாய்ந்து வருகிற புள்ளைப் பிடித்து விட்டால் எதிராளி அவுட். கிரிக்கெட் பந்தைப் பிடிக்கிற சாகசம்தான். தரையோடு வருகிற புள்ளானாலும் எடுத்துக் குறிப்பார்த்து முழுக் கழியின் மீது படுகிறபடி எறியலாம். ஆபத்து என்பது - சீறிவருகிற புள் கண், நெற்றி என்று பட்டுக் காயம் ஏற்படுத்தக் கூடும் என்பதுதான். சென்னை வட்டார வழக்கில் கிட்டிப் புள்ளைக் 'கில்லி' என்பார்கள்.

**ச**டுகுடு ஆட்டம் இப்போது எல்லோருக்கும் தெரியும். அண்மைக் காலத்தில் சி.பா.ஆதித்தனார் தமிழர் விளையாட்டு என்று இதைப் பிரகடனப் படுத்தி, இப்போது தேசிய அளவில் பந்தயங்கள் கூட ஏற்பட்டு விட்டன. சடுகுடு ஆட்டத்தில் 'மூச்சுப்' பிடிப்பதற்காகத் தென் மாவட்டங்களில் விதம் விதமான பாடல்களே உண்டு.

''வெள்ளிப் பிரம்பெடுத்து
விளையாட வந்தேண்டா.
வந்தேண்டா...

என்கிற மாதிரியான அந்தச் சிறுசிறு பாடல்களை யாராவது நூல்வடிவில் தொகுத்தால் கூடச் சுவையாகத்தான் இருக்கும்.

பரம்பரை பரம்பரையாகப் புகழோடு விளங்கிய இது போன்ற பல விளையாட்டுக்கள் இப்போது மறக்கப்பட்டுக் கொண்டிருக்கின்றன. இந்த விளையாட்டுக்களில் உடல் திறனுக்கும் அப்பால் மனவளச் செம்மைக்கும் கூட இடமிருந்தது என்பதைப் புரிந்து கொள்ளவேண்டும்.

- சுப்ர.பாலன்

# MONEY



### *OPENING UP NEW OPPORTUNITIES*

It's Chithrai Thiruvizha. Start a fruitful Tamil New Year on a happier and prosperous note. And we at **Annamallai Finance** believe in making it all better for you, putting your hard earned money to work in the best possible ways. Opening up the doorways to numerous opportunities. In utmost safety. And there is **the FA+ rating from CRISIL** to vouch for us.

Our **"Dhanalakshmi Deposit Scheme"** has been introduced from 1st Jan '94. Write in today.

*Happy Tamil New Year*

**Awarded FA + by CRISIL**




## ANNAMALLAI FINANCE LTD

Regd. Office: 252, Mettupalayam Road, Coimbatore - 641 043

***Your Prosperity is our Concern***

SASI / 423 / 94

* This is in continuation to the Statutory Advertisement released in The Hindu on 5.8.93

Contact Telephone Nos: ● **Bombay**: 243602 ● **Bangalore**: 227365 ● **Coimbatore**: 231797 ● **Delhi**: 5752417 ●**Ernakulam**: 360425 ● **Erode**: 79800 ● **Gobichettipalayam**: 2924 ● **Kallakurichi**: 396 ● **Karaikudi**: 3029 ● **Kozhikode**: 58837 ● **Madurai**: 24450 ● **Madras**:Spencer Plaza Branch: 8522538 Mount Road Branch: 8262430 Anna Nagar Branch: 6263447 T.Nagar Branch: 440248 Mylapore Branch: 4992993 ● **Pondicherry**: 38507 ● **Pollachi**: 4595 ● **Pune**: 667178 ● **Salem**: 68899 ● **Sathyamangalam**: 20420 ● **Tirunelveli**: 25144 ● **Trichy**: 43304 ● **Vellore**: 26371.

**Special Deposit Mobilisation period from April to June '94**

பொன்விழா பரிசு நாவல்

# நரகமான நகரம்

## 1

நிஷா வி.டி. டெர்மினஸில் ஹார்பர் லைன் ப்ளாட்பாரத்தில், மேற்கு விளிம்பில் நின்று கொண்டிருக்கும், இந்தக் கதை ஆரம்பிக்கும் நேரம், காலை ஒன்பது மணி. ஏழு மணி அளவில் போன் போட்டு பிரகாஷுக்குச் சொல்லிவிட்டு, எட்டு மணிக்கு வீட்டை விட்டுக் கிளம்பி, இப்போது அவனுக்காகக் காத்துக் கொண்டிருக்கிறாள். அவள் நிற்கும் இடம்... அவன் சொன்ன இடம்.

அவள் நின்று கொண்டிருக்கும் பரப்பிலிருந்து வி.டி. ஸ்டேஷனையே முழுமையாகப் பார்க்க முடிந்தது. ஸ்டேஷன் எங்கே ஆரம்பித்து எங்கே முடிகிறது என்று சொல்ல வேண்டுமென்றால்... ரொம்ப சிரமப்பட வேண்டி வரும். எங்கேயிருந்து பிரகாஷ் வருவான் என கணிக்க இயலாமல், பவுண்டரி லைன் ஃபீல்டர் போல் நின்று கொண்டிருந்தாள். ஆனால் கண்டிப்பாக வருவான் என்று நம்பிக் கொண்டிருந்தாள்.

ஜப்பானிய திருவிழாக்களில் உபயோகிக்கப்படும், நீண்ட யாளிகள் போல் லோக்கல் டிரெயின்கள் வந்து போய்க் கொண்டிருந்தன. மக்களை அள்ளிக் கொண்டு வந்து உதிர்த்துச் சென்றன.

அவற்றிலிருந்தும் விடுபட்ட ஜனங்கள் அனைவரும் ப்ரோக்ராம் எழுதி இயக்கப் பட்ட ரோபோக்கள் போல் யோசிக்காமல் இயங்கிக் கொண்டிருந்தார்கள். யாருமே யாரையும் கவனிக்காமல் போய்க் கொண்டிருந்தார்கள்.

நிஷாவுக்கு அந்தக் கண நேரத்தில் ஜனனம், மரணம் ஆகிய இரண்டுக்கும் இடைப்பட்ட காலகட்டத்தில் உள்ள ஓர் உண்மை விளங்கியது. எல்லாமே நடிப்பு; எல்லாருமே நடிகர்கள். கதை, வசனம் எழுதி யாரோ டைரக்ட் செய்து கொண்டிருக்கிறார்கள். அவர்தான் பரம்பொருளோ?

கரகரப்பான ஸ்பீக்கரில் ஒரு பெண் "லோக்கல் ஆன் ப்ளாட்பாரம் நம்பர் டூ. இஸ் தி ட்ரெயின் ஃபார் பாந்த்ரா. இட் வில் ஹால்ட் அட் ஆல் ஸ்டேஷன்ஸ்" என்றபோது... அவள் தோளில் பட்ட கரம் பிரகாஷுக்குச் சொந்தமானது!

அதிர்ந்து திரும்பி, "ஹாய்" என்றாள்.

"ஸாரி.. எவ்வளவு நேரம் வெயிட் பண்ணினே?"

"அரை மணிக்கு மேல் இருக்கும்."

"வரும் போது அப்பாகூட சண்டை போட்டேன். அதான் லேட்."

"சொன்னால் கேட்கமாட்டே பிரகாஷ் நீ.... பெரியவங்க எதுவும் அவங்க லாஜிக் படிதான் பேசுவாங்க. அதை அப்படியே விடுன்னு நான் சொல்லியும் கேட்கற தில்லே நீ. வாக்குவாதத்தால என்ன சாதிக் கிறே?"

"இந்த இண்டர்வியுவில் எனக்கு எந்த விதமான இண்ட்ரெஸ்ட்டும் இல்லை. அதனாலதான் நான் இண்டர்வியுவுக்கு போகலை. நிஷா வருவா. நேரா மெட்ரோ போய் சினிமா பார்த்துட்டு வரேன்னு சொல்லிட்டு வந்தேன்."

"பிரகாஷ் யு ஆர் எ ஃபூல் யார்."

"சொல்லு! இன்னும் என்ன பாக்கி உண்டோ சொல்லு! அப்பா ஒரு பக்கத்துல என்னை வார்த்தையால உதைக்கிறார். நீ இன்னொரு பக்கத்துல மட்டி, மடையன்னு திட்டு!"

"ஸாரி...ஸாரி பிரகாஷ்..." என்றவள் அவன் இடுப்பில் கை வைத்துக் கன்னத்தை ஒற்றினாள். முத்தம் தந்த இனிமையில் சிரிக்க ஆரம்பித்தான்; இடுப்பைச் சுற்றிய கையை எடுக்க விடாமல் பிடித்துக் கொண்டான்.

"பிரகாஷ்... உன்னோட ட்ரெஸ் சரியில்லை."

"ஏன்?"

"கறுப்பு பேண்ட் வெள்ளைச் சட்டையெல்லாம் பழைய ஃபேஷன்."

"விட்டுரு... என்னோட ட்ரெஸ் நல்லா இல்லை. அவ்வளவுதானே? நான் என்ன

பெனிட்டோ குமார்

ஜான்சன் அண்ட் ஜான்சன்லயா இன்டர்வியுவுக்குப் போகப் போறேன்?''

''இதுதான் உன்னோட பிராப்ளம், பிரகாஷ். ஜான்சன் அண்ட் ஜான்சனுக்கும், கோத்ரெஜ்க்கும் போனால்தான் மக்கா டிரெஸ் பண்ணனும்னு நினைக்கிறது தப்பு. உன்னையே இழிவு படுத்திக்காதே!''

''ஆயிரம் ரூபாய்க்கு மேல் தரமாட்டான்.''

''யுவர் எய்ம் இஸ் நாட் மணி. ஒன்லி எக்ஸ்பீரியன்ஸ்.''

''நிஷா ஐ ஆம் எ எம்.எஸ்ஸி, கெமிஸ்ட்ரி ஃப்ரம் பாம்பே யுனிவர்சிட்டி.''

''பட்டம் வாங்கிட்டால் போதுமா? நான் கேட்கிற கேள்விக்கு ஒழுங்கா ஒரு பதில் சொல்லு!''

''கேளு!''

''ரிவால்வரோட புல்லட் எந்த மினரல்ல செய்யறாங்க?''

''இதெல்லாமா இன்டர்வியூல கேட்பாங்க?''

''கேட்கலாம்... உனக்கு எதையும் ஆன்ஸர் பண்ணத் தெரிஞ்சிருக்கணும்.''

''உனக்குத் தெரியுமா?''

''என்னது?''

''ரிவால்வரோட புல்லட்....''

''எனக்கும் தெரியாது!''

''குழப்பாதே... நிஷா! ப்ளீஸ்...''

ஸ்டேஷனிலிருந்து வெளியாகி டைம்ஸ் ஆஃப் இண்டியா அலுவலகக் கட்டடம் தாண்டி, டாக்ஸி அமர்ந்து ஏறிக் கொண்டார்கள். அவனிடமிருந்து அந்த இன்டர்வியு லெட்டரை வாங்கினாள். அட்ரஸைப் பார்த்தாள்.

''12 B, கல்பாதேவி ரோடு, வர்ஷா பில்டிங்...'' என்று டாக்ஸி டிரைவரிடம் கூறினாள்.

''ஷில்பா பார்மஸுூட்டிக்கல்ஸ்... பேர் என்னவோ நல்லாத்தான் இருக்கு.'' என்றான் பிரகாஷ் அவளை உரசிக் கொண்டு.



''பிரகாஷ்! இன்டர்வியு போறியே.... அவங்களோட ப்ரொடக்ஷன் என்னனு தெரியுமா? ஒரு ப்ராடெக்டோட பேர் சொல்லு பார்ப்போம்.''

''அந்த வகையிலே நான் ப்ரிப்பரேஷன் பண்ணலை.''

''மண்டு! ப்ரிப்பரேஷன் எதுக்கு? இந்த லெட்டர்ல மேல பார்த்தியா?''

''என்ன போட்டிருக்கான்?''

''என்னவோ... ஐ ட்ராப்ஸ்னு போட்டிருக்குது! அதையே பார்க்கலை நீ. டேக் இட் ஸீரியஸ்லி யார். இன்டரெஸ்ட் காட்டு.''

''சரி, ஜு ட்ராப்ஸ். அப்புறம் என்ன 'தேச்சுரோ'ன்னு ஒரு 'ஃபேர்வெல் ஸென்ட்' தயார் பண்றாங்க.''

''ஃபேர்வெல்ஸென்ட் எதுக்கு?''

''காஸ் ட்ரபுளுக்குக் கரைச்சுக் குடிக் கணும். ஒரு மாதிரி பவுடர்.''

''வேலை கிடைச்சுடும்... பிரகாஷ்.''

''ஆமா, வேலை கிடைச்சவுடன்... கலி போர்னியாவுக்கு கம்பெனி பணத்துல அனுப்புவாங்க. உன்னையும் கூட்டிட்டு போய்.. ஜாலியா அங்கே கிடந்து உருள லாம். இது என்ன வேலை... நிஷா! நீயும் அப்பா கூட சேர்ந்துக்கிட்டு....''

''நீ எதிர்பார்க்கிற நாலாயிரம், அஞ் சாயிரம் வேலை உடனே வராது ராஜா. அவங்க அஞ்சு வருஷம் எக்ஸ்பீரியன்ஸ் கேட்பாங்க. உங்கிட்ட நூல் இல்லாத பட்டம் மட்டும்தானே இருக்குது...''



பெண் : தினம் உன் வீட்டுல சுவிங் டிபனா கண்டலையே வைக்கறியே... என்ன காரணம்?

தோழி : பத்து வருஷமா பீச்சுல காதலிச்ச அனுபவத்த சுலபமா மறக்க முடியலடி!

- அம்பை தேவா

டாக்ஸி கஸ்பாதேவி ரோட்டில் நுழைந் தது! வாகனங்கள் ட்ராஃபிக்கில் மிதந்தன.

வர்ஷா பில்டிங், மஞ்சள் கலரில் ஆங் காங்கே கறுப்புக் கோடுகளுடன் காட்சி தந் தது. மழைக்காலத்தில் ஏற்பட்ட இயற்கை யின் வடுக்கள்.

டாக்ஸிக்கு பிரகாஷ் பணம் கொடுத்து விட்டு வந்தான். நிஷா பேண்டை விட்டு வெளியே வந்திருந்த டீ-ஷர்ட்டை ஒழுங்கு படுத்திக் கொண்டிருந்தாள்.

''என் ட்ரெஸ்ஸை குற்றம் சொல்லும் பெண்ணே.... உன் ட்ரெஸ் மட்டும் மாதுரி தீட்சித்தனமா இருக்குன்னு நினைப் போ....?''

''நான் இன்டர்வியுவுக்கு வரவில்லை நண்பா!''

''அப்புறம் எங்கே வந்தீங்களாம்?''

''நான் வரலைன்னா நீ இன்டர்வியுவுக் குப் போக மாட்டேன்னு தெரியும். அதான் அங்கிள் உன்னை ஃபாலோ பண்ணச் சொன் னாரு. அது சரி, இந்த ட்ரெஸ்ஸுக்கு என்ன குறை?''

''கலர் போன ஜீன்ஸ், சிவப்பு டீ-ஷர்ட்... பாப் முடி... அப்படியே ஒரு சின்ன ஆம்பளைப் பையன் போல தெரி யறே...''

''என்ன சொன்னே?'' - நிமிர்ந்தாள்.

அவளுடைய சந்தன நிற மகிமையுடன் கூடிய அழகு அவனை அலைக்கழித்தது. பருவ இளமை உருவாய் கவர்ந்தது.

இருவருக்கும் இடையில் பிரேமை வந்தது. வெகு சுலபமான வகையில்தான். இரண்டு நாட்கள் பிரகாஷின் வீட்டிற்குப் போனாள் நிஷா. அவளுடைய அப்பாவும், அவனுடைய அப்பாவும் எப்போதோ... எப்படியோ நண்பர்கள். மூன்றாவது நாள் போனபோது ''ஐ லவ் யூ'' என்று சொல்லி விட்டாள். கிறங்கினான் பிரகாஷ். மறுநாள் அவளை தாதர் புறாக்கூண்டுக்கு அழைத்துப் போய் கட்டிப் பிடித்து முத்தம் கொடுத் தான்.

'ஷில்பா பார்மஸூட்டிகல்ஸ்' இரண்டாவது மாடியில் இருந்தது! லிஃப்ட் ஏறிப் போனார்கள். இவர்கள் இருவரும் போன நேரம் ஏற்கெனவே ரிசப்ஷனில் இருந்த அனைத்து ஸோபாக்களும் நிரம்பி யிருந்தன. நிறையப்பேர் பாலிதின் பேட்டு மூடி. சான்றிதழ்களைக் கொண்டு வந்திருந் தார்கள்.

''நிஷா, நாட்டு நிலைமையைப் பார்... இத்தனை பேர் வேலை இல்லாம தவிக்கிற போது, வசதியாக உள்ள நான் ஏன் வேலை தேடணும்?''

அந்த நேரம் கண்ணாடிக் கதவைத் தள்ளிக் கொண்டு ஒருவன் ரிசப்ஷனுக்கு வந் தான். ''ஜென்ட்டில் மென்... ப்ளீஸ் என்டர்; ஒன் பை ஒன்....'' நிஷாவை பேபோட்ட மாகப் பார்த்தான். ''வி வான்ட் ஒன்லி ஜென்ட்ஸ்'' என்றான்.

''ஷி ஹாஸ்ன்ட் கம் ஃபார் இன்டர் வியு....'' என்றான் பிரகாஷ்.

''ஓ.கே. அப்ப ஒதுங்கி அப்படி உட்காருங்க.''

இரண்டு நிமிடங்களுக்கு ஒருவர் என அந்த நேர்முகத் தேர்வு மளமளவென நகர்ந் தது. அறைக்குள்ளிருந்து வெளி வந்தவர்கள் வேகமாக லிஃப்ட் தேடி இறங்கிக் கொண் டிருந்தார்கள்.

பிரகாஷ், நிஷாவைப் பார்க்க... அவள் கண்களை ஆதரவாக மூடிய நேரம், அவ னுடைய முறை வந்து, உள்ளே தள்ளப் பட்டான்.

அறை ஏ.சி. குளிரில் வதக்கப்பட்டிருந் தது. ஒரே நபர்தான் மஞ்சள் சட்டை

போட்டு, வெள்ளை முடியோடிருந்தார்.

"கம் ஆன் ஜென்ட்டில்மேன். எங்களோட உற்பத்தி வகை... தெரியுமா?"

"தெரியும். ஐ ட்ராப்ஸ் ஒன்று... ஒரு எஃபர்வெஸ்ஸன்ட் பவுடர்."

"வெரிகுட்...."

இன்னும் நிறையக் கேள்விகளுக்கு பளிச் பதில்களைக் கூறினான் பிரகாஷ். அவனுடைய குடும்பப் பின்னணி பற்றி நுணுக்கமாகக் கேட்டார். அவர் தருவதாகச் சொன்ன ஆயிரத்து நூறு ரூபாயை ஒப்புக் கொண்டான்.

"வெயிட் இன் தி ரிசப்ஷன்..." என்றார்.

பிரகாஷோடு சேர்ந்து ரிசப்ஷனில் காத்திருக்கச் சொல்லப்பட்டவர்கள் நாலு பேர். சற்று நேரத்தில், ஆரம்பத்தில் வந்து, எல்லோரையும் வரிசையாக உள்ளே அனுப்பிய அந்த மனிதன் வந்து சேர்ந்தான்.

"ஆல் ஃபோர் ஆஃப் யூ ஆர் அப்பாய்ன்டட் ஆஸ் மெடிக்கல் ரெப்ரெஸென்டேடிவ்ஸ் ஆஃப் ஷில்பா.. குட் லக் டு யூ..."

பிரகாஷ் தவிர மற்ற மூவரும் ஏகமாக மகிழ்ந்தார்கள்.

சொற்ப நேரத்தில் அப்பாயின்ட்மென்ட் ஆர்டர்கள் நான்கு பேருக்கும் கொடுக்கப்பட்டன. மறுநாளே வேலையில் சேர வேண்டும் என்று எழுதியிருந்தது.

டாக்ஸி அமர்த்தி, மீண்டும் வி.டி. ஸ்டேஷன் வந்து... சிட்டி டிரெயின் மூலம் மாதுங்கா வந்தார்கள். நேரம் ஒரு மணி.

பிரகாஷின் அப்பா அலுவலகம் போயிருந்தார். அம்மா கெல்வினேட்டர் ஓவனில் எப்படி சமையல் செய்வது எனப் பக்கத்து ஃப்ளாட் பஞ்சாபிப் பெண்ணுக்கு பாடம் நடத்திக் கொண்டிருந்தாள். இவர்களைக் கண்டதும் பிஸ்கட் பாக்கட்களையும், தயிரையும் கொண்டு வந்து கொடுத்தாள்.

"வேலை கிடைச்சுட்டுதா?"

"கிடைச்சுட்டுது! உங்க மகன் ரொம்ப ஸ்மார்ட்."

"ஸ்மார்ட்தான். ஏனோ அப்பாவும் பிள்ளையும் எப்பவும் எதிர் எதிர் முனையாய் இருக்காங்க."

"சரியாயிடும்."

மாலை நாலு மணிக்கு நிஷா பாந்த்ராவில் இருக்கும் அவளுடைய வீட்டுக்குப் போய்விட்டாள். மறுநாள் ஆபீஸ் போனவுடன் தனக்கு போன் செய்யுமாறு பிரகாஷுக்குக் கட்டளையிட்டிருந்தாள். தனக்காக இன்றைய நாள் முழுவதையும் செலவிட்ட அவன் மேல் இனம் புரிந்த அற்புதமான காதல் உணர்வு பொங்கியது அவ



"ராத்திரி நான் நைலா வீட்டை விட்டு ஓடிவரக் கிளம்பினப்ப எங்க அப்பா பார்த்துட்டாங்க ரமேஷ்."

"அடடா! அப்புறம்?"

"மரியாதையா நகையெல்லாம் கழட்டி வெச்சிட்டுப் போன்னு சொல்லிட்டார்!"

- சீர்காழி வி. ரேவதி



## ரயில்வேயில் வேலை

ரயில்வே 'சிக்னல் மேன்' ஆக வேலைக்குச் சேர விண்ணப்பித்திருந்தவனை அதிகாரி கேட்டார் :

"60 கி.மீ. வேகத்தில் போகும் இரண்டு ரயில்கள் ஒரே தண்டவாளத்தின் மேல் ஒன்றுக்கொன்று எதிர்த் திசையில் ஓடுவதாக வைத்துக் கொள்வோம். இரண்டு ரயில்களுக்கிடையே உள்ள தூரம் ஒரு மைல்தான் இருக்கிறது. நீங்கள் என்ன செய்வீர்கள்?"

அந்த ஆள் சற்று யோசித்து விட்டுச் சொன்னான் :

"நான் போய் என் சகோதரனை அழைத்து வருவேன்."

ஆச்சரியம் அடைந்த அதிகாரி, 'எதற்காக உங்கள் சகோதரனை அழைத்து வர வேண்டும்?' என்று கேட்டார்.

"என் சகோதரன் ரயில் விபத்தைப் பார்த்ததே இல்லை. அதனால்தான்!"

*- முன்னாள் அமெரிக்க ஜனாதிபதி லிண்டன் ஜான்சன் கூறியதாகக் கருதப்படும் கதை.*

நன்றி : 'இந்தியன் எக்ஸ்பிரஸ்'.
தகவல் : வி.எஸ். ஸ்ரீதரன்.

ளுக்கு. 'நிஷா! என் காதல் சாம்ராஜ்ய தேவதை!'

மறுநாள் அப்பாவின் பாதம் தொட்டு ஆசிர்வாதம் வாங்கிக் கொண்டு அலுவலகம் போனான். புதிய நபர்கள் நான்கு பேரையும் அமர்த்தி, வெள்ளை முடிக்காரர் நீண்ட நேரம் பேசினார். அவருடைய பெயர் பாலேகர் என விசாரித்துத் தெரிந்திருந்தான்.

ஒரு வழியாகக் கொட்டித் தீர்த்ததும் அந்த ஆள் போய்விட்டார்.

சந்தன கலரில் பேண்ட்டும், ஷர்ட்டும் போட்ட பியூன் ஒருவன் தேநீர் கொண்டு வந்து வைத்தான்.

''ரொம்ப நாளைக்குப் பின் சேல்ஸ் கேபினுக்கு ஆள் கூட்டிட்டு வந்திருக் காங்க.'' என்று இந்தியில் கூறிவிட்டுப் போனான்.

கொஞ்ச நேரத்தில் ஆளுக்கொரு ஃபைல் கொண்டு வந்து கொடுத்தான். பிர காஷ் கரங்களில் ஆர்டர் ஃபைல் வந்தது. கான்பூர் கரிம்லால் ஏஜென்ஸியும், அந்தேரி பப்பு வர்மா ஏஜென்ஸியும் ஏகப்பட்ட ஆர்டர்களைக் குவித்திருந்தனர்.

வாயு அவஸ்தைக்கு உண்டான 'ஆரஞ்ச் நேச்சுரோ' என்ற அந்த பவுடருக்கு ஏகப் பட்ட ஆர்டர்கள் கொடுத்திருந்தார்கள். நூறு கிராம், இருநூறு கிராம் டின்களே கண்டிப் பாக வேண்டும் என்று ஆர்டரின் அடியில் 'நோட்' எழுதியிருந்தார்கள்.

அன்று முழுவதும் ஷில்பாவை ஃபைல் களில் படித்தார்கள்.

மாலை ஆறு மணியைத் தாண்டிவிட்ட நேரம். பம்பாய் முழுக்க ஸ்லோமோஷ னில் சோர்வாக இயங்கியது. உழைத்த பின் ஏற்பட்ட ஆயாசம் வாகனங்களை அண்ட வில்லை. அவை மட்டும் வேகம் கூடிப் பறந்தன.

பிரகாஷ் வி.டி. ஸ்டேஷன் வந்தான். எலெக்ட்ரானிக் இண்டிகேட்டரைப் பார்த் தான். ஆறு இருபதுக்கு குர்லா செல்ல ட்ரெயின் உள்ளது என ஏழாம் நம்பர் ப்ளாட் ஃபாரம் இண்டிகேட்டர் சொன்னது.

ஏழாம் எண் ப்ளாட்பார முனையில் வெகு ஜரூராக அவன் நுழைய ஆரம்பித்த நேரம்.. மொசைக் பில்லர் பக்கம் நின்று ஒரு நபர் தன்னை நோக்கி, அசந்தர்ப்பமாகப் புன்னகை வீசுவதைக் கண்டான். கவனம் சிதற, எதிரே வந்த அந்த மினி ஸ்கர்ட் பெண் ணோடு மோதி... உதறிக் கொண்டு வழிந் தான்.

நகைப்பைக் காட்டிய நபர், பிரகாஷை நெருங்கினான். பஞ்சுபோல தலைமயிரை பறக்கப் போட்டிருந்தான். இப்பொழுது தான் சவரம் செய்தவன் போல் வழவழப் பாக இருந்தான்.

''கிளாட் டு மீட் யு... மிஸ்டர் பிர காஷ்.'' கை நீட்டி, பிரகாஷின் கரத்தை வலியப் பற்றிக் குலுக்கினான். பிரகாஷ் விழித்தான்.

''நீங்க யார்? எனக்குத் தெரியாது.''

''நீ யார்னு எனக்குத் தெரியும்.''

''எப்படி தெரியும்?''

''மிஸ்டர் பிரகாஷ்! ஷில்பா கம் பெனிக்கு நேற்று இண்டர்வியுவுக்குப் போனே.... அது தெரியும். அப்பாய்ண்ட் மெண்ட் லெட்டர் உனக்குக் கிடைத்தது. அது தெரியும். இன்னிக்கு ஆரம்ப நாளாகப் போய் பணியில் உன்னைச் சேர்த்துக் கொண் டாய்... அதுவும் தெரியும்....''

''எப்படி தெரியும்?''

''எனக்கு எல்லாம் தெரியும். என்னு டைய பத்து விரல்களுக்குள் இந்த பம்பாய் மாநகரம் அடக்கம். என்னைப் பற்றி போகப் போக உனக்குத் தெரிய வைப் பேன்...''

அந்த நபர் கைதேர்ந்த அரசியல்வாதி போல் பேசினான்.

(தொடரும்)



''இந்த மனிதர்களுக்கு மூளையே கிடையாது'ன்னு நினைக்கறேன்... இவ்வளவு அழகா (மேற்கூரை) சீலிங் அமைச்சிட்டு 'தரை'ல தலைகீழா நடக்கறாங்க பாரு!''

- ஜூனியர் தேஜ்



●● உலகில் சுமார் நான்கு கோடி பெண் குழந்தைகள் பள்ளிக்குச் செல்வதில்லை என்றும் இதில் மூன்று கோடி இந்தியாவில் இருக்கின்றனர் என்றும் வாஷிங்டனில் உள்ள ஆய்வு நிறுவனம் ஒன்று தெரிவித்துள்ளது.

●● ஒரிஸ்ஸா மாநிலத்தில் மொத்தமுள்ள 28 மாவட்டங் களில் 10 மாவட்டத் தலைவர்கள் பெண்கள்.

- ஏ. தங்கமுத்து

# உலா

தில்லி, அஜ்மல்கான் வீதி. திங்கட் கிழமை. சாயரட்சை. எலாஸ்டிக் ஜட்டியும், தேங்காய்ப்பத்தையும் விற்கிற சாத்வீகமான சர்தார்ஜிகளும், பளபளப்பான தோல் செருப்புக்களை அற்பமான விலைக்குத் தரத் தயாராக இருப்பதாகக் கூவி அறிவிக்கிற அழுக்குக் கோட்டு ஆசாமிகளும், 'வாய்' என்பது பிப்ஸ்டிக் பூசவும், பானிபூரி சாப்பிடவுமாகப் படைக்கப் பட்டது என்று உறுதியாக நம்புகிற, சல்வார் கம்மீஸில் மதர்த்து வருகிற பஞ்சாபி மங்கையரும், உதிரியாக மற்றவர்களும், ஒரு வினாடி வைத்த கண் வாங்காமல் பார்க்க, புத்த பிட்சுக்கள் போலப் பாட்டிகள் முன்னேறிக் கொண்டிருந்தார்கள்.

நார்மடிச் சீருடையில் நாகுப் பாட்டி, கஸ்தூரிப்பாட்டி, யோகாம்மாள்... ஒரு அடி இடைவெளி விட்டு, ஆரம்பத்தில் வந்த தேவதையால் காரணகாரியம் இல்லாமல் சபிக்கப் பட்டவனாகத் தளர்ந்து நடக்கிற வெங்கு...

எல்லாம் ஒரு தபால் கார்டால் வந்தது. இரண்டு மாதம் முன்னால் உத்தியோக உயர்வு பெற்றுத் திருநாகேசுரத்திலிருந்து தில்லிக்கு வந்ததும், நெருங்கிய உறவுக்காரர்களுக்கு எல்லாம் கடிதம் எழுதிப் போட்டான்... 'நான் இங்கே சவுக்கியமாக இருக்கிறேன். லாஜ்பத் நகரில் பெரிய வீடு கொடுத்திருக்கிறார்கள். முதல் மாடி. ஒண்டிக் கட்டைக்கு இத்தனை பெரிய இடம் ரொம்ப அதிகம்தான்...'

குறிப்பு உணர்ந்த பெரிசுகள் அப்பாவிடம் சொல்லி கூடிய சீக்கிரம் ஒரு கல்யாணத்துக்கு ஏற்பாடு செய்து, தாபாவில் தினசரி ரொட்டி சாப்பிடுகிற தண்டனையிலிருந்து விடுதலை வாங்கித் தருவார்கள் என்ற நப்பாசை சிதைந்து சின்னாபின்னமாக, சீயாழி அகோரமூர்த்தி என்ற மாமாதான் முதல் பதில் போட்டது.

''சந்தோஷம். நானும் ரொம்ப நாளாக வடதேச யாத்திரை வரவேண்டும் என்று நினைத்துத் தள்ளிப் போகிறது... இதோ கிளம்பி விட்டேன்...''

''க்ஷேத்ராடனம்னு சொன்னதுமே தெருவிலே எல்லோரும் நானும் வரேன்னு கிளம்பி... சீட்டுப் போட்டுப்பாத்து செலக்ட் ஆன நபர்கள். இதெல்லாம்...''

புதுதில்லி ரயில்வே ஸ்டேஷனில் இன்றைக்குக் காலையில் ரயிலை விட்டு இறங்கி, ஆஸ்திரேலிய கிரிக்கெட் குழு உறுப்பினர்களை ஜனாதிபதிக்கு அறிமுகம் செய்து வைக்கிறது போல, அகோர மாமா பாட்டிகளைப் பரிச்சயப்படுத்த, எல்லோரையும் மூட்டை முடிச்சுக்களோடு தூக்கிப் போட்டு லாஜ்பத் நகரில் கொண்டு சேர்க்க ஒரு வேனுக்காக வெங்கு என்கிற வெங்கடாசலம் அலைந்தான்.

''பாவம் குழந்தை.... தனியாகக் கிடந்து கஷ்டப்படறான்...'' பாட்டிகள் படியேறி வந்ததும் தூசியும் தும்புமாகக் கிடந்த வீட்டைச் சுத்தப்படுத்தினார்கள். ''மேலே பட்டா விழுப்பா விடும்'' என்று, லாலி



## இரா.முருகன்

என்று தொங்கிய பேண்டையும், சட்டையையும், லுங்கியையும் மடித்து வைக்கச் சொன்னார்கள். சோபாவிலும், மோடாவிலும் உட்காரப் பிடிக்காமல் தரையில் கால்நீட்டி உட்கார்ந்து, தாகசாந்திக்குத் தண்ணீர் கேட்டார்கள். மேல்மாடி குரானா மனைவியிடம் அரைகுறை இந்தியில் கேட்டு வாங்கி வந்த ஐஸ்வாட்டரை வேண்டாம் என்று சொல்லி, ஆளாளுக்கு ஆசாரமாகக் கொண்டு வந்திருந்த பாத்திரங்களைக் கவிழ்த்து மிச்சமிருந்த காவிரித் தண்ணீரைக் குடித்தார்கள். இன்னும் பத்துப்பேர் இப்படி அண்டாசைஸ் கூஜாக்களோடு கிளம்பி வந்திருந்தால், 'காவிரி டெல்டாவில் தண்ணீர் தட்டுப்பாடு, பயிர்கள் பாதிப்பு' என்று தாசில்தாருக்கு எச்சில் தொட்டு ரெவின்யு ஸ்டாம்ப் ஒட்டி நிறையப்பேர் மனுப் போட்டிருப்பார்கள்...

''ஒரு கிராங்கா அரிசியும் தயிரும் இருந்தால் போதும். வெங்கலப்பானையும், ரசம் வைக்க ஈயச் சொம்பும், பருப்புப் பொடியும் கொண்டு வந்திருக்கோம்...''

பாட்டிகளின் கோரிக்கையை நிறைவேற்ற ஆபீசுக்கு லீவு சொல்லி விட்டு வெங்கு சென்ட்ரல் மார்க்கெட்டுக்கு நடந்து, இலையும் மற்றதும் வாங்கி வந்தான்.

அவர்கள் குளிக்க மின்சார பாய்லரில் வெந்நீர் போட, புடவை உலர்த்த பால்கனியில் நைலான் கயிறு கட்ட என்று அப்புறம் வேலை. நடு மத்தியான வேளையில் காற்றில் அலைக்கழிந்து பறந்த நார்மடிகளை



காவித்துணியாகப் பார்த்த குரானா வீட்டுக்காரி, ''மதறாஸிலிருந்து உன் வீட்டுக்கு நிறைய சன்னியாசிகள் வந்து இருக்கிறார்கள் போல் தெரிகிறதே '' என்று விசாரித்தாள்.

சும்மா சொல்லக்கூடாது. வெகு நாளைக்கு அப்புறம் தொட்டைவிட்டுக் கொண்டு சாப்பிட்டதில் வெங்குவுக்கு எல்லாக் கஷ்டமும் மறந்து போனது. இப்படி நாரத்தங்காய் ஊறுகாயும், மிளகு ரசமும் வைத்துத் தர யாராவது இருந்தால், கல்யாணத்தைப் பற்றி யோசிக்காமல், இங்கேயே நிம்மதியாக, ஆஷா டிராஹான், நீலம் அரோரா, நிர்மல் கர்பந்தா போன்ற கரடுமுரடான பெயர்களுடன் வளைய வருகிற மெல்லியலார்களைத் தொடர்ந்து கணக்குப் பண்ணிக் கொண்டு திரியலாம் என்று கூடத் தோன்றியது...

''ஏண்டா வெங்காச்சம்...இப்ப பத்ரிநாத் எல்லாம் போய்வரத் தோதுப்படுமா?'' விசிறிக் காம்பால் முதுகைச் சொறிந்து கொண்டு மாமா விசாரிக்க, சூழ்நிலையின் பயங்கரம் வெங்குவுக்கு மெல்ல உறைத்தது.

கேதார்நாத்திலும் பத்ரிநாத்திலும் பனி படர்ந்த மலைச்சரிவுகளில் பாட்டிகளின் கையைப் பிடித்தபடி தான் நடக்கிற காட்சி கற்பனையில் விரிய, உடம்பு வியர்த்தது.

''அங்கே எல்லாம் இப்ப பனி ஆரம்பிச்சிருக்கும்..போக முடியாது...''

''சரி வேண்டாம்.. ஹரித்துவார்.. ரிஷிகேஷ்.. எல்லாம் பக்கமாமே..''

என்னென்னவோ சால்ஜாப்பு சொல்லியும் எடுபடவில்லை. ''லீவு கிடைக்காதா?.. நம்ப ரங்கன் ஷட்டகனோட மச்சினன் இங்கேதானே ஏதோ மினிஸ்ட்ரியிலே அண்டர் செகரட்டரியாக் குப்பை கொட்டிண்டு இருக்கிறது.. போன் புஸ்தகத்தைக் கொண்டா... அவனை விட்டு உங்க மேனேஜருக்கு பேசச் சொல்றேன்.''

விட்டால் அகோர மாமா பிரதம மந்திரிக்கே போன் போட்டுவிடுவார்..

நாளைக்கு தில்லி சுற்றிப் பார்க்கவும், நாளை மறுநாள் ஹரித்துவார் போகவும் தீர்மானமானது. வெள்ளிக் கிழமை முழு ஓய்வு. அன்று சாயந்திரம் காசிக்குப் புறப்பாடு.

காசியிலும் அப்புறமும் மாமாவே கவனித்துக் கொள்வதாகச் சொல்லி விட்டார்.

பணிக்கர் டிராவல்ஸில் ஹரித்துவார் யாத்திரை மற்றும் தில்லி சுற்றிப் பார்க்க ஏற்பாடு செய்யவும், ரயில்வே ஸ்டேஷனில் காசியாத்திரைக்கு ரிசர்வ் செய்யவும் வெங்கு கிளம்பியபோது, ''சும்மாத்தானே உக்காந்திருக்கேன்... பேச்சுத் துணைக்காக்க...'' என்று மாமாவும் ஒட்டிக் கொண்டார்.

தலைக்குசரக்கட்டையை ஜமுக்காளப் பைக்குள் செருகிவிட்டுப் பாட்டிகளும் அவசரமாகக் கிளம்புவார்கள் என்று வெங்கு சத்தியமாக எதிர்பார்க்கவில்லை.

''நாளைக்கு ஏகப்பட்ட சமாதிகளைச் சுத்தி வரவேண்டி இருக்கும்... இப்ப ரெஸ்ட் எடுத்துக்கலாமே...'' நயந்தும் பயந்தும் சொல்லியும் பயன் இல்லை.

''இங்கே உக்காந்து வெட்டியா வம்பு பேசறதுக்கு, நாலு புது மனுஷாளைப் பாத்த படிக்குக் காலாற நடந்தால் சிலாக்கியம்...''

குழுத்தலைவி நாகுப்பாட்டி சொன்னதோடு, முதலில் படி இறங்கி விட்டாள். எல்லாப் பாட்டிகளும் அழுத்தமான வெள்ளை ரவிக்கை போட்டிருந்தது துக்கினியூண்டு ஆறுதலாக இருந்தாலும் மற்றபடி வாழ்க்கை வெங்குவுக்குத் திரும்பத் துன்பமானது.

''ஆட்டோ எல்லாம் வேணாம்... தண்டச் செலவு...'' மாமா சொல்லிவிட, பஸ் பிடித்துப் புறப்பட்டார்கள்.

பாட்டிகள் சமர்த்தாகப் பராக்குப் பார்த்த படிவர, அகோர மாமா வெங்கு பக்கத்தில் உட்கார்ந்து, உடைந்து, துருப் பிடித்து, மண் அப்பி, ஓரம் நசுங்கிய பிளேடாக ரணப்படுத்திக் கொண்டே வந்தார்.

''அவனைப் பாத்தா நம்ப மாதிரி மங்கலம் அண்ணாசாமி போல இருக்கான்...''

முன்வரிசையில் சளசளவென்று வாய் ஓயாமல் பஞ்சாபியில் பேசிக் கொண்டு வந்த ஒரு வெயிஸ்ட் கோட் நபரைக் காட்டி மாமா சொன்னார்.

''அதே மாதிரி மூக்கிலே ஈ உக்காந்தது கணக்கா மச்சம்...ஆறாம் பேஸ்த்து அடிச்ச மாதிரி மூஞ்சி... அண்ணாசாமி கதை தெரியுமா... சிரஸ்தார் மணவாளன் பொண்ணோட ஓடிட்டான்... அந்த மூஞ்சிக்குக் கூடப் போனாளே.. அவளைச் சொல்லணும்... இதெல்லாம் எங்க காலத்து லவ்வு... சொல்றேன் கேட்டுக்கோ...காதல் எல்லாம் சர்வ நாசத்துலே முடியும்.... நீ யாரையும் லவ் பண்ணிடாதே...''

பஸ் கன்னாட் பிளேஸில் நிற்க, முன் வரிசை ஆசாமி பின்னால் திரும்பி, ''ஓய்! நான் மாதிரிமங்கலம் அண்ணாசாமியேதான்.. இந்த மூஞ்சியோடும் சிரஸ்தார் பெண்ணோடும், பிள்ளை குட்டி பேரன் பேத்தியோடும் பரம சுகமாக இருக்கிறேன்...வரட்டா?'' என்று சொல்லி இறங்க, அப்புறம் கரோல்பாக் வந்து சேர்ந்து, இந்த நிமிஷம் வரை மாமா வாயே திறக்கவில்லை.

''கட்டாலே போறவன்.. தலையிலே அடிச்சுட்டுப் போறான்...''

முன்னால் போன நாகுப்பாட்டி அலற,

# உறுதிமொழி அளிக்கிறோம்

நிச்சயமற்ற தன்மைகள் நிறைந்த
இன்றைய சூழலில்
**கோத்தாரி ஓரியண்ட் ஃபைனான்ஸ் லிமிடெட்**
தனது முதலீட்டாளர்களுக்கு
தான் அளித்த உறுதிமொழியை
மீண்டும் உறுதி செய்கிறது.

நாங்கள் எப்போதும் போற்றி வந்துள்ள,
இனி எப்போதும் நிரந்தரமாக
அளிக்கவிருக்கின்ற உறுதிமொழி.







ஆம்.
இது உறுதிமொழி சார்ந்த விஷயம். ஆனால் அதைவிட,
நம்பிக்கையும் நேர்மையும் சம்பந்தப்பட்ட விஷயம்.

We are on
Campaign
upto
30.4.94




**கோத்தாரி ஓரியண்ட்
ஃபைனான்ஸ் லிமிடெட்**


பதிவு அலுவலகம்: 114, மகாத்மா காந்தி சாலை, சென்னை-34.
நிர்வாக அலுவலகம்: "ப்ரஸ்டீஜ் பாய்ண்ட்" முதல் தளம்
16, ஹாடோஸ் சாலை, சென்னை-6.
போன்: 8256164/8256170/8256171.


*பிரதிநிதி அலுவலகங்கள்/கலெக்ஷன் சென்டர்கள்.*

சென்னை: கோத்தாரி பில்டிங்ஸ், 114, மகாத்மா காந்தி சாலை, நுங்கம்பாக்கம். [illegible]

*75 வருட அனுபவமுள்ள கோத்தாரி குழுமத்தின் அங்கம்*

- *தவணைமுறை விற்பனை*
- *லீஸிங்*
- *பொது டெபாசிட்கள்*



''திருடர்கள் வந்த போது மூடி யிருந்த ஜன்னல் கதவுகளைத் தலைவர் திறந்தது தப்பாப் போச்சு...!''

''ஏன்?''

''தலைவரின் ஜன்னல் திறப்பு விழா'ன்னு செய்தி போட்டுட்டாங்க!''

- ஜூனியர் தேஜ்



ஹெல்மெட் இடுக்கிய யாரோ அது பாட்டி தலையைப் பதம் பார்த்ததை அறியாமல் கூட்டத்தில் கரைந்து போனார்கள்.

ரோஷன்-தி-குல்பியில் குல்பி சாப்பிட முட்டி மோதுகிற கூட்டம்.

''ஐஸ்கிரீம் சாப்பிடலாமா?'' மாமா மெல்ல வாயைத் திறந்தார்.

''கர்மம்...எல்லோரும் எச்சல் பண்ணி புறங்கையிலே வடியவிட்டுண்டு நக்க றதைப் பாக்கவே அன்னறிரேஷமா இருக்கு...''

நாகுப்பாட்டி சொன்னதற்கு அப்புறம் மாமா திரும்ப மௌனமானார்.

வெங்குவுக்குத் தொண்டை வறண்டது.

''மெட்றாஸ் ஓட்டல்லே காப்பி குடிக் கலாம்...''

பாட்டிகள் ஓட்டல் வாசலிலேயே நின்று விட்டார்கள்.

''ஓட்டல்லே குடிக்கறதா வது..காசியிலே எதையாவது விடணு மாம்.. நாங்க காப்பியை விட்டு ஒழிக்கப் போறோம்... நீங்க போய்ட்டு வாங்கோ...''

இப்படிக் கட்டுப் பெட்டியாக இரண்டு நாள் எப்படி ரயிலில் இவர்கள் வந்தார்கள் என்று காப்பி குடித்துக் கொண்டே வெங்கு விசாரித்தான்.

''சத்துமா...'' மாமா அழுத்தமாச் சொன்னார். ''அங்கங்கே வெந்நீர் வாங்கி சத்துமாவைக் கலக்கிக் குடிச்சுடுவா.. நாக் பூர்லே ஆயிரம் தடவை யோசனை பண்ணி ஆளுக்கு ஒரு கிளாஸ் பால் வாங்கிக் குடிச்சுட்டு, பாலுக்கு தோஷம் இல்லேன்னு பேசிண்டா...''

ராத்திரி சாப்பாட்டுக்கு என்ன செய்வது என்று வெங்குவுக்குப் பயம் பிடித்துக் கொண்டது. மத்தியானம் சாப்பாடு முடிந்து அப்புறம், வெங்கு கதறக் கதற அவனுடைய நூதன் ஸ்டவ்வைத் துப்புரவாகக் குளிப் பாட்டி பால்கனியில் வெயிலில் காய வைத்துவிட்டு வந்திருந்தார்கள்.

''ராத்திரிக்கு எங்களுக்கு எல்லாம் பாலும் பழமும் போறும்.. இங்கேதான் எதேஷ்டமா எல்லாப் பழவர்க்கமும் கிடைக்கிறதே...''

நாகுப்பாட்டி அடுக்கிக் வைத்த ஆப் பிள் பழங்களைப பார்த்தபடி சொல்ல சுந்தரிப்பாட்டி கிடுகிடுவென விலை விசா ரிக்கக் கிளம்பிவிட்டாள்.

''ஜாதா ஹை.... தேனே கா தாம் போலியே....''

வெங்கு ஸ்தம்பித்து நிற்க, பாட்டி ஸ்பஷ்டமாக இந்தியில் பேரம் பேசி இரண்டு சீப்பு வாழைப்பழமும், ஆரஞ்சும், ஆப்பிளும் பாலிதீன் பையில் வாங்கிக் கொண்டாள்.

''எந்தக் காலத்திலேயோ கத்துண்டது.. தேவை வரும்போது தானே ஞாபகம் வருது..''

வெங்குவுக்கு அவமானமாக இருந்தது. இங்கே வந்த நாளிலிருந்து கால் இங்கிலீஷ், அரைக்கால் இந்தி, மீதி சைகை பாஷை என்று பேசித்தான் சமாளித்து வருகிறான். பச்சீஸ்-பச்சாஸ், டாய்-டேட் என்று எண் ணிக்கை எல்லாம் சர்வ குழப்பமாகத் தெரிய, உத்தேசமாக முழு ரூபாய் கொடுத்து மீதி வருகிற தொகையிலிருந்து விலையைக் கணக்குப் போட்டுக் கொள்கிறான்...

போன வேலை எல்லாம் முடிந்து, பட்டபடியில் உடம்பு அதிரத் திரும்ப ராத்திரி ஒன்பது மணி.

''நீங்க ரெண்டு பேரும் வேணா இட்லி தின்னுட்டு வந்துடுங்கோ...'' பாட்டிகள் சலுகை காட்டினார்கள்.

இந்த இடத்தில் ஓட்டல் எதுவும் கிடை யாது என்றும் தாபாவில்கூட உருளைக் கிழங்குக் கூட்டு தீர்ந்துபோய், ரொட்டியும், கோழி இறைச்சியும் மட்டும் தாராளமாகக் கிட்டும் என்றும் வெங்கு தெரிவிக்க, அபசார வார்த்தை கேட்டவர்களாக 'சிவ சிவா' என்று சொல்லிக் குளிக்கக் கிளம்பி னார்கள்.

திரும்ப வெந்நீர் போடுதல்... புடவைக் கொடியேற்றம்... தெருக் கோடி கடையில் பால் பாட்டில் வாங்கி வந்து காய்ச்சிக் கொடுத்தல்.. வெங்குவுக்கு ஒரே நாளில் வயசாகித் தானும் பழம்பெரும் பிரஜையாகத் தோன்ற, சபரிகள் கடிக்காமல் அன்போடு கொடுத்த பழங்களால் வயிறு நிரம்பி வழிந்தது.

ஜமுக்காளங்கள் விரிய, தலைக்குசரக் கட்டைகள் தலைமாட்டில் வைக்கப்பட, விளக்கை அணைக்கப் போனபோது வெளியே எதுவோ தடதடவென்று சரிகிற சத்தம்.

வெங்கு பால்கனிக்கு ஓடினான்.

பக்கத்து வீட்டுக் கூரையைப் பிய்த்து எறிந்து கொண்டிருந்தார்கள். சுற்றிவர ஓங்கி உயர்ந்து வர்ணம் மின்ன நின்ற கட்டடங் களுக்கு நடுவே அதை வீடு என்று சொல் வதே அபத்தம். ஆஸ்பெஸ்டாஸ் கூரையும்,

அழுது வடியும் சுவர்களுமாக ஒரு பழைய இடம் இது.

இந்தத் தெரு முழுக்க, பாகிஸ்தான் பிரிவினையின்போது இடம் பெயர்ந்து வந்த அகதிகளுக்குப் பட்டா போட்டுக் கொடுக்கப்பட்டது என்றும் ஒரு காலத்தில் எல்லா வீடுமே இப்படித்தான் இருந்தது என்றும் மேல்மாடிக்காரர் குரானா குடி வந்த புதிதில் சொல்லியிருக்கிறார்.

''வீட்டு சொந்தக்காரன் ஹரியானாவில் சிறிய தோலில் கம்பளி தொழிற்சாலை வைத்துக் கொண்டு செழிப்பாக இருக்கிறான். இவர்கள் வாடகைக்கு இருக்கிறார்கள். காலி செய்ய மாட்டேன் என்று பிடிவாதம். கோர்ட்டில் வழக்கு நடக்கிறது. இந்த இடத்தின் இப்போதைய மதிப்பு மூணு லட்சம்!! இதுவும் குரானா சொன்னது தான்.

தொம்தொம் என்று அஸ்பெஸ்டாஸ் தகடுகள் தரையில் விழுந்தன. உள்ளே இருந்து துணியும், சப்பாத்திக் குழவியும், தையல் மிஷினும், சுவர்க்கடிகாரமும், செல்லுலாய்ட் பொம்மையும், தலையணையுமாக வெளியே வந்து விழ, ஓரத்தில் நின்று அழுதபடி இரண்டு குழந்தைகளும் கொஞ்சம் பெரிய பெண்ணும்.

''குடியிருக்கிற மல்ஹோத்ரா, வீட்டுக்காரனைப் பார்த்துக் காலி செய்ய இன்னும் அவகாசம் கேட்க ஹரியானா போயிருக்கிறான். மனைவியையும் கூட்டிப் போயிருக்கிறான். அவளும் சேர்ந்து கேட்டால் வீட்டுக்காரன் மனமிரங்கித் தவணை கொடுப்பான் என்று நப்பாசை..கோர்ட் தீர்ப்பு வந்து ஒரு மாதமாகிறது. போன வாரம்தான் காலி செய்யக் கெடு முடிந்தது. இதெல்லாம் எதிர்பார்த்ததுதான்.. ராத்திரியில், மல்ஹோத்ரா இல்லாதபோது நடக்கிறதுதான் கஷ்டம்...''

பர்சாதியிலிருந்து குரானாவும், கீழ்வீட்டில் தன்கானியும் பேசிக் கொண்டது நடுவில் முதல் மாடியில் நின்ற வெங்குவுக்குச் சுமாராகப் புரிந்தது.

குழந்தைகள் உச்சக்குரலில் அழ, பெரிய பெண் அவர்களைச் சமாதானம் செய்ய முயன்று தோற்றுத் தானும் அழ ஆரம்பித்தாள்.

''இப்படியும் நடக்குமா லோகத்திலே...'' என்று பாட்டிகள் கன்னத்தில் கை வைத்து ஆச்சரியப்பட்டு நிற்க, 'இதெல்லாம் இங்கே சகஜம்' என்பது போலப் பார்த்தபடி ஒவ்வொருத்தராக விலகிப் போக, வீட்டின் அடையாளத்தை அநேகமாகச் சிதைத்துவிட்டு வந்தவர்கள் லாரியில் ஏறிப் போனார்கள். குழந்தைகள் இன்னும் விசும்பிக் கொண்டிருந்தார்கள்.

பாட்டிகள் ஏதோ பேசிக் கொள்கிற சத்தம். அப்புறம் கஸ்தூரிப்பாட்டி கீழே இறங்கிப் போனாள்.

அவள் மேலே வந்த பொழுது கையில் சப்பாத்தி இடுகிற கடப்பைக்கல். இன்னொரு கையைப் பிடித்துக் கொண்டு, சப்பாத்திக் குழவியை இடுக்கிக் கொண்டு பக்கத்து வீட்டுக் குழந்தை. அதன் கையைப் பற்றியபடி, பொம்மையோடு வாயில் விரல் போட்டபடி கடைக்குட்டி. தயங்கியபடி அலுமினிய டப்பாவும், தவாவுமாகப் பெரிய பெண்.

''ஒரு பயமும் வேண்டாம்... உங்களைப் பெத்தவா வர்ற வரைக்கும் நீங்க இங்கேயே இருக்கலாம். என் பேரன் வெங்கு நான் சொன்னா தட்டமாட்டான்.. நிச்சயமா வேறே வீடு கிடைக்கும்... இத்தனை பெரிய தில்லி பட்டணத்துலே கிடைக்காமலா போயிடும்?.. நீங்கல்லாம் சாப்பிட்டாச்சோ?''

குழந்தைகள் இல்லை என்று தலையசைத்தன.

''தெரியும்....அதான் இதெல்லாம் எடுத்து வரச் சொன்னேன். ஏண்டி நாகு... அந்த கோதுமை மாவைத் தண்ணி விட்டு நன்னா இருக்கமாப் பிசைஞ்சு தா... யோகா.. மசமசன்னு நிக்காம அடுப்பை மூட்டு.. குழந்தைகளா... இப்படி ஓரமா உக்காருங்கோ... பாட்டி நான் இல்லையா... கடக்கட ரொட்டி தட்டித் தரேன்... கல்கண்டு மாதிரி சத்துமா தரேன்...சாப்பிட்டுச் சமத்தாத் தூங்குங்கோ... காலம்பற உங்க பெரியவா வந்துடுவா... குழந்தைகளை இப்படித் தனியா விட்டுட்டுப் போவாளோ... நானே கேக்கறேன்.. அகோரம்... நீயும் வெங்குவுமாக் கொஞ்சம் கீழே போய் முக்கியமானதை எல்லாம் சிரமம் பாக்காம எடுத்துண்டு வந்து பால் கனியோ தேன் கனியோ அதுலே இப்ப ரெத்தைக்குப் போட்டு வையுங்களேன்.. நாசமாப் போறவன் எடுத்துத் தெருவிலே வீசிட்டுப் போய்ட்டான்.. ரொம்பப் பசியாடி தங்கம்.. இந்தா வாழைப் பழம் சாப்பிடு...''

தமிழிலும் இந்தியிலும் மாறி மாறிப் பேசிக் கொண்டு போகிற பாட்டி....

''நான் போய் கீழே எல்லாம் நகத்தி வக்கட்டு. இன்னும் கொஞ்சம் பழமும் பாலும் வாங்கி வரேன் பசங்களுக்கு...''வெங்கு குரலில் கரகரப்பு தெறித்தது.



"கல்யாணம்கறது ஆயிரங்காலத்துப் பயிர்!"
"ஒப்புக் கொள்றேன். அதுக்காக வரதட்சணையா டிராக்டர் கேட்கறது அவ்வளவு நல்லா இல்லீங்க!"
- ஞா. ஞானமுத்து

# மூன்று தலைமுறை வாடிக்கையாளர்களின் முழு நம்பிக்கையைப் பெற்றது!

**குறுகிய கால டெபாசிட் திட்டம்**

| காலம் | ஒரு நாள் முதல் 12 மாதங்கள் வரை |
|---|---|
| வட்டி விகிதம் ஆண்டுக்கு | **15%** |

டெபாசிட் தொகையை எப்போது வேண்டுமானாலும் உரிய வட்டியுடன் திரும்பப் பெற்றுக்கொள்ளலாம்.

**அபிட்சம் வைப்புத் திட்டம்**

**ரூ. 10,000/- செலுத்தினால் 45 மாதங்களில்**
**ரூ. 21,000/- கிடைக்கிறது.**

**பிக்சட் டெபாசிட் திட்டம்**

| காலம் | 12 மாதங்கள் | 24 மாதங்கள் | 36 மாதங்கள் | 48 மாதங்கள் | 60 மாதங்கள் |
|---|---|---|---|---|---|
| ஆண்டுக்கு ஒரு முறை வட்டி | 18% | 18.5% | 19% | 19.5% | 20% |
| 6 மாதத்திற்கு ஒரு முறை வட்டி | 17% | 17.5% | 18% | 18.5% | 19% |
| மாதம் ஒரு முறை அல்லது 3 மாதத்திற்கு ஒரு முறை வட்டி | 16% | 16.5% | 17% | 17.5% | 18% |

நகைக்கடன் மற்றும் இரண்டு சக்கர வாகனங்களுக்கு கடனுதவியும் வழங்கப்படும்



[illegible] R. நடராஜன்
நிர்வாக இயக்குநர்

# ஐசிஎஸ்
## (நிதி நிறுவனம்)

221, சத்தியமூர்த்தி சாலை, ராம் நகர்,
கோயமுத்தூர் - 641 009. போன்: 230463/37463




50 ஆண்டுகளுக்கு மேலான அரிய சேவை

# சதர்ன் ஷெல்ட்டர்ஸ்

அளிக்கும்




- ஆண்டாள் நகர் (ஆதம்பாக்கம்)
- போரூர் (குன்றத்தூர் சாலையில்)

(விசேஷ அம்சங்கள்: டிஷ் ஆண்டெனா, இலவச மினிபஸ் விளையாட்டு மைதானம்)

- சாலிகிராமம் (எம்.ஜி.ஆர். சாலை)
- மேற்கு அண்ணாநகர் (DAV ஸ்கூல் பின்புறம்)
- கொடுங்கையூர்
  ★ வெங்கடேஸ்வரா காலனி
  ★ கண்ணதாசன் நகர்

புக்கிங் நடைபெறுகிறது

விபரங்களுக்கு




**சதர்ன் ஷெல்ட்டர்ஸ் லிமிடெட்**

9, பிஷப் வாலர்ஸ் அவன்யூ (கிழக்கு)
மைலாப்பூர், சென்னை-600 004.
தொலைபேசி: 4992226, 4992426, 4993873

◆ ஆளும் கட்சி முதல்வரான ஜெயலலிதா, மக்களுக்கு எந்த நன்மையும் செய்யாமல், மத்திய அரசுக்கு ஓர் எதிர்க் கட்சித் தலைவர் போலச் செயல்படுகிறார் என்பதை விளக்கிய தலையங்கம், அம்மையாருக்கு சரியான அக்னி வெயில் சூடு!

சென்னை - 23, த. சத்தியநாராயணன்.

◆ 'எதிர்க் கட்சித் தலைவர் ஜெ' தலையங்கம் அற்புதம். யாருமே செய்யாத பணிகளாகச் சொல்லப்படும் ஜெவின் பட்டியல் எரிச்சலையே தருகிறது. தொட்டில் குழந்தை பற்றிய ஹைகூ ஒன்று நினைவிற்கு வருகிறது.

'முன்னேற்றம் அல்ல; இடமாற்றம்,
குப்பைத் தொட்டியில் இருந்து
அரசுத் தொட்டிலுக்கு.'

- இதுதான் நிஜம். இவரது வாய்ஜாலம் யாருக்கு வேணும்?

திருச்சி, தாயு. செந்தில் குமார்.

◆ வின்சென்ட் அமைச்சரவையில் தமிழரா? கட்டுரை படித்ததும் பரவசமடைந்தோம். அயல் நாடுகளுக்குப் போய் அடிமை வேலை பார்க்கவே தமிழன் என்ற தலையெழுத்தை மாற்றிப் பெருமைப்பட வைத்து விட்டார், லட்சுமணன்.

திருச்சி - 1, என். நடேசன்.

◆ முன்னாள் அமைச்சர் ராஜாராமின் பதில்கள் சிந்திக்க வைத்தன. ஜனநாயகத்தில் மாறாத பலம், சர்வாதிகாரத்துக்குத்தான் சேனை போட்டுக் கொடுக்கும் என்பது உண்மையான வார்த்தை. இன்னும் ஒரு மாதத்தில் என்ன நடக்கிறது பார்க்கலாமே!

தூத்துக்குடி, எஸ். ராமசுப்பிரமணியன்.

◆ சந்தோஷச் சிறை! சபாஷ், சரியான தலைப்பு! வேலைக்குச் செல்லும் மகளிரின், விடுதியில் இருக்கும் நிறை குறைகளை அலசி, ஒரு சிறு சர்வே செய்து விட்டீர்கள்.

திருப்பரங்குன்றம், டி.கே. சுப்பிரமணியன்.

◆ லேடீஸ் ஹாஸ்டல் (சந்தோஷமான) 'சிறை'யாக இருக்கலாம். ஆனால் அதில் உள்ள சில சாத்வீகமான முறைகள் (அதிகாலை துயிலெழுதல், தியானம், வழிபாடு, இப்படி...) இன்றைய இளைய தலைமுறைப் பெண்களுக்குத் தூய நல்லொழுக்க எண்ணங்களை ஏற்படுத்தித் தருவதோடு, வாழ்க்கைப் பாதைகளைத் தடுமாற்றமில்லாமல் கடக்கவும் உதவுகிறதே...!

சேலம் - 2, சூர்யநிலா.

◆ "காதல் கல்யாணம்' பண்ணிக் கொண்டாலும் தவறில்லை. ஆனால் அது பெற்றோர்களுக்கு ஒரு மன நிறைவைத் தர வேண்டும் - என்கிற கருத்தை மையமாக்கி, உமா கல்யாணி எழுதிய 'காதல் கல்யாணம்' சிறுகதை மிகவும் அற்புதம்.

பாண்டிச்சேரி, வசந்தராஜசெல்வன்.

◆ உத்தம சோழனின் "தொடுப்பு" சிறுகதையில் வாழ்க்கை நிறைவும் பரிபூரணமும் அடைந்த ஒரு பெண், கணவரின் அன்பைப் பெறத் தவறியதற்கு ஏற்பட்ட வருத்தம், புதிய கோணமாக அமைந்து நெஞ்சை நெகிழச் செய்தது.

தென்குத்து புதுநகர், ஆர். தமிழரசி தேவசேனாபதி.

◆ "பொ'ராய் தொறுக்ஸ்" படித்தேன். கையேந்தி பவனின் நிலைகளையும் கவனத்தில் வைக்க வேண்டும். இங்கு சில மாதங்களுக்கு முன்பு மாநகராட்சி அதிகாரிகள் நடைபாதை உணவுப் பண்டங்கள் சுகாதாரம் இல்லாமல் இருப்பதால், அவைகளின் மீது 'பிளீச்சிங்' பவுடர் கலந்து ஒரு குழியில் கொட்டி அழித்தார்கள். ரோட்டின் புழுதி மண், அசுத்தங்கள் நிறைந்த இந்த நடைபாதை உணவுப் பொருள்களைப் புறக்கணிக்க வேண்டும். 'பில்டர்' பண்ணாத தூசி நிறைந்த குடி தண்ணீரையே இந்தக் கடைகளில் பயன்படுத்துகிறார்கள்.

சீர்காழி, ஆர். ராஜதுரை.

# முன்னேற்றமல்ல; இடமாற்றம்!

◆ மனித உரிமை மீறல்கள் குறித்து "பேனசீருக்குத் தமிழன் தரும் அரசியல் பாடம்" நையாண்டியாக மட்டுமல்ல; தமிழகத்தின் குறைபாடுகளையும் நாசூக்காகச் சொல்வதாக இருந்தது.

ரெட்ஹில்ஸ், ஜெஸ்ப்பிரசன்.

◆ "பக்தி முத்திப் போச்சு" நகைச்சுவை - நரசிம்மராவையே வயிறு வலிக்கச் சிரிக்க வைக்கும்படி இருந்தது.

பள்ளிபாளையம், ஏந்தலிப்பிரசன்.

◆ பி.ஜே.பி. நல்ல கொள்கையும் தலைமையும் கொண்ட கட்சி! இதன் பெரிய தலைவர் மாநிலக் கட்சிக்கு அடிமைப்பட மாட்டார். கூட்டு வேண்டியதுதான். கொள்கையில்லாக் கூட்டாக இருக்காது! அப்படியிருக்க, அப்படியொரு கார்ட்டூன் தேவையா? பந்து சீட்டுக்கு சின்னத்தை அடகு வைக்கக் கூடிய நிலையில் பி.ஜே.பி. இல்லை.

கோலார் தங்கவயல், மு.ரா. பாலாஜி.

# ஸ்டெர்லிங் ஹாலிடே!



● ஆர். சுப்பிரமணியன்

ஐரோப்பிய நாடுகள் சிலவற்றில் சுற்றி வந்தபோது, அங்கே பெரிய பெரிய அரண்மனைகள், டூரிஸ்டுகள் வந்து தங்கும் இடங்களாக மாறியிருப்பதைப் பார்த்தார் சுப்பிரமணியன். 'இது எப்படி?' என்று விசாரித்தபோது, அந்த அரண்மனைகளைக் கட்டியவர்களின் வாரிசுகளால் முடியாட்சி இல்லாத இன்றைய சூழ்நிலையில், அவற்றை நிர்வகிக்கவே முடிய வில்லை என்றும் அதனால் அவை டூரிஸ்டுகள் வந்து தங்குமிடமாக மாறுகின்றன என்றும் தெரிய வந்தது.

அரச பரம்பரையில் வந்திருந்தாலும் இன்று அவர்களால் அந்த அரண்மனையில் வாழ முடிவதில்லை. சிறிய வீடுகள் அல்லது ஃப்ளாட்டுகளில்தான் வசிக்கிறார்கள். ஏதோ வருஷத்துக்கு ஒரு மாசம் அல்லது நாற்பது நாள் அரண்மனையில் வாசம் புரிந்தாலே அதிகம். பாக்கி நாட்களில் பூட்டித்தான் கிடக்கும்.

ஒரு ஹாலிடே நிறுவனம் இது போன்ற அரண்மனைகளைக் குத்தகைக்கு எடுத்து, வாடகைக்கு விடுகிறது. கிடைக்கிற பணத்தில் ஒரு பகுதியை சொந்தக்காரர்களுக்குத் தருகிறது. பாக்கி, அந்த அரண்மனையின் பராமரிப்புக்கும் டூரிஸ்டுகளுக்குத் தேவையான இதர வசதிகளைச் செய்து கொடுப்பதற்கும் செலவாகிறது. இவை போக, கணிசமான லாபமும் கிடைக்கிறது! டூரிஸ்களுக்கோ, 'ஒரு வாரம் பத்து நாள் அரண்மனை வாசம் கிடைத்ததே, ராஜா போல் வாழ முடிந்ததே' என்ற மகிழ்ச்சி!

சுப்பிரமணியன் இதைக் கேட்டதும் ஆச்சர்யப்பட்டார்; யோசிக்கவும் செய்தார். 'இதே ஐடியாவை நாம் இந்தியா திரும்பிச் சில மாற்றங்களுடன் செயல்படுத்தினால் என்ன? விடுமுறையை உல்லாசமாகக் கழிக்க மக்களுக்கு உதவினால் என்ன?'

பெரிய பெரிய திட்டங்களெல்லாம் அரும்பு விடும் ஒரு சின்ன ஐடியாவிலிருந்து தான் உருவாகின்றன. "ஸ்டெர்லிங் ஹாலிடே ரிஸார்ட்ஸ்" என்ற மகத்தான திட்டமும் இப்படித்தான் பிறந்தது. "ஐடியா பலருக்கும் தோன்றும். ஆனால் யாருக்குத் துணிச்சல் இருக்கிறதோ அவரால் தான் எண்ணத்தை வெற்றிகரமாகச் செயல்படுத்த முடியும்" என்று கூறுகிறார் ஆர். சுப்பிரமணியன். உண்மைதான். ஆர். எஸ். பகல் கனவு கண்டதுடன் நின்று விடவில்லை. இந்தியா திரும்பி, தீவிர முயற்சியில் இறங்கினார்.



இங்கே அவருக்கு அரண்மனைகள்

● ஸ்டெர்லிங் ரிசார்ட்: கொடைக்கானல்





◆ கொடைக்கானல்: ட்ரெக்கிங் போகலாம்....

அகப்படவில்லை. இருந்தாலும் அவை மத்திய தர வருப்பினருக்குப் பயன்படுமாறு குறைந்த வாடகைக்குத் தரமுடியாது. எனவே ஊட்டி, கொடைக்கானல், ஏற்காடு, டார்ஜிலிங், முசோரி, கோவா என்று, எங்கெல்லாம் விடுமுறை நாட்களை ஹாய்யாகக் கழிக்க விரும்புவார்களோ, அங்கே எல்லாம் ஏக்கர் கணக்கில் நிலத்தை வாங்கி, அழகழகான 'அபார்ட்மெண்ட்'களையும் காட்டேஜ்களையும் கட்டினார். படுக்கை அறை, டிராயிங் ரூம், சமையலறை என்று சகல வசதிகளுடன். ரெஸ்டாரெண்ட் வேறு தனியே உண்டு.

சுற்றிலும் ரம்மியமான சூழல். குழந்தைகள் ஓடி ஆடி விளையாடலாம். ஸ்விம்மிங், ட்ரெக்கிங், ஹார்ஸ் ரைடிங் என்று எல்லாவற்றுக்கும் வசதிகள் செய்யப்பட்டன. ஒன்றுமே வேண்டாம்; நிம்மதியாகப் படிக்க வேண்டும் என்றால் அதற்கும் நூலகம் ஒன்று தயார்!

வாழ்நாளில் ஒரே ஒரு முறை பணம் செலுத்தி விட்டால், வருடத்தில் ஒரு வாரம் இந்த மாதிரி இடங்களில் குஷாலாகத் தங்கி விட்டுப் போகலாம். ஒரு வருடம், இரண்டு வருடமல்ல. 99 வருடங்களுக்கு! தலைமுறை தலைமுறையாக!

இதுதான் 'ஸ்டெர்லிங் ஹாலிடே ரிசார்ட்'டின் டைம்-ஷேர் ஐடியா. 1986ல் ஆரம்பிக்கப்பட்டது. ப்ரீமியம், சீசன், கிளாசிக் என்று, குறைந்த பட்சம் 22,000 ரூபாய் முதல், அதிகபட்சம் 71,000 ரூபாய் வரை ஒருமுறை முதலீடு செய்தாலும் சரி; இதையே தவணை முறையில் கட்டினாலும் சரி. வருடத்தில் ஒரு வாரம் உங்களுக்கு விடுதி நிச்சயம்!



◆ லிவிங் ரூம் (ஊட்டி)

'அந்தந்த ஊரில்தான் ஓட்டல்கள் இருக்கிறதே. முன்கூட்டியே புக் செய்து விட்டுப் போனால் போச்சு; இதற்குப் போய் மொத்தமாய் ஒரு தொகையை முடக்க வேண்டுமா' என்று விஷயம் தெரியாதவர்கள் கேட்கலாம்.

சீசன் சமயத்தில் இம்மாதிரி இடங்களில், ஓட்டலில் ரூம் கிடைப்பது குதிரைக் கொம்பு. அப்படியே கிடைத்தாலும் நாம் எதிர்பார்க்கிற வசதிகளுடன் கூடிய அறைகளுக்கு வாடகை ஏராளம்.

இந்திய மக்கள் - குறிப்பாக மத்திய தர வருப்பினர் கணக்குப் போட்டுப் பார்த்தார்கள். நாளுக்கு நாள் உயர்ந்து கொண்டே போகும் விலைவாசிகளையும் கணக்கில் எடுத்துக் கொண்டார்கள். இந்த திட்டத்தில் ஆதாயம் நிறையவே இருப்பதை உணர்ந்

தார்கள். ஸ்டெர்லிங் அங்கத்தினராகி வருடத்துக்கு ஒரு வாரத்தை விலைக்கு வாங்கப் போட்டி போட்டுக் கொண்டு முன் வந்தார்கள். சுப்பிரமணியவின் ஐடியா வெற்றி பெற்று விட்டது.

"இந்தப் பொருளாதார அடிப்படை மட்டுமே வெற்றிக்குக் காரணமல்ல" என்கிறார் சுப்பிரமணியன். "ஸ்டெர்லிங் அங்கத்தினர்களுக்கு அளிக்கப்படும் வரவேற்பும் உபசாரமும்தான் அதை விடவும் முக்கிய பங்கு வகிக்கிறது. கல்கத்தாவிலிருக்கும் ஒரு முகர்ஜியோ, பானர்ஜியோ இங்கே கொடைக்கானலில் வந்து தங்க வேண்டும் என்று விரும்புகிறார் என வைத்துக் கொள்ளுங்கள். அவருடைய டிக்கெட்டுகளை வாங்கிக் கொடுத்து, ரயில்வே ஸ்டேஷனிலோ, ஏர் போர்ட்டிலோ போய் அழைத்துக் கொண்டு வந்து, பத்திரமாய்க் கொடைக்கானலில் அவரது 'அபார்ட்மெண்டி'ல் கொண்டு சேர்ப்பது வரை ஸ்டெர்லிங் ஹாலிடே நிறுவனம் பொறுப்பு ஏற்கிறது. திரும்ப ஊர் போய்ச் சேர்வதற்கும் டிக்கட் முதற்கொண்டு எல்லா வசதிகளையும் எங்கள் ஊழியர்கள் செய்து கொடுத்து விடுவார்கள்!"

ஆக மொத்தம், விடுமுறை எடுத்து வந்தவர், சின்னக் கவலை பெரிய கவலை என்று ஏதுமின்றி, நிஜமாகவே விடுமுறையை அனுபவிக்கிறார். கால்ஃப் விளையாடுகிறார், போட்டிங் போகிறார், 'ஸைட் ஸீயிங்' என்று ஊரைச் சுற்றிப் பார்க்கிறார். எல்லாவற்றுக்கும் வசதிகள் இருக்கின்றன. இவையெல்லாம் போதாது என்றால் FUN MANAGER என்று இருக்கிறார். விளையாட்டுக்காட்டி சிரிக்க வைப்பதே இவர் வேலை. மாயாஜால மேஜிக் கூட செய்து காண்பிப்பார்கள்! போட்டிகள் வைத்துப் பரிசுகள் தருவார்கள்.



* படுக்கையறை (கொடைக்கானல்)

'வருடா வருடம் ஏற்காடுக்கேவா போவது? இந்த வருடம் ஊட்டிதான்' என்று வீட்டில் 'உத்தரவு' ஆகிறது என்றால், ஓகே-ஊட்டி. 'என்ன எப்பப் பார்த்தாலும் ஊட்டி, கொடைக்கானல்தானா?' என்று ஒரு சின்னப் புயல் கிளம்புகிறதா? கவலைப்பட வேண்டாம். முசோரி, டார்ஜிலிங்கில் போய் ஒரு வாரம் டேரா போடலாம். பண்ட மாற்றுப் போலத்தான் இந்தத் திட்டம் செயல்படுகிறது. முகர்ஜி ஏற்காடு வர ஏகாம்பரம் முசோரி போகிறார்.

அட, எங்குமே போகப் போவதில்லை இந்த வருடம் என்று முடிவு எடுத்தால், இடத்தை இன்னொருவருக்கு விட்டுக் கொடுத்துப் பணத்தைப் பெறலாம். இல்லையானால் ஸ்டெர்லிங்குக்கே அந்த வாரத்தை விட்டுக் கொடுத்து அடுத்த வருடம் இரண்டு வாரமாகத் தங்கிக் கொள்ளலாம்!

ஸ்டர்லிங் ஹாலிடே ரிசார்ட் திட்டத்தில் பங்கு கொள்ளும் எவரும், 'ரிசார்ட் கண்டோமினியம் இண்டர்நேஷனல்' என்ற அமைப்பிலும் உறுப்பினராகக் கருதப்படுகிறார். அதனால் போகவர பயணச் செலவை ஏற்கக் கூடியவர்களுக்கு, உலகின் பல்வேறு பகுதிகளில் உள்ள இது போன்ற



* கோவா: உல்லாச ஊஞ்சலில் ஓய்வு

விடுதிகளில் தங்கும் வாய்ப்பு கூடக் கிடைக்கிறது. கொஞ்ச நஞ்சமல்ல, 2800 இடங்களில் உள்ள விடுதிகள்!

''மலை வாசஸ் தலங்களுக்கு மக்கள் குளிர்காலத்தில் கூட வருவார்களா? 52 வாரங்களுக்கு ரிசர்வேஷன் இருக்குமா?''

''நிச்சயமாக, ரொம்பப் பேர் டிசம்பர் குளிரைக் கூடக் கொடைக்கானலில் அனுபவிக்க விரும்புகிறார்கள். இன்னும் அமைதி கெடாமல் இருக்கிறது என்பதால் அங்கே தான் ரொம்ப டிமாண்ட். ஒவ்வொரு ஊரிலும் 100, 150 விடுதிகள் என்றால் கொடைக்கானலில் மேலும் அதிகமாகக் கட்டி வருகிறோம். தவிர புக்கிங் இல்லாத நாட்களில் ஹோட்டல் அறைகளை வாடகைக்கு விடுவதுபோலவே தேவைப்பட்டவர்களுக்குத் தருவோம். இந்த உபரி வருமானம் பராமரிப்புக்கு உதவும்.''



● தங்குமிடத்தில் உள்ள சமையலறை (ஏற்காடு)

வேரூன்றி வருகிறது. எனவே ஸ்டெர்லிங் ஹாலிடேக்கு நல்ல எதிர்காலம் இருக்கிறது'' என்கிறார் ஆர்.எஸ்.

இவரே சார்ட்டர்ட் அ க்கௌ ண் ட ண் டாக இருப்பது நிறுவனத்துக்கு ஒரு பெரிய பலம் என்பது தவிர, இங்கு டி.ஐ. நிறுவனத்தில் தொடங்கி, பிறகு நைஜீரியா நாட்டிலும் ஐரோப்பாவிலும் பெற்ற அனுபவங்கள் இவருக்குத் துணை நிற்கின்றன. நிதி வட்டாரங்கள் நன்கு அறிந்த என்.என். பய் சேர்மன் பொறுப்பிலும், விவேக் நாராயண் பய் மற்றும் பி.என். மோகன் இயக்குநர்களாகவும் இன்று இருந்து ஆர்.எஸ்.ஸின் வெற்றிக்குக் கை கொடுக்கிறார்கள். பதினைந்தாயிரம் பங்குதாரர்கள்.

தனி நபர்கள் தவிர நிறுவனங்களும் கூட தங்கள் அதிகாரிகள் வருஷத்துக்கு ஒரு வாரமாவது ஹாய்யாக இருக்கட்டுமே என்ற கருத்தில் ஸ்டெர்லிங் அபார்ட்மெண்டுகளை வளைத்துப் போட்டிருக்கின்றன. ஒரு வார பூரண ஓய்வு, 51 வாரச் சுறுசுறுப்புக்கு அஸ்திவாரமாகிறது.



● உணவுக் கூடம் (ஊட்டி)

வெளிநாட்டுச் சுற்றுலாப் பயணிகளை மனத்தில் கொண்டு, இப்போது கடற்கரையோரமாகவும், வனங்கள் சரணாலயங்களை யொட்டியும் ஸ்டெர்லிங் விடுதிகள் கட்டப்பட்டு வருகின்றன. உள்நாட்டுப் பயணிகள் விடுமுறையுடன் தல யாத்திரையையும் இணைக்க விரும்புவதால் வைஷ்ணோதேவி, காசி, கயா, குருவாயூர் என்று ஸ்டெர்லிங் ஹாலிடே இடங்கள் விரிவடைந்து வருகின்றன.

''இன்று மத்திய தர, மேல் மத்திய தர வகுப்பினரிடையே பணப் புழக்கம் அதிகரித்து வருவதுடன், விடுமுறைக்கு வெளியூர் செல்ல வேண்டும் என்ற கருத்தும்

''ஸ்டெர்லிங்கின் வெற்றி, 'மேக்ஸ் ஓர்த்' நிறுவனத்தையும் தோற்றுவிக்க ஊக்கமளித்திருக்கிறது போலிருக்கே!'' என்றால்,

''அது வேறு கதை, அதைப் பற்றி இன்னொரு நாள் சொல்கிறேன்!'' என்று பேட்டியை முடித்துக் கொள்கிறார் சுப்பிரமணியன்.

- எஸ்.வி.என்.



* எழுதாதது குறித்து...?



* வெற்றி பெறுவாரா?



* தேர்தல் உறவு

● த.குணசேகரன், கவுந்தப்பாடி.

*? சேஷன் இந்தியப் பிரதமரானால் நாடு உருப்படுமா?*

! வறுபடும்!

● வெண்ணிலவன், விழுப்புரம்.

*? பாலகுமாரன் எழுதாதது குறித்து?*

! தியானம், குண்டலினி என்று சிந்திக்க ஆரம்பித்து விட்டவரை, 'எழுத வேண்டாம்' என்று குரு கட்டளையிட்டுவிட்டதாகக் கூட ஒரு வதந்தி! ஆனால், ''அப்படியெல்லாம் ஒன்றுமில்லை; சினிமாவில் பிஸி என்பதால்தான் எழுதவில்லை'' என்று அபயமளிக்கிறார். ''தூங்கும்போது கூட காலை ஆட்டிக் கொண்டு தூங்க வேண்டும், இல்லாவிட்டால் செத்து விட்டதாகச் சினிமா உலகில்தான் சொல்வார்கள் என்றால், எழுத்துலகிலுமா?'' என்று கேட்கிறார்!

● அ.மணிவண்ணன், சென்னை.

*! வைஜெயந்திமாலா மயிலாப்பூர் தொகுதியில் நின்றால் வெற்றி பெறுவாரா?*

! அவர்தான் ஏற்கெனவே எம்.பி. ஆகிவிட்டாரே, அப்புறம் எதற்கு மயிலாப்பூரில் நிற்கிறதாம்? மேலிடக் கட்டளை ஏற்று 'ஜெ' எதிர்ப்பை டின்னர் கொடுத்து ஆரம்பித்து வைத்திருக்கிறார். ஏப்பத்தில் முடியாமலிருந்தால் சரி!

● முகம்மது மீரான், சென்னை.

*? இளையராஜாவுக்கு ஆளுனர் சென்னா ரெட்டி டாக்டர் பட்டம் வழங்கியுள்ளாரே?*

! அதானே! இதுவே, அம்மா தமது திட்டப்படி வேந்தராகி இருந்தால் கிடைத்திருக்குமா?

● கே.ராஜுபாலு, சேலம்.

*? வி.பி.சிங், 'ஜனதா தளத் தலைவர் பதவி வேண்டாம்' என மறுக்கிறாரே, ஏன்?*

! இரத்தப் புற்றுநோய் தாக்கியிருப்பது ஒரு காரணம். 'தாழ்த்தப்பட்ட ஒருவர் தலைவராக வேண்டும்' என்று விரும்புவது இன்னொரு காரணம். இரண்டுமே குடுமிப்பிடி சண்டைக்குத்தான் வழிவகுக்கப் போகிறதேயன்றி சுமுகமான தலைமை மாற்றம் நிகழப் போவதில்லை.

● அ.ராஜா ரஹ்மான், திருப்பரங்குன்றம்.

*? 'அ.தி.மு.க.வுடன் தேர்தல் உறவு கொள்ள பாரதிய ஜனதா திறந்த மனதுடன் உள்ளது' என்று கோவிந்தாச்சார்யா கூறியிருப்பது குறித்து?*

! இந்த இதழ் வட்டமேஜை பகுதியில் நமது கார்ட்டூனுக்காகக் கோபித்துக் கொண்டிருக்கும் கோலார் தங்கவயல்காரரிடம் கேளுங்கள்!



* பிரதமரானால்...?

● கரிசல் புளி ராமன், மதுரை.

*? தொடக்க ஆட்டக்காரராகச் சென்று, 49 பந்துகளில் 82 ரன்கள் குவித்த சச்சின் பற்றி...?*

! வரிசை மாறினாலும் விமரிசையாக விளையாடுவேன் என்று நிரூபித்தார். ஆயினும் என்ன பயன்? தொடர், 'டிரா'வில் முடிந்து விட்டதே!

● எஸ். நடராஜ், சீர்காழி.

*? 1994ல் யார் நம்பிக்கை நட்சத்திரமாகத் தெரிகிறார்கள்?*

! கிரிக்கெட் தேர்வாளர்களுக்கு பெடாடேயும் பூபிந்தரும். இவர்களுக்கு இடமளிக்க

# சேஷன் இந்தியப் பிரதமரானால்..?



* டாக்டர் பட்டம்...



● கழற்றி விடப்பட்டோர்



● மறுபடி அனுமதி



● [illegible]

மஞ்ரேகர், அம்ரேயுடன் ஆல் ரவுண்டர் கபிலையும் கழற்றி விட்டு விட்டார்கள். கபில் விஷயம் கவலை அளிப்பது: 'நுணலும் தன் வாயால் கெடும்' என்பது மெய்யாகியிருக்கிறது என்றாலும், காப்டன் அஷாரின் விருப்பம் கூட இவ்விஷயத்தில் புறக்கணிக்கப்பட்டிருப்பதாகக் கருத இடமிருக்கிறதே, அது தான் கலங்க அடிக்கிறது.

● பாலசுப்பிரமணியன், சென்னை - 52.

*? பல் கட்டண உயர்வு கோப்பில் 'ஜெ' கண்ணீர் விட்டபடி கையெழுத்திட்டாராமே?*

! முன்னாள் சினிமா ஸ்டாருக்கு அது ஒன்றும் கஷ்டமான காரியமல்ல.

● க.சேகர், சென்னை.

*? சென்னை தொலைக்காட்சியில் இந்தி தொடர்களை மொழி மாற்றம் செய்து ஒளி பரப்புவது ஏன்?*

! அது எளிது; செலவு குறைவு என்பதால் தான் இருக்கும் என்றும் தமிழ் எழுத்தாளர்கள், வீடியோ தயாரிப்பாளர்களை அவமானப்படுத்தும் நோக்கம் இல்லை என்றும் நம்புவது கடினமாக உள்ளது.



● பதவி வேண்டாம்!



● விளம்பர ஆட்டம்

● தேனம்மாள் ராமசாமி, ஸ்ரீவில்லிபுத்தூர்.

*? வை.கோ. வி.பி.சிங்கைச் சந்தித்ததன் நோக்கம் என்ன?*

! பிற்படுத்தப்பட்டோரின் இன்றைய ஹீரோ தம்மை முதுகில் தட்டிக் கொடுத்ததாகப் பெருமையடித்துக் கொள்வதற்குத் தான்.

● க.நடராஜன், சென்னை-54.

*? 'இ.காங்கிரஸ் சட்ட மன்ற உறுப்பினர்கள் மன்னிப்புக் கேட்டால்தான் சட்ட சபைக்குள் அனுமதிப்பேன்' என்று சேடப்பட்டி கூறியுள்ளது...?*

! முதல்வரின் வேண்டுகோளை ஏற்று மறுபடி வர அனுமதித்து விட்டார். மன்னிப்புக் கோராத போதே மன்னித்து விட்டாராம்! இதைப் பெருந்தன்மை என்பதை விட, ஜனநாயகப் பாதையை விட்டு விலகிச் சென்ற சட்டமன்றம், திரும்பி சரியான பாதைக்கு வந்திருக்கிறது எனலாம்.

● எஸ்.அழகர் ராஜா, சென்னை-89.

*? தி.மு.க.வுடனான உறவை மார்க்சிய கம்யூனிஸ்ட் கட்சி முறித்துக் கொண்டது பற்றி...?*

! வேறு பசையுள்ள இடம் தேடுகிறார்களோ என்னவோ, முறித்துக் கொண்டு போகட்டும்; ஆனால் அதற்குச் சொல்லப்படும் காரணம் (தி.மு.க. - காங்கிரஸ் உறவு) சரியில்லையே! கருணாநிதி பல முறை மறுத்தும் அதையே கூறி, வெளியேறியதில் இனி அத்தகைய கூட்டணி அமைவதைக் கூடச் சுலபமாக்கியிருக்கிறார்களே!

● ஆர்.ஜேஸ்மின் ரமேஷ், கம்பம்.

*? 'அரசின் மொத்த வருமானத்தில் ஊழியர் சம்பளத்துக்கே 70 சதம் போகிறது; மக்களுக்கு 8 சதம் தான்' என்று நெடுஞ்செழியன் கூறியிருப்பது குறித்து...?*

! காலம் கடந்த ஞானோதயம்.

● கே.சிவகுமார், மூவலூர்.

*? மூட நம்பிக்கை?*

! டாக்டர் ராமதாஸைக் கைது செய்து விட்டால் அவர் செல்வாக்கு குறையும் என்று நினைப்பது.

● எஸ். பாலகணேஷ், காரைக்குடி. ❏

*? அரசியல் தலைவர்கள் சட்ட சபைக்கு வருவது பேச்சு வார்த்தைக்கா? ரகளைக்கா?*

! தாமரைக்கனியும், சிங்காரமும் அடி தடி, குத்து வெட்டுக்கு என்கிறார்கள்.

● ஆர்.கண்ணன், பெத்தரெங்கபுரம்.

*? ஒரு நல்ல தலைவனுக்கு இருக்க வேண்டிய தகுதி?*

! இன்றைய நிலவரப்படி சொல்வதென்றால், பல்லை மடக்கி வழிப்பறிக் கொள்ளை நடக்கும் சூழலைக் கூடச் சாதனையாக்கி, அரசுச் செலவில் சர விளக்கில் மின்னச் செய்யத் தெரிந்திருக்க வேண்டும்!

❏ ரூ.25 பரிசு பெறுபவர்:
எஸ்.பாலகணேஷ்,
35, சிதம்பர அக்ரஹாரம்,
காரைக்குடி - 1



டூரிஸ்ட் கைடு : அதுவா, ஹி... ஹி...
எங்க ஊரு சுவர் அலங்காரம்!

**கல்கி :** ஜப்பான், சிங்கப்பூர் போன்ற பல சிறிய நாடுகளுடன் ஒப்பு நோக்குகையில் இந்தியாவில் உள்ள சுற்றுலாத் தலங்கள் மிக அதிகமானவை, அதிசயம் நிறைந்தவை. இருந்தாலும் அச் சிறு நாடுகள் ஈர்க்கும் அளவுக்குச் சுற்றுலாப் பயணிகளை நம்மால் கவர்ந்திழுக்க இயலவில்லையே.... இதற்கு என்ன காரணம்?

**டாக்டர் பூர்ணிமா சாஸ்திரி, *(தென்னிந்திய துணை டைரக்டர் ஜெனரல், மற்றும் ரீஜனல் டைரக்டர் இந்திய அரசின் சுற்றுலாத் துறை)* :** இன்றளவில், சிறிய நாடுகளுக்குச் செல்லும் சுற்றுலாப் பயணிகளின் எண்ணிக்கை பிரமிப்பூட்டுவதாக இருக்கலாம். ஆனால் இந்தியாதான் எதிர்காலச் சுற்றுலா சொர்க்கமாக இருக்கும். நம்மிடம் வளர்ச்சிக்கு அத்தனை சாத்தியக்கூறுகள் உள்ளன. கடந்த நாற்பது வருடங்களாக நம் நாடு அடிப்படை வசதிகள் அபிவிருத்தியில் கவனம் செலுத்தி வந்தது. இந்த அடிப்படை வசதிகள் இன்றி நாம் சுற்றுலாவை வளர்க்க முடியாது. இப்போது அவை பெருமளவு பூர்த்தியாகிவிட்ட நிலையில், சுற்றுலா வளர்ச்சி வேகமாக நடைபெறும். வளர்ச்சி விகிதம் கூடி வருகிறது என்றே சொல்ல வேண்டும். தென்னிந்தியாவில் மட்டும் சுற்றுலா 18% வளர்ச்சியுற்றிருக்கிறது.

ஓர் ஊரிலிருந்து மற்றொரு ஊருக்குச் செல்வோர் வழிப் போக்கர்களாக ஓரிரவு தங்கினால் கூட, சிங்கப்பூர் போன்ற நாடுகளில் அவர்களைச் சுற்றுலாப் பயணிகளாகக் கணக்கெடுத்துக் கொள்கிறார்கள். ஆனால் இந்தியாவிலோ, சுற்றுலாப் பயணி ஒருவரின் சராசரி தங்கும் காலம் 27 நாட்கள்! இந்த 27 நாட்களும் இந்தியாவில் தங்கும் ஒவ்வொரு டூரிஸ்டையும் கணக்கில் எடுத்துக் கொண்டால், 1.8 மில்லியன் சுற்றுலாப் பயணிகள் இந்தியாவில் தங்கிச் செல்கிறார்கள் எனலாம்.

**கல்கி :** சுற்றுலா மூலம் நம் நாடு பெறும் ஆண்டு வருமானம் என்ன? அது படிப்படியாக உயர்ந்துள்ளதா? திருப்திகரமான அளவுக்கு வளர்ந்துள்ளதா?

**பூர்ணிமா சாஸ்திரி :** 1993 இல் சுமார் நாலாயிரம் கோடி ரூபாய் வருமானம் பெற்றுள்ளோம். இந்த நூற்றாண்டின் இறுதிக்குள் அத்தொகை பத்தாயிரம் கோடியை எட்டும் என எதிர்பார்க்கிறோம். இந்த இலக்கை அடைய திட்டம் தீட்டிச் செயல்பட்டு வருகிறோம்.

**கல்கி :** நமது நாட்டில் சராசரி மட்டத்திலான தங்கும் விடுதிகள் மிகவும் குறைவாக உள்ளன. இவற்றை அதிகப்படுத்துவதுடன் இவற்றின் தரத்தையும் (குறிப்பாக உணவு மற்றும் கழிப்பறைகள்) உயர்த்தினால், இன்னும் அதிக அளவில் சுற்றுலாப் பயணிகளை ஈர்க்க முடியுமல்லவா?

**பூர்ணிமா சாஸ்திரி :** நீங்கள் சொல்வது நூற்றுக்கு நூறு சரி. சுற்றுலாத் துறை இதனை நன்கு உணர்ந்துள்ளது. நடுத்தர வர்க்கத்தைச் சேர்ந்த பயணிகளின் தேவைகளை அனுசரித்து, மூன்று நட்சத்திர ஹோட்டல்களின் எண்ணிக்கையை உயர்த்த ஐந்து ஆண்டுகளுக்கு முன்னரே முடிவு செய்யப்பட்டது. இதற்கென இந்த ஹோட்டல்களுக்கு மான்யங்கள் வழங்குவதும் கொள்கையளவில் அப்போதே ஒப்புக் கொள்ளப்பட்டது. இதனால் இந்த ரக ஹோட்டல்கள் ஓரளவு பெருகியிருக்கின்றன. தென்னிந்தியாவில் மட்டும் இத்தகைய தனியார் ஹோட்டல்களில் 11,000

## "எதிர்கால சுற்றுலா சொர்க்கம் இந்தியாதான்!"

அறைகள் உள்ளன. இதைத் தவிர இன்னும் பத்தாயிரம் அறைகளுக்கான வசதி, இரண்டு ஆண்டு காலத்தில் நிறைவேறும். அதே சமயத்தில் சாலையோர விடுதிகள் மற்றும் கழிப்பறை வசதிகளையும் பெருக்கி வருகிறோம். இதற்காகச் சம்பந்தப்பட்ட மாநில அரசுகளுக்கு மத்திய அரசு நிதியுதவி அளித்து வருகிறது. மூன்று நட்சத்திர ஹோட்டல்கள் அயல் நாட்டவரிடையே நல்ல பெயர் எடுத்து வருவதால், மற்ற ஹோட்டல்களும் ஆரோக்கியமான போட்டி காரணமாகச் சிறப்பாகச் செயல்படும் என்று நம்பலாம். தவிர, 'பேயிங் கெஸ்ட்' முறையைப் பிரபலப்படுத்தவும் ஊக்குவிக்கவும் முயன்று வருகிறோம். இதன் மூலம் தரமான தங்கும் வசதிகளை எளிய கட்டணத்துக்கு வழங்க முடியும். தனியார் நிறுவன கெஸ்ட் ஹவுஸ்களையும் இந்த Paying Guest முறையில் வாடகைக்குத் தர ஊக்குவிக்கிறோம். இதில் ஆர்வமுள்ளவர்கள் எங்களைத் தொடர்பு கொண்டு பதிவு செய்து கொள்ளலாம். *(அலுவலக விலாசம் : 154, அண்ணா சாலை, சென்னை - 2.)*

**கல்கி :** உள்நாட்டுப் பயண வசதிகளைப் பெருக்க சுற்றுலாத் துறை என்ன செய்து வருகிறது?

**பூர்ணிமா சாஸ்திரி :** ரயில்வே துறையுடன் இணைந்து திட்டங்கள் வகுத்துள்ளது. உள் விமானப் போக்குவரத்து அமைச்



சகத்தின் ஒத்துழைப்புடன் விமான டாக்ஸி சேவைகளை ஊக்குவிக்க ஆவன செய்து வருகிறோம். எனினும் இன்னும் நிறைய திட்டங்கள் வகுக்கப்பட வேண்டும். நமது சாலைப் போக்குவரத்து இன்னும் மேம்படவே இல்லை. நல்ல சாலைகளுடன் சிறந்த வாகனங்களும் இருந்தால்தான் அயல் நாட்டுப் பயணிகளை ஈர்க்க முடியும். உள் நாட்டுச் சுற்றுலாப் பயணிகள் கூட (சராசரியாக 65 மில்லியன்) இந்த வசதிகளை அதிகம் எதிர்பார்க்கிறார்கள். இந்த நியாயமான எதிர்பார்ப்பை உணர்ந்து அரசு செயல்பட்டு வருகிறது.

**கல்கி :** மேல் நாடுகளில் நமது சுற்றுலா வசதிகள் பற்றி விளம்பரம் செய்ய எவ்வளவு செலவு செய்கிறோம். எதை விளம்பரப்படுத்துகிறோம்? விளம்பரத்துக்கு நல்ல பயன் கிடைக்கிறதா?

**பூர்ணிமா சாஸ்திரி :** சுற்றுலா மற்றும் உள் விமானத் துறை அமைச்சர் குலாம் நபி ஆஸாத், சுற்றுலாத் துறை இணை அமைச்சர் சுக்பன்ஸ் கவுர் ஆகியோர் அவ்வப்போது அயல்நாடுகள் சென்று, நம் நாட்டைப் பற்றி எடுத்துச் சொல்லி வருகிறார்கள். ஐரோப்பா, அமெரிக்கா, ஜப்பான், பிரிட்டன், தென் ஆப்ரிக்கா போன்ற நாடுகளிலிருந்தெல்லாம் இதனால் ஏராளமான பயணிகளைப் பெற்றுள்ளோம். விளம்பரத்துக்கான தொகை கணிசமாக உயர்த்தப்பட்டுள்ளது. நமது பண்பாடு கலாசாரம் தவிர சாகஸ சுற்றுலா, இயற்கை மற்றும் வன விலங்குகளை விளம்பரப் படுத்துகிறோம். பல்வேறு விதமான ரசனைகளை இந்தியப் பயணம் பூர்த்தி செய்ய முடியும் என்று அயல்நாட்டு டீ.வி.யிலும் பத்திரிகைகளிலும் விளம்பரம் செய்கிறோம். கடந்த நான்கு ஆண்டுகளாக, தென்னிந்தியா குறித்த விளம்பரங்கள் அதிகம் செய்து வருகிறோம். மத்திய அரசின் பதினெட்டு சுற்றுலா அலுவலகங்கள் அயல்நாடுகளில் செயல்பட்டு வருகின்றன. இவை தகவல் மையங்களாகச் செயல்படுகின்றன.

**கல்கி :** இந்தியா முழுவதையும் ஒரே பயணத்தில் சுற்றிப் பார்ப்பது இயலாது. எனவே, ஒரு முறை வரும் பயணியை அடுத்த முறை வரச் செய்வதன் மூலமே நாம் நிறைய ஆதாயம் பெற முடியும். இதற்கான முயற்சிகளை நாம் செய்கிறோமா? உதாரணமாக, வட இந்தியா வரும் சுற்றுலாப் பயணிகளுக்குத் தென்னிந்தியாவின் அழகுகள் பற்றி எடுத்துச் சொல்லப்படுகிறதா?

**பூர்ணிமா சாஸ்திரி :** ஒரு புள்ளி விவரக் கணக்குப்படி 42 சதவிகிதம் அயல்நாட்டுப் பயணிகள் இந்தியாவுக்கு மறுமுறை வருகிறார்கள். ஒரு சிலர் வருடந்தோறும் கூட வருவதுண்டு. அவர்களுடைய மகிழ்ச்சிக்கும் திருப்திக்கும் இதுவே அறிகுறி. இந்தியா முழுவதையும் ஒரே முறையில் பார்க்க முடியாது என்பதைப் பெரும்பாலானவர்கள் உணர்ந்தே இருக்கிறார்கள்.

**கல்கி :** சுற்றுலாத் துறை எவ்வளவு தூரத்துக்குத் தனியார் மயமாகியுள்ளது? இத்துறையில் செயல்படும் தனியாருக்கு என்ன ஊக்கம் அளிக்கப்படுகிறது?

**பூர்ணிமா சாஸ்திரி :** அடிப்படையில் சுற்றுலா என்பதே தனியார் மயமான தொழில்தான். ஹோட்டல்கள், டிராவல் ஏஜென்ஸிகள், டூர் ஆபரேடர்கள் என, சம்பந்தப்பட்ட அலுவலகங்கள் தனியார் துறையைச் சேர்ந்தவைதான். அரசு அங்கீகாரம் பெற்ற 88 டிராவல் ஏஜென்ஸிகளும் பன்னிரண்டு டூர் ஆபரேடர்களும் உள்ளனர். அயல் நாடுகளில் விளம்பரம் செய்வதன் மூலம் இவர்களையெல்லாம் அரசாங்கம் ஊக்குவிக்கிறது.

**கல்கி :** இயற்கை வளங்களையோ, வேறு பொருள்களையோ வெளியே அனுப்பாமல் அந்நியச் செலாவணியைச் சம்பாதித்துத் தரும் தொழில் சுற்றுலாதான். இது நம் நாட்டில் உணரப்பட்டுள்ளதா? இந்த உணர்வு இருந்தால் நமது அந்நியக் கடன் குறைய சுற்றுலா பெரிதும் உதவும் என்பதைக் கணித்து, நிதி அமைச்சகம் சுற்றுலாத் துறையுடன் இணைந்து செயல்படும் அல்லவா?

**பூர்ணிமா சாஸ்திரி :** நிதி அமைச்சகத்துடன் இது விஷயமாக ஒத்துழைத்து வருகிறோம். சுற்றுலாவை ஒரு தொழிலாக (industry) அங்கீகரித்து அதற்குரிய எல்லா சலுகைகளையும் நிதியமைச்சகம் அளித்து வருகிறது. இயற்கை வளங்களை வெளியேற்றாமல் அந்நியச் செலாவணி பெற்றுத் தரும் தொழில் இது என்பதை நாங்கள் நன்றாகவே உணர்ந்திருக்கிறோம்.

# வண்ணத்துப்பூச்சி வேட்டை

## இதுவரை பறந்த தூரம்....

டெல்லி வாழ் தமிழ்ப் பெண் ரேகாவுக்கு, சென்னை வாழ் அர்ஜுன் கணவனாகிறான். ஆரம்பத்திலிருந்தே தனது வித்தியாசமான நடவடிக்கைகளின் மூலம் (உதா : "முப்பத்தைந்து வயதிற்குள் முப்பத்தைந்து லட்சம் சம்பாதிக்க வேண்டும்".) ரேகாவை எப்போதும் குழப்ப நிலையிலேயே வைத்திருக்கிறான். போதாக்குறைக்கு, கீதாஞ்சலி என்னும் அவனது அலுவலகப் பெண் வேறு குறுக்கே வருகிறாள்.

இந்தக் குழப்பமெல்லாம் போதாதென்று சிறிது நாள் இவர்களுடன் தங்குவதற்காக அர்ஜுனின் பெற்றோர் கோயமுத்தூரிலிருந்து வருகிறார்கள். மாமியார், மாமனார் vs மருமகள் பூசல்களில் அர்ஜுன் எப்போதும் தன் பெற்றோரையே ஆதரிக்கிறான்.

இதற்கிடையில் ஒரு புதிய சிக்கல்.

ஒரு நாள் ரேகாவிடம் மாமியார், "நீ மாமனாரோடு அதிகம் பேசாதே, பழகாதே. அவர் ஒரு மாதிரி" என்று எச்சரிக்க, அதை ரேகா, அர்ஜுனிடம் சொல்ல, மாமியார், தான் அப்படியெல்லாம் சொல்லவேயில்லை என்று பிளேட்டை மாற்ற, முற்றிய சண்டையில் மறுபடி ரேகாவே தோற்கிறாள்.

சினிமாவுக்கு டிக்கெட் வாங்கி வந்த அர்ஜுன், ரேகா வர மறுத்ததால் கீதாஞ்சலியுடன் போகிறான். இரவு திரும்பி வந்து ரேகாவைச் சமாதானப்படுத்துகிறான். மறுநாள் காலை மாமியாரும் கொஞ்சம் இளகிய, ஏதடா என்று எண்ணியபடி மாலை கீதாஞ்சலியுடன் வெளியே போகிறாள். அவளோடு கூட அவனது சகோதரன் மிக்கியும் வருகிறான். வழியில் கீதா ஏதோ காரியமாய் இறங்கி விடுகிறாள். ரேகா, மிக்கியுடன் அவர்கள் வீட்டுக்குச் செல்ல, அங்கு அவனது லைப்ரரியைப் பார்த்து பிரமிக்கிறாள்.

பிரமித்துக் கொண்டிருக்கும் போதே மிக்கி, அவளைக் கட்டிப்பிடிக்கிறான்....

● ○ ● ○ ● ○ ● ○ ● ○ ● ○ ● ○

15

*கடல் கடந்து அமுதம் கொண்டு*
*கலசத்தை நிறைத்தாற் போல*
*உடல் உருகி வாய் திறந்து*
*மடுத்து உன்னை நிறைத்துக் கொண்டேன்.*
*- பிரபந்தம்*

பின்னாலிருந்து வளைத்துக் கட்டியவனைப் பிடுங்கி எறிய வேண்டும்; மேலும் முயன்றால் காயப்படுத்த வேண்டும் என்பது தெளிவாக இருக்க என்னைக் கட்டிப் பிடித்த அந்தக் கைகளை அப்படியே விலக்கிப் பிரித்து, அவனைத் தள்ளினேன்.

"விடு விடு என்னை" என்று சொல்ல -

**சுஜாதா**

"தப்பா நெனைச்சுக்காத ரேகா. தப்பா நெனைக்காதே. நான் உன் சகோதரன் போல. உன் மேல அன்பினால் இப்படிச் செய்தேன்" என்று புளுகினான்.

"அன்புன்னா வேற எதாவது முறை இருக்கு மிக்கி. வாய் வார்த்தையாச் சொல்லலாம். நாகரிகமா எவ்வளவோ முறைகள் இருக்கு."

"என்னத் தப்பா நெனைச்சுக்கிட்டு இருக்கே. நான் செய்ததில் எந்த வித கெட்ட நோக்கமும் இல்லை. இது தூய்மையான சகோதரபாசம், அவ்வளவுதான்..."

*சகோதர பாசமாம்! ராஸ்கல்!*

"இது ரொம்ப ஓல்டு டயலாக் மிக்கி. நான் அவ்வளவு முட்டாளில்லை."

"நீ இதை வேணும்னா அர்ஜுன் கிட்ட சொல்லிக்கலாம். நடந்ததை அப்படியே சொல்லலாம்."

இது சினிமாவில் இல்லாத டயலாக். எனக்கு ஆச்சரியமளித்தது.

''சொல்லத்தான் போறேன். நான் அவர் கிட்டருந்து எதையும் மறைக்க மாட்டேன்'' என்றேன்.

ஸீதா பரிசுப் பொருளை பளபள காகிதத்தில் ரிப்பன் போட்டுக் கட்டிக் கொண்டு, ''லவ்லி பீஸ். தஞ்சாவூர் ப்ளேட். ஸேல்ல கெடைச்சது. டிஸ்கவுண்ட் இருபத்தஞ்சு பர்ஸண்ட்'' என்றவள், நாங்கள் இருவரும் நிற்கும் நிலையைப் பார்த்தாள்.

''எனிதிங் ராங்?''

மிக்கி எதுவுமே நடக்கவில்லை போல, ''ஸீத், என்ன உன் ஃப்ரெண்டு இவ்வளவு சென்ஸிட்டிவா இருக்கறாங்க. கவிதையில் எல்லாம் இத்தனை இண்டரஸ்ட் இருக்கிறதேன்னு முதுகில தட்டிக் கொடுத்தேன். மிஸ்டேக் பண்றாங்க!''

மார்பின் மேல் பரவினதை எப்படி விவரமாகச் சொல்ல முடியும்?

''இல்லை ரேகா. சரியாச் சொல்லலை உன் பிரதர். நான் அர்ஜுன் கிட்ட சொல்லியே ஆகணும். நடந்தது வேற.''

''நானே சொல்றேன்'' என்றாள் ஸீதா. ''மிக்கி, யு ராஸ்கல்! இனிமே என் ப்ரண்டை பாராட்டணும்னா கொஞ்ச தூரத்தில இருந்தே பாராட்டு. இந்த மாதிரி அணைச்சுக்கற வேலையெல்லாம் வேண்டாம்'' என்றாள்.

''சரி ஸிஸ்டர், அப்படியே செய்றேன்'' என்றான் அவன் சிரித்துக் கொண்டே. இருவரும் இந்த விஷயத்தை இத்தனை லைட்டாக எடுத்துக் கொண்டிருப்பது எனக்கு வியப்பாகவும் வேதனையாகவும் ஆத்திரமாகவும் இருந்தது.

''முதுகில தட்டிக் கொடுத்தா எல்லாம் தப்பில்லை ரேகா!''

''மிக்கி உண்மையைச் சொல்லுங்க. முதுகிலதான் தட்டிக் கொடுத்திங்களா?''

''ஐ ஜஸ்ட் கேவ் ஹர் எ ஹக். அவ்வளவுதான்.''

ஸீதா என்னைப் பார்த்து, ''அத்தனை கட்டுப் பெட்டியா இருக்க முடியாது ரேகா. நீ மாடலிங் வேற பண்ணப்போற.''

எனக்கு ஆச்சரியமாக இருந்தது. மார்போடு அணைத்து அவன் உள்ளங்கை என்

ஸீதாவுடன் எழும்பூர் ஹாண்டிக்ராப்ட் போய் காட்டனில் உடைகள் வாங்கிக் கொண்ட போதெல்லாம் மிக்கியும் கூடவே வந்திருந்தவன், சந்தர்ப்பம் கிடைத்த போதெல்லாம் என்னைப் பார்த்துப் புன்னகை செய்தான். எப்படி இவ்வாறு இவர்களால் நடந்து கொள்ள முடியும்? எனக்கு கூசிக் குறுகி போகிறதே!

சாயங்காலம் அர்ஜுன் வழக்கம்

போல் லேட்டாக வந்ததும் எப்போது சொல்லலாம் என்று தருணத்தை எதிர் பார்த்துக் கொண்டிருந்தேன்.

ராத்திரி அவர் நகம் அதிகமாக வளர்ந்திருக்கிறது என்று நகவெட்டி கொண்டு வரச் சொன்னார்.

''விளக்கு வெளிச்சத்தில், கை நகங்களை ராத்திரி வெட்டக் கூடாது. தரித்திரம் வரும் என்று அம்மா சொல்வாள்'' என்று சொல்லிப் பார்க்க, ''உன்னை வெட்டச் சொல்லவில்லை'' என தானே வெட்டிக் கொண்டிருக்கும் போது, ''ஒண்ணு சொல்வேன் கோவிச்சுக்க மாட்டீங்களே?'' என்ற போது, அவரே, ''மத்யானம் என்ன நடந்தது?'' என்றார்.

நான் சொன்னேன், ''ஹேமாவின் மிக்கி அண்ணன் என்னைக் கட்டிப் பிடித்தான் திடீர் என்று.''

''உடனே நீ பதறிப் போய் தமிழ் சினிமா வில்லனைப் போல அவனை ட்ரீட் பண்ணிக் கத்தினாயாமே?''

''யார் சொன்னா?''

''ஹேமாதான் சொன்னா. மிக்கியும் வந்திருந்தான்.''

''இல்லை அர்ஜுன்! தப்பா நகவல் கொடுத்திருக்காங்க. எனக்கு அவன் வந்து என்னை அந்த மாதிரி பின்னால இருந்து கட்டிப் பிடித்தது பிடிக்கலை கையை விலக்கி இனிமே இந்த மாதிரி செய்யாதிங் கன்னேன்.''

''அதுக்கு அவன் என்ன சொன்னான்?''

''நீ எனக்கு சிஸ்டர் மாதிரி, சகோதர பாசத்திலதான் அப்படி செய்தேன். தப்பா நெனைக்காதே'' என்றான்.

''அதுதான் உண்மை! ஒக், டோண்ட் பி ஸோ சென்சிட்டிவ். உன் ப்ராப்ளம் என்னன்னா யூ ஆர் டூ சென்சிட்டிவ். எதை யெடுத்தாலும் மிகைப்படுத்தறே. எக்ஸாஜிரேஷன். யாராவது உன்னைத் தொட்டுட்டா உடனே உன்னை, கற்பழிக்க வரான்னு ஏன் நினைக்கக்கணும்? மிக்கி யாரு தெரியுமா? அவன் ஆட் ஏஜென்ஸி வெச்சிருக்கான். அவன் விரும்பினா எத்தனையோ அழகான பெண்கள் காலடியில் வந்து விழுவா தெரியுமா? உன்னைப் போல கல்யாணம் ஆன ஹவுஸ் வைப்பை அவன் நாடத் தேவையில்லை. அவன் குறிக்கோள் எல்லாம் புனிதமானவை. கொஞ்சம் மெச்சுரா நடந்துக்கோ. மிக்கி எனக்கு ரொம்ப முக்கியமான பார்ட்னர். நானும் அவனும் ஒரு பெரிய பப்ளிக் இஷ்யு கொண்டு வரப் போறோம். அவனோட விரோதமில்லாம இருக்கிறது முக்கியம்.''

''அப்படின்னா நான் இனிமே அவனைப் பார்க்க மாட்டேன்.''

''அவனைன்னு சொல்லாதே. அவரைன்னு சொல்லு.''

''எனக்கும் ஹேமாவுக்கும் கூட எதும் வேண்டாம் இனிமே.''

''சரி, பேசாம வீட்டிலயே எங்க அம்மா, அப்பா கூட சண்டை போட்டுண்டே இரு.''

நான் கொஞ்ச நேரம் மௌனமாக இருக்க, ''போ! சமையலறைக்குப் போய், அவா கூடவும் கொஞ்சம் சண்டை போடு. என்னையே தொந்தரவு பண்ணாதே'' என்று கொடும் சொற்களை வீசினார்.

எனக்கு அழுகை வந்தது. அடக்கிக் கொண்டேன். அழக்கூடாது. இப்போது தான் சமன்பாடுகள் புரிகின்றன. மிக்கி அவருக்கு முக்கியம். அதனால் மிக்கி செய்வதை எதையும் அவர் லேசில் தப்பர்த்தம் பண்ணிக் கொள்ளப் போவதில்லை என்பது தெரிந்தது. இனிமேல் நாம்தான் ஜாக்கிரதையாக இருக்க வேண்டும். ஒருவேளை நிஜமாகவே அவர்கள் வழக்கம் அதுதானோ? நாகரிகம் முற்றினால் அந்த மான பாராட்டைக் காட்டும் முறை இப்படித்தானோ என்று கூட நினைக்கத் தோன்றியது. அவ்வளவு சர்வ சாதாரணமாக அதை எடுத்துக் கொண்டார். எனக்கு அப்படி எடுத்துக் கொள்ளவே முடியாது. அது என் ரத்தத்தில் இல்லை. அப்பா கூட என்னைத் தொட்டது கிடையாது.

அடுத்த வாரம் முழுவதும் நான் ஹேமாவைக் கூப்பிட்டுப் பேசவில்லை. அவளே தான் புதன்கிழமை போன் செய்தாள். ''ஹாய் என் மேல கோபமா. என் அண்ணன் மேல உள்ள கோபத்தை என் மேல காட்டணுமா?''

''இல்லை ஹேமா, வீட்டிலயே பிஸியா இருந்துட்டேன்.''

''எதுக்காக வீட்டிலயே அடைஞ்சு கெடக்கணும்? ஒரு ஸேல் போட்டிருக்கு; வா போகலாம். ஹவுஸ் ஹோல்டு குட்ஸ்.''

''உன் அண்ணன் வரதா இருந்தா நான் வரலை.''

''அப்படி என்னம்மா அவன் மேல அத்தனை கோபம். சரி வரமாட்டான். அவன் கூடவே பேசிடு'' என்று நான் போனை வைப்பதற்குள் மிக்கியின் குரல் கேட்டு. ''வணக்கம், மிஸஸ் அர்ஜுன்! எப்படி இருக்கீங்க? சௌக்கியமா?''

''நான் உங்களோட பேச விரும்பலை'' என்றேன்.

''நான் பேச விரும்பறேனே. அதான் ப்ராப்ளம். அன்னிக்கு நடந்ததைப் பத்தி அர்ஜுன் என்ன சொன்னார்?''

நான் போனை வைத்து விட்டேன்.

கொஞ்ச நேரம் கழித்து அது மறுபடி அடிக்க அடிக்க, அதை எடுக்காமலே காத்திருந்தேன். மாமியார்தான் வந்து, ''என்ன பொண்ணு நீ. மூஞ்சி முன்னால போன் அடிக்கறது, எடுக்காம பார்த்துண்டே இருக்கிறே? உடம்பு கிடம்பு சரியில்லையா?'' என்றார்.

நான் போனை எடுக்க, அர்ஜுன்தான், நல்லவேளை. "எத்தனை நேரம் போனை எடுக்கறதுக்கு. வீட்டில எல்லாரும் என்ன பண்றீங்க?"

"இல்லை அர்ஜுன்."

"என்ன இல்லை நொள்ளை. அம்மா கிட்ட கொடு. ஆசீர்வாதம் வாங்கணும்."

"அம்மா உங்களைத் தான் இவர் கூப் பிடறார்" என்று சொல்லி விட்டு மிகவும் விரக்தியுடன் என் அறைக்குச் சென்றேன்.

அம்மாவின் பதில் குரலில் சந்தோஷம் தொனிப்பதைக் கவனித்தேன்.

"அப்படியா, அப்படியா! எனக்குத் தெரியும்டா பாலாஜி, உன்னால முடியும் னுட்டு. அப்பா கேட்டா ரொம்ப சந்தோஷப் படுவார். கடவுள் புண்ணியத்தில நடந்தே தீரும்."

போனை வைத்ததும், "என்னம்மா?" என்றேன்.

ஏதோ ஷேர் போட்டதில நிகரமா பத்து லட்சம் ஒரே நாள்ள பண்ணிட்டானாம். ரொம்ப கெட்டிக்காரன். இந்த பிள்ளை மிக்கி இருக்கான் பாரு, கீதாவோட அண்ணன், அவனும் இவனும் சேர்ந்துதான் பண்ணானாம். கெட்டிக்காரன். என்ன சமத்து! என்ன சமத்து!" என்றாள்.

எனக்குச் சந்தோஷமாகவே இல்லை.

மாமனார் உள்ளே வந்து "அம்மா மரு மகளே உன் ரூமுக்குப் போய்டும்மா. உங்க மாமியார் ஏதாவது தப்பா நெனைக்கப் பாம்மா" என்றார்.

'சே' என்று எனக்கு வெறுப்பாக வந்தது. 'என்ன ஒரு ஜன்மம் நான். எதற்காக இங்கே வந்து மாட்டிக் கொண்டேன்' என்று தோன்றியது. எங்கேயாவது போய் விட லாம் போலத் தோன்றியது. கல்யாணம் ஆகி ஆறு மாதம் ஆகவில்லை, அதற்குள் இத்தனை சிக்கல்களா என்று. பணம் பண்ணி இருக்கும் சந்தோஷ சமாசாரத்தை என்னிடம் சொன்னால் என்னவாம், இவருக்கு? நான் இன்னும் இந்த வீட்டில் அன்னியள். நான் ஒரு குறுக்கீடு என்பதில் சந்தேகமே இல்லை. எனக்குத் தலையைப் பிய்த்துக் கொள்ள வேண்டும் போல இருந்தது.

அப்பா இந்த மாதிரி சமயங்களில் பிர பந்தம் படிக்கச் சொல்லுவார்.

கடல் கடந்து அமுதம் கொண்டு
கலசத்தை நிறைத்தாற் போல
உடல் உருகி வாய் திறந்து
மடுத்து உன்னை நிறைத்துக்
கொண்டேன்.

கொஞ்சம் படித்து விட்டுப் படுத் துக் கொண்டேன். அகாலமாகத் தூங்கப் போய் என்ன என்னவோ பேய்க் கனவுகள் கண்டு, வியர்வையுடன் எழுந்த போது, என் முகத்தருகே முகத்தருகே முகம் தெரிந்து, ஒரு நிமிஷம் அது மிக்கியோ என்று அச்சம் எழுந்து, உடனே அடங்கியது. அர்ஜுன்!







– ஏ.ஆர்.எம். இஸ்மாயில்

"உன் கிட்ட சொல்லணும், வா! ட்ரஸ் பண்ணிக்கோ, வெளியே போகணும். பார்ட்டி."

"எதுக்கு பார்ட்டி?"

"முதன் முதல்ல பத்து லட்சம் பண்ணிட்டேன். இன்னும் இருபத்தஞ்சு லட்சம்தான் பாக்கி."

"எனக்கு உடம்பு சரியில்லை."

"கதை அளக்காதே. சரியாயிருக்கே. நீ வந்துதான் ஆகணும்."

"மிக்கி வருவானா?"

"மிக்கி இல்லாமயா?"

"அப்ப நான் வரலை."

"வான்னா."

"நான் வரமாட்டேன்."

"வான்னா."

"வரமாட்டேங்கிறேன். கம்மா ஏன் என்னை...."

களீர் என்று என் கன்னத்தில் அந்த அறை விழுந்தது.

(தொடரும்)

# அழகின் இருப்பிடம்; வீரத்தின் விளைநிலம்!

● இயற்கைச் சூழலில் வீடுகள்...

"ஊட்டி, கொடைக்கானல் பற்றி எத்தனை தடவைதான் எழுதுவது?"- ஆசிரியர் குழுவின் சூடான விவாதத்தின் விளைவு, மெர்க்காரா பயணம். அதுவும் மேற்குத் தொடர்ச்சி மலையின் ஒரு பகுதி தான் என்றாலும் வடபகுதி. குடகு மாவட்டத்தின் தலை நகரம்.

மாவட்டம் முழுவதும் மலைப் பிரதேசம்தான் என்பதால், காப்பித் தோட்டங்களுக்கு நடுவில்தான் பயணம். இது சீசன் என்பதால், மல்லிகைத் தோட்டம்போல் பூத்துக் குலுங்குகின்றன காப்பித் தோட்டங்கள். காப்பியின் நறுமணத்தை மட்டுமே தெரிந்திருக்கும் நமக்கு, காப்பிப் பூக்களின் வசீகர மணம் வித்தியாசமாக இருக்கிறது. கூடவே ஏலம், மிளகு, ஆரஞ்சுப் பயிர்கள். இயற்கையின் வஞ்சகமில்லாத அழகு.

ஒருபுறம் அழகை ரசித்தாலும் மறுபுறம் பயம்தான். மெர்க்காரா பாதை அப்படி! அதில் பயணம் செய்யும்போது, நம்ம ஊர் மலைப் பிரதேசங்களின் ஹேர்பின் வளைவுகள் சர்வசாதாரணம். இமைக்கும் நேரங்கூட வேகமாய் இருக்க வேண்டும்; அத்தனை வளைவுகள்! ஆயினும் அந்த டிரைவர்கள் படுசாதாரணமாய் ஓட்டுகிறார்கள். நமது பக்கத்து சீட் காலியாகும்போது, வயது வித்தியாசமின்றி, எல்லா வயதுப் பெண்களும் விகல்பமில்லாமல் வந்து உட்காருகிறார்கள்.

சரியாகச் சொன்னால் 5083 அடி உயரத்தில் இருக்கிறது மெர்க்காரா. இது ஆங்கிலேயர்கள் வைத்த பெயர். ஊரின் அமைப்பு,



● காப்பிப் பூக்கள்...



மடிந்து மடிந்து காணப்படும் கரைகளைப் போல் இருப்பதால் 'மடிக்கெரி' என்றுதான் உள்ளூர்வாசிகள் சொல்கிறார்கள்.

ஏற்காடு மாதிரி சீதோஷ்ணம். அதிக வெயிலுமில்லை; அதிக குளிருமில்லை. உயர்ந்தபட்ச வெயிலே முப்பது டிகிரி செண்டிகிரேட்தான் என்பதால் வெயிலில் நடந்தாலும் வியர்ப்பதில்லை. தண்ணீரே இளநீர் மாதிரி ருசிக்கிறது.

எல்லாம் சரி, ஊட்டி, கொடைக்கானல் மாதிரி, அங்கே சுற்றிப் பார்க்க என்ன இருக்கிறது? ஹோட்டல் அறைக்குள்ளேயே அடைந்து கிடக்க வேண்டியதுதானா? என்று கேட்பவர்கள், முதலில் பொடி நடையாக நடந்தே 'ராஜா சீட்'டுக்குப் போகலாம்.

அதுவொரு மலைமுகட்டின் விளிம்பு. கீழே பள்ளத்தாக்குகள். (அட்டைப்படம்) எதிரில் அலையலையாக மலைத் தொடர்கள். அவற்றை உரசிக் கொண்டு போஸ் கொடுக்கும் மேகக் கூட்டங்கள். சில கணநேரம் மலை முகடுகளே தெரியாத அளவுக்குத் தழுவுகின்றன. சில கண நேரம் ஊடிக் கொண்டதுபோல் விலகி ஓடுகின்றன. அந்த இயற்கை ஜோடிக்கு எப்போதும் தேனிலவுதானோ என்கிற மாதிரி அப்படியோர் காதல் விளையாட்டு!

ஆனால், நம்மோடு வந்திருந்த கமலமனராஜனோ,



● வீரம்: குடவர்களின் பாரம்பரியம்...

● மெர்க்காரா நகரின் அழகு....





● ஓம்காரேஸ்வரர் கோயில்...

இந்த அழகை வேறு மாதிரி பார்த்தார்! "அந்த நீல வானப் பின்னணி பாற்கடல் போலவும் அந்த மலைத் தொடர்கள் பள்ளி கொண்ட பரந்தாமனைப் போலவும் தழுவி நிற்கும் மேகக் கூட்டங்கள் திருமாலின் அருகிருக்கும் தாயாரைப் போலவும் தெரியவில்லையா...!" என்றார், உணர்ச்சிவசப்பட்டு!

எப்படியானாலும் அந்தக் காலத்தில் குடகை ஆண்ட ராஜாக்கள், சக பத்தினி(கள்?)யோடு வந்து உட்கார்ந்து கொண்டு, தங்கள் மாலை நேரங்களை உல்லாசமாக்கிக் கொண்ட இடம் இதுதான். அவர்கள் உட்கார்ந்து பார்த்து உல்லாசம் கண்ட சிறு மண்டபம் இன்றும் அங்கே இருக்கிறது. ராஜாக்கள் உட்கார்ந்ததால் 'ராஜா சீட்' என்றும் பெயர் பெற்றது. இப்போது ராஜாக்கள் யாரும் இல்லாததால், ராஜதண்டனை பற்றிய பயமேதுமின்றி, நாமும் அங்கே உட்கார்ந்து பார்க்கலாம்.

பெரியவர்களுக்கு நாள் முழுவதும் உட்கார்ந்து ரசித்தாலும் தீராதுதான். என்றாலும் குழந்தைகளுக்குச் சிறிது நேரத்திலேயே போர் அடித்து விடும். அதற்காகத்தானோ என்னவோ, பக்கத்திலேயே குழந்தைகளுக்கான ரயில்! குழந்தைகளைச் சாக்கிட்டு, நாமும் அதில் பயணம் செய்து மகிழலாம்.

அப்புறம் 'அபி ஃபால்ஸ்' என்று சொல்லப்படும் அருவி. மெர்க்காராவிலிருந்து எட்டு கி.மீ. தள்ளியிருக்கிறது. மெயின் ரோட்டில் இறங்கி, காப்பித் தோட்டத்துக்கு நடுவில் செல்லும் ஒற்றையடிப் பாதையில் ஓர் அரை கி. மீ. நடந்தால் போதும்!

அடர்ந்த மரங்களின் நடுவே பாதை என்பதால், அலுப்பே தெரியாது; அத்தனை குளிர்ச்சி. லேசாகக் கேட்கும் அருவியின் ஓசை, நடக்க நடக்கப் பெரிதாகிக் கொண்டே வருகிறது. சடக்கென்று திரும்பும் ஒரு வளைவில் நாம் திரும்பியதும் பளிச்சென்று தெரியும் அருவி. கோடையிலும் வற்றாத அருவி.

"முப்பத்தைந்து வருடங்களுக்கு முன்னால் என் சக நண்பர்களோடு இங்கே வந்திருக்கிறேன். பிறகு இப்போதுதான் வருகிறேன். அன்று நான் இந்த அருவியை எப்படிப் பார்த்தேனோ, இன்றைக்கும் அப்படியே இளமை மாறாமல் இருக்கிறது. எனக்குத்தான் வயதாகிக் கொண்டே வருகிறது...!" என்று தமது மனைவிக்கும் மகளுக்கும் ஒருவிதச் சிலிர்ப்போடு சொல்லிக் கொண்டிருந்தார் ஐம்பத்தைந்து வயதாகும் சுப்பிரமணியம். (அட்டைப் படம்)

இந்த அருவிக்கே உரிய சிறப்பு, இது எப்போதும் இடிமுழக்க ஓசையோடு ராட்சதத்தனமாக விழுவதில்லை என்பதுதான். அதன் ஓசை கூட ஓர் இனிமையான சங்கீதம் போல்தான் நம் காதுகளில் பாய்கிறது.

மனிதர்களின் வசதிக்காக இன்னும் அந்த அருவிக்குச் செயற்கை முலாம் ஏதும் பூசப்படாததால், குளிக்க ஆசைப்படுபவர்கள் அதிஜாக்கிரதையாகத்தான் போய்க் குளிக்க வேண்டும். இல்லையென்றால் ஆபத்துதான். எதற்கு வம்பு என்று நினைப்பவர்கள் அருவி விழும் இடத்திற்குப் போகாமல், சற்று முன்பே ஓடைபோல் ஓடும் ஜில்லிட்ட நீரில் முங்கி முங்கிக் குளிக்கலாம். இந்த ரிஸ்க் மட்டும் எதற்கு என்று கருதுபவர்கள், கரையிலிருந்தபடியே அருவியின் அழகைப் பார்த்துப் பார்த்து ரசிக்கலாம்.

மெர்க்காராவிலும் ராஜாக்கள் ஆண்ட அரண்மனை இருக்கிறது. திப்பு கல்தான் கட்டிய கோட்டை இருக்கிறது. அவற்றில் இப்போது அரசாங்க அலுவலகங்கள்தான் நடைபெறுகின்றன என்பதால் அங்கு விசேஷமாகப் பார்ப்பதற்கு ஏதுமில்லை.

ஆயினும் ஊருக்குள் இருக்கும் ஓம்காரேஸ்வரர் கோயில் விசேஷமானது. இந்திய - மொகலாய கட்டடக் கலைகள் சேர்ந்த ஒரு கோயில். கோயில் திருக்குளம், பொற்கோயில் குளம் மாதிரி அப்படியோர் சுத்தம். பிடிப்பாரின்றி விளையாடும் மீன்கள்.

இந்தக் கோயிலை 1818-ல் கட்டியவர் லிங்கராஜா என்ற ராஜா. அவர் இதைக் கட்டியதற்குக் காரணம், பக்தி சிரத்தையல்ல; தமது சொந்தப் பாவத்தைப் போக்கிக் கொள்வதற்குத்தான் என்று ஒரு கதை சொல்லுகிறார்கள்.

பாவம், ஓர் ஏழை பிராமணர். வறுமை என்றால் அப்படியோர் வறுமை. இந்த நிலையில் அவருக்கு ஓர் அழகான பெண். வறுமையைத் தாங்க முடியாத அவர், தமது பெண்ணையும் அழைத்துக்

● கே.ஏ.சோமண்ணா: "பெருமைப்படும் பாரம்பரியம்!"



# வானதி வழங்கும் புதிய வெளியீடுகள்
# கோடை விடுமுறையில் படிக்கச் சிறந்த நூல்கள்.

## நாவல்கள்

| | ரூ.பை |
|---|---|
| **விஷ்வக் சேனன்** | |
| பாண்டியன் மகன் (கல்கி பொன்விழாப் பரிசு பெற்ற சரித்திர நாவல்) | 62.00 |
| **இருகூரான்** | |
| புதுப்பாட்டு புதுமெட்டு | 32.00 |
| **அய்க்கண்** | |
| கரிகாலன் கனவு | 57.00 |
| **உமாசந்திரன்** | |
| அன்புச் சுழல் | 65.00 |
| **தஞ்சை செல்வன்** | |
| வாழி நீ வசந்தி (கல்யாணப் பரிசு திரைப்படக் கதையின் தொடர்ச்சி) | 37.00 |
| **கொ.மா.கோதண்டம்** | |
| குறிஞ்ஞாம் பூ (நாவல்) | 34.00 |
| **ஏ.நடராஜன்** | |
| நிலவெல்லாம் நிர்மலா | 22.00 |
| உறவுகள் | 22.00 |
| **சுஜாதா விஜயராகவன்** | |
| அரங்கம் | 55.00 |
| **சத்தியமூர்த்தி** | |
| ஆயிரம் நிலவே வா | 35.00 |
| **குமரி அனந்தன் கட்டுரைகள்** | |
| பூச்சரம் | 18.00 |
| இத்தரையில் முத்திரை பதித்தோர் வரலாறு | 37.00 |
| **திருமதி ராதா தியாகராஜன்** | |
| ஆலை அரசர் கரு முத்து தியாகராசர் (வரலாறு) | 100.00 |
| **புலவர் அருணகிரி** | |
| விடுதலைப் போரில் தமிழ் இலக்கியம் (சுதந்திரப் போராட்டத்தில் தமிழ் இலக்கியத்தின் பங்கு) | 85.00 |

## நாவல்கள், கதைகள்

| | ரூ.பை |
|---|---|
| **மீ.ப.சோமு** | |
| சித்ர மணி | 17.00 |
| விதிக்கதவு | 22.00 |
| மாதுளங்கன்று | 20.00 |
| நீங்காத நினைவுகள் | 16.00 |
| ஐம்பொன் மெட்டி | 20.00 |
| நந்தவனம் | 65.00 |
| **எம்.வி.வெங்கட்ராம்.** | |
| அகலிகை முதலிய அழகிகள் | 28.00 |
| நானும் உன்னோடு | 38.00 |
| நித்ய கன்னி | 26.00 |
| **வாஸந்தி** | |
| வேர்களைத் தேடி | 24.00 |
| **கௌதம நீலாம்பரன்** | |
| நிலாமுற்றம் (சரித்திர நாவல்) | 45.00 |
| பல்லவ மோகினி | 56.00 |

## பயண நூல்கள்

| | |
|---|---|
| ஆஹா அரபு நாடுகள் (சிவசங்கரி) | 20.00 |
| ராஜேந்திர சோழ உலா (சுஜாதா விஜயராகவன்) | 20.00 |
| உலா வர ஓர் உலகம் - (வாஸந்தி) | 20.00 |
| உலகில் பார்த்ததும் உள்ளத்தில் பதித்ததும் (குமரி அனந்தன்) | 37.00 |
| **குரும்பூர் குப்புசாமி (பயண நூல்கள்)** | |
| காஷ்மீர் | 22.00 |
| காசி முதல் ராமேஸ்வரம் வரை | 15.00 |
| கல்கத்தா | 18.00 |
| பாரிஸில் ஒரு பட்டிக் காட்டான் (தமிழ் நாடு அரசு 5000 ரூபாய் பரிசு பெற்ற பயண கட்டுரை) | 42.00 |
| ஜெய்பூர் | 18.00 |
| **டாக்டர் சுப. அண்ணாமலை** | |
| திருக்குறள் சிந்தனை பொருட்பால் (முதல் பகுதி) | 75.00 |
| அறத்துப்பால் | 30.00 |

★ தேவையான புத்தகங்களை VPP யில் பெறக் கடிதம் எழுதுங்கள்.

★ வானதி ஷோரூமுக்கு விஜயம் செய்தால் ஆயிரக்கணக்கான நூல்களை நேரில் பார்த்து வாங்கலாம்.

★ புத்தக வியாபாரிகள் - கல்லூரி நூல்நிலையங்கள் - லெண்டிங் லைப்ரரிகளுக்குத் தக்க கழிவு உண்டு.



விவரங்களுக்கு :

**வானதி பதிப்பகம்**

13. தீனதயாளு தெரு, தி. நகர்,
சென்னை-17. PIN : 600 017
Phone : 442810

கொண்டு ராஜாவைப் பார்க்கப் புறப்பட்டு வந்தார். ராஜா ஏதாவது தர்மம் செய்ய மாட்டாரா என்ற நப்பாசை அவருக்கு.

அவரையும் அந்தப் பெண்ணையும் கண்ட உள்ளூர்வாசி ஒருவர் விசாரிக்கப் போக, தாம் வந்த காரணத்தைச் சொன்னார் பெரியவர். "இத்தனை அழகான பெண்ணோடு நீங்கள் ராஜாவைப் பார்க்கப் போவது நல்லதல்ல; உங்களுக்குப் பொருள் தானே வேண்டும். இதோ நான் தருகிறேன், வாங்கிச் செல்லுங்கள்...!" என்று அந்த உள்ளூர்வாசியே பொருள் கொடுத்து அவர்களை அனுப்பி வைத்து விட்டார்.

ஒற்றர்கள் மூலம் இந்தச் செய்தியைக் கேட்ட ராஜாவுக்கு ஏகக் கோபம். தமது அந்தப்புரத்திற்கு வரவிருந்த ஓர் அழகான பெண்ணை, இப்படி அநியாயமாக ஒருத்தன் கெடுத்து விட்டானே என்று கொதித்துப் போனார்.

விளைவு? அந்த உள்ளூர்வாசிக்கு ராஜ சித்திரவதை. அந்தச் சித்திரவதையிலேயே அவர் செத்துப் போய் விட்டார். அந்த அநியாயச் சாவு ராஜாவால் ஏற்பட்டதால், ராஜாவுக்கு தோஷம் என்று குருமார்கள் சொல்ல, அதன் விளைவாகக் கட்டப்பட்டதுதான் இந்தக் கோயில்.

லிங்க வடிவில் ஈஸ்வரன். கணபதி, சுப்ரமண்யர் சந்நிதிகளும் இருக்கின்றன. அமைதியைத் தரும் கோயில்.

**உ**ள்ளூர் ஜனங்கள் எப்படி? அவர்கள் கலாசாரம் எப்படி? மலையின் மேல் வசிப்பவர்கள் என்பதால், அவர்கள் வெளியுலகத்தோடு சம்பந்தமில்லாமல் பின்தங்கியிருக்கிறார்களா?

மெர்க்காராவில் மட்டுமல்ல; குடகு மாவட்டம் முழுவதிலுமே மெஜாரிடி வசிப்பவர்கள் குடவர்கள்தாம். நிலமில்லாத குடவர்களே கிடையாது என்றாலும் ராணுவத்தில் பணியாற்றுவதைத்தான் இவர்களில் பலரும் விரும்புகிறார்கள். முன்பு ராணுவ ஜெனரலாக இருந்த கரியப்பா இவர்களில் ஒருவர்தான்!

"காரணம், எங்கள் குடவர்களுக்கே உரிய வீரம்தான்!" என்கிறார், குட்டண்ட கோபி அப்பையா. "இன்றைக்கும் கூட எங்கள் குடவர் கிராமங்களில் ஆண் குழந்தை பிறக்கும்போது, அது தாயின் வயிற்றிலிருந்து வெளியே வரும் அந்தக் கணத்தில், வீட்டின் வெளியில் துப்பாக்கியால் சுடுவோம். காரணம், அந்தத் துப்பாக்கி சப்தம் அதற்குப் பழகிப்போக வேண்டும். அதுபோன்ற சப்தங்களைக் கேட்டு பயந்துபோய் விடக் கூடாது என்பதற்காகத்தான்!" என்கிறார் அவர்.

ஆனால், பெண் குழந்தைகள் பிறக்கும்போது, இப்படி யாரும் செய்வதில்லை. இதற்கு வழிவழியாக நமது இந்திய சமூகங்களில் கடைப்பிடிக்கப்பட்டு வரும் ஆணாதிக்கம் காரணமா?

"அப்படி யாரும் ஒரேயடியாக முடிவு கட்டிவிட முடியாது!" என்கிறார் கே.ஏ. சோமண்ணா. "எங்கள் சமூகத்தில்தான் பெண்கள் சுதந்திரமாக இருக்கிறார்கள். பிற ஆண்களுடன் சகஜமாகப் பழகுவதை எங்கள் சமூகம் தவறான கண்ணோட்டத்தோடு பார்ப்பதில்லை. திருமணத்தின் போது ஒரு நயாபைசா கூட வரதட்சணை கேட்பதில்லை. இளம் விதவைகள் யாரும் எங்கள் சமூகத்தில் கிடையவே கிடையாது. காரணம், ஆண்களின் மறுமணம் மாதிரி, எங்கள் சமூகத்தில் பெண்களின் மறுமணமும் சகஜமாக ஏற்றுக் கொள்ளப்பட்டிருப்பதுதான்!" என்கிறார் சோமண்ணா.

"மாப்பிள்ளை வீட்டார் வரதட்சிணை கேட்பதில்லை என்பதற்காக, எங்கள் பெண்களை நாங்கள் ஒன்றும் கட்டிய புடைவையோடு அனுப்பி வைத்துவிடுவதில்லை. ஒரு சாதாரணக் குடும்பஸ்தன் கூட தனது பெண்ணுக்குக் குறைந்த பட்சம் ஐம்பதாயிரம் ரூபாய் அளவுக்குச் சேலைகளும், முப்பது நாற்பது சவரன் நகைகளும் வாங்கிக் கொடுத்துத்தான் புருஷன் வீட்டுக்கு அனுப்பி வைக்கிறான். சொந்தப் பெண்ணுக்குக் கொடுப்பதில் கணக்கென்ன வேண்டியிருக்கிறது?" என்கிறார் அப்பையா.

**இ**ன்றைக்கு எத்தனைதான் நாகரிகம் ஏற்பட்டிருந்தாலும், மாருதிகளில் வலம் வந்தாலும் திருமணம் போன்ற விசேஷ தினங்களில் இன்னமும் 'குப்பியா' என்று சொல்லப்படும் இவர்களின் பாரம்பரிய ஆடைகளைத்தான் அணிந்து கொள்ள வேண்டும் என்பது ஓர் எழுதப்படாத சட்டமாகவே இருக்கிறது.

'குப்பியா' என்பது பாதிரியார்கள் போடுகிற கவுன் மாதிரி கறுப்புத் துணியால் ஆன ஆடை. இடையில் துண்டு மாதிரி ஒரு துணியைக் கட்டி, அதில் அன்றைய போர் வீரர்கள் மாதிரி ஒரு குறுவாளையும் செருகிக் கொள்கிறார்கள். அதற்கு பீச்சக்கத்தி என்று பெயர். பின்புறம் நடுத்தரமான பட்டாக் கத்தி மாதிரி ஒரு வாள். அதற்கு ஒடிக்கத்தி என்று பெயர்.

அந்தக் காலத்தில்- இவர்கள் முழுக்க முழுக்க மலைப் பகுதிகளிலேயே வசித்ததால் - தற்காப்புக்காகவும் வேட்டையாடுவதற்காகவும் இதுபோன்ற ஆயுதங்கள் தேவைப்பட்டதில் ஆச்சரியம் ஒன்றுமில்லை. ஆனால், இன்றைக்கும் இதுபோன்ற ஆயுதங்களை வைத்துக் கொள்ளத்தான் வேண்டுமா?

"அவற்றை வெறும் ஆயுதங்களாக நாங்கள் பார்க்கவில்லை. அவை எங்கள் முன்னோர்கள் எங்களுக்கு வழிவழியாகக்








கொடுத்து வரும் வீரத்தின் அடையாளங்களாகத்தான் பார்க்கிறோம். அதனால்தான் எத்தனையோ நவீன ரகத் துப்பாக்கிகள் (குடவர்கள் சாதாரணத் துப்பாக்கிகள் வைத்துக் கொள்ள லைசென்ஸ் வாங்கத் தேவையில்லை) வந்து விட்ட இந்தக் காலத்திலும் அவற்றை நாங்கள் விடாப்பிடியாக வைத்துக் கொண்டிருக்கிறோம்! அப்படிப்பட்டதோர் பாரம்பரியத்தில் வந்ததற்காக நாங்கள் பெருமைப்படுகிறோம்!'' என்கிறார் சோமண்ணா.

குடவர்களின் பாரம்பரியக் கலாசாரத்தின் இன்னொரு முக்கியமான அம்சம் பன்றி மாமிசமும் மதுவும். இவற்றை விருந்து உபசரிப்பின் முக்கிய அடையாளமாகக் கருதுகிறார்கள் என்பதால், திருமணம், பண்டிகை போன்ற விசேஷ தினங்களில் கேட்கவே வேண்டாம்.

''எங்கள் சமூகத்தில் இவை இரண்டும் பரிமாறப்படாவிட்டால், வந்த விருந்தாளிகள் தங்களை அவமானப்படுத்திவிட்டதாக நினைத்துக் கொள்வார்கள்!'' என்கிறார் அப்பச்சு.

அப்படியானால் பெண்கள்?

''அவர்கள் அதிக போதை தரும் மது வகைகளைக் குடிப்பதில்லை. என்றாலும் ஆண்களோடு சகஜமாக உட்கார்ந்து ஒயின் சாப்பிடுவார்கள்!'' என்கிறார், அப்பச்சு.

உண்மைதான். அங்கு 'பார்' இல்லாத ஹோட்டல்களே இல்லை. ஆயினும் நம்ம ஊர் மாதிரி, அங்கே குடும்பப் பெண்கள் புக முடியாத அளவுக்கு 'பார்'கள் அருவருப்பாகவோ, ஆபாசமொழிகளின் பிறப்பிடமாகவோ இல்லை. நாமெல்லாம் குடும்பத்தோடு ஹோட்டலுக்குப் போய் டிபன் சாப்பிடுகிற மாதிரி, அவர்களும் குடும்பத்தோடு 'பார்'களுக்குப் போய் வருகிறார்கள்.

இந்த விஷயத்தை ஒரு தகவலாக மட்டும் படித்துவிட்டு, ஒரேயொரு விஷயத்தை மட்டும் நீங்களும் வீட்டில் முயற்சி செய்து பாருங்கள். அதுதான் குடவர்கள் விரும்பிச் சாப்பிடும் அக்கி ரொட்டி. செய்முறை ரொம்பச் சுலபம். எல்லாம் சப்பாத்தி மாதிரிதான். கோதுமை மாவுக்குப் பதில் அரிசி மாவைப் பயன்படுத்துங்கள். சப்பாத்தி போல் மெலிசாக இல்லாமல், கொஞ்சம் தடிமனாக உருட்டி எண்ணெயில்லாமல் தோசைக் கல்லில் போட்டு எடுங்கள்; அவ்வளவுதான், அக்கி (அரிசி) ரொட்டி தயார்!

– இளங்கோவன்

அட்டையில் (தங்கள் பாரம்பரிய உடையுடன்): அப்பச்சு தம்பதி

அட்டை மற்றும் வண்ணப்படங்கள்: கோபிநாத்



* ...அடக்குமுறை கண்ட சதுக்கம்...

# விடுமுறையில் வித்தியாசம்

**வாசகர்கள் விடுமுறையின்போது பெற்ற வித்தியாசமான அனுபவங்களை இங்கு பகிர்ந்து கொள்கிறார்கள். அபூர்வமான சில புகைப் படங்களையும் அனுப்பியிருக்கிறார்கள்.**

## அடக்குமுறை கண்ட சதுக்கம்

சீனத் தலைநகர் பீஜிங்கின் மறக்க முடியாத டினாமன் சதுக்கம் இது. (படம்) மாணவர் எழுச்சி, அதையொட்டி நடந்த அடக்குமுறையால் சரித்திரப் பிரசித்தி பெற்றது. இங்கே செல்ல இன்றைக்கும் உள்ளூர்வாசிகளுக்குக் கட்டுப்பாடு உண்டு. ஆனால் வெளிநாட்டுச் சுற்றுலாப் பயணிகள் தாராளமாகச் சென்று வரலாம். எங்களை அழைத்துப் போன சைக்கிள் ரிக்ஷாக்காரர், உணர்ச்சிவசப்பட்டு இப்படிச் சொன்னார்: ''உங்கள் தயவினால் எனக்கும் இந்த இடத்தைப் பார்க்கக் கொடுத்து வைத்திருக்கிறது!'' பாவம், சோக நினைவுகள் அவர் குரலைக் கரகரக்கச் செய்து விட்டன.

– சிம்ப்ரூக் சின்னது, சென்னை.

## நேரம் பொன்னானது!

திருச்சியிலிருந்து ஈரோடு செல்லும் ரயிலில் பயணம் செய்து கொண்டிருந்தேன். கூடரில் ஏறிய ஓர் இளைஞர் பை நிறைய புத்தகங்கள் கொண்டு வந்திருந்தார். ஆளுக்கு ஒன்று விநியோகித்து விட்டுத் தாமும் ஒன்றைப் படிக்க ஆரம்பித்தார். எல்லாம் உபயோகமான நூல்கள். தூங்கி வழியாமல், அரட்டை அடிக்காமல், பயனுள்ள பொழுதாகப் போயிற்று. ஈரோடு நெருங்குகையில் புத்தகங்களைத் திரும்பப் பெற்றார். 'காசு கேட்பாரோ?' என்று எண்ணினேன். பேசாமல் இறங்கிப் போய் விட்டார்!

– வெ. முருகானந்தம், தஞ்சை.

## இல்லைப் பாட்டு அங்கும் உண்டு!

இல்லைப் பாட்டு இங்கே மட்டும் தானா? மஸ்கட் சென்றிருந்தோம். அங்கேயும் உண்டு!

பவர்கட் இல்லை! போஸ்டர் கட்-அவுட் கலாசாரம் இல்லை! கட்சிக் கொடி - மைக் அலறல் இல்லை! வழிப்பறி - செயின் அறுப்பு இல்லை! ஆடு, மாடு, கோழி, பன்றி எதுவுமே சாலையில் நடமாடவில்லை! வரி இல்லை! வேலை நிறுத்தம் இல்லை! இன்னும் அடுக்கிக் கொண்டே போகலாம்!

– எம். பி. துரைசுவாமி, மதுரை.



* ஸ்ரீதேவிக்குக் கற்றுக் கொடுத்தது....

### பதற்றத்தில் பறிகொடுத்த பணம்

இரண்டு ஆண்டுகளுக்கு முன் கொடைக்கானல் போயிருந்தேன். ஒரு கடையில் இருபது ரூபாய்க்கு இரண்டு நீலகிரி தைலம் பாட்டில் வாங்கி, நூறு ரூபாய் நோட்டு தந்தேன். இதற்குள் சுற்றுலா வேன் ஹாரன் ஒலிக்க, கிளம்பிவிடப் போகிறதே என்ற பதற்றத்தில் பாக்கி பணம் வாங்க மறந்து ஓடினேன். அரைமணி சென்ற பிறகு தான் நினைவு வந்தது. நல்லவேளை, கடை பெயர் ஞாபகம் இருந்தது. குறித்துக் கொண்டேன். வீடு திரும்பிய பிறகு விவரமாகக் கடிதம் எழுதினேன் - நம்பிக்கையே இல்லாமல்தான். ஆனால், ஆச்சரியம், பத்து நாட்களில் பணம் வந்துவிட்டது! 'இந்தக் காலத்திலும் இப்படிச் சில நல்லிதயங்களா?' என்று கண்களில் நீர் தளும்பி விட்டது!

– வி. எல். வெங்கடேசுவரன், வாளாடி.

* ''ஜெய் கிசான்!''



### நரகாசுரனுக்குக் கட்-அவுட்!

தீபாவளி சமயத்தில் கோவா சென்றிருந்தேன். திரும்பிய பக்கமெல்லாம் கட்-அவுட்டுகள்! அரசியல்வாதிகளுக்கு அல்ல! நரகாசுரனுக்கு! தேர்வுக் குழு தீபாவளிக்கு முதல் நாள் மாலை ஒரு சுற்றுச் சுற்றி வந்து, சிறந்த கட்-அவுட்டைத் தேர்ந்தெடுத்துப் பரிசு அளிக்கிறது. தீபாவளியன்று காலை எல்லா நரகாசுரன்களும் தீக்கிரை! பின்னர் தான் கங்கா ஸ்நானம்!

– ஆர். கோபாலன், ஸ்ரீரங்கம்.

### ஸ்ரீதேவிக்குக் கற்றுக் கொடுத்தது!

படத்தில் என்னுடன் சிரித்துப் பேசிக் கொண்டிருப்பது யார்? தெரிந்திருக்குமே! கரெக்ட், ஸ்ரீதேவியேதான்! விடுமுறைக்குச் சென்னை செல்லத் தீர்மானித்த போது, இப்படி ஓர் அதிர்ஷ்டம் அடிக்கும் என்று நான் எதிர்பார்க்கவே இல்லை! அது 1977 ஆம் ஆண்டு. சென்னையில் என் மச்சினர் ''சினி மினி கிளப்'' நடத்தி வந்தார். மாதம் ஒரு சினிமா ஸ்டாருடன் கலந்துரையாட அந்த கிளப் அங்கத்தினர்களுக்கு வாய்ப்புக் கிட்டும். அச்சமயம் பாலசந்தரின் மூன்று முடிச்சு ரிலீஸாகியிருந்தது. ஸ்ரீதேவியுடன் கிளப் அங்கத்தினர்கள் பேச ஏற்பாடாகியிருந்தது. என் மச்சினர் விருந்தினராக வந்திருந்த எங்களையும் அழைத்துப் போனார். நாங்கள் கேட்ட கேள்விகளுக்கு ஸ்ரீதேவி தன் தகப்பனாரிடம் கலந்து ஆலோசித்த பிறகே பதில்கள் அளித்துக் கொண்டிருந்தார்! நேருக்கு நேர் நிகழ்ச்சி முடிந்த பிறகு, எனக்கு ஸ்ரீதேவியுடன் தனியாகப் பேச சந்தர்ப்பம் கிடைத்தது. அப்போது எடுக்கப்பட்ட இந்தப் படத்தை இன்னும் ஆல்பத்தில் பார்க்கும்போதெல்லாம் என் மகள் பாக்யஸ்ரீ என்னைக் கேட்கும் கேள்வி : ''ஏம்மா! ஸ்ரீதேவியிடம் என்ன பேசறே? அப்பம் தட்டுவது எப்படின்னு சொல்லிக் கொடுக்கிறியா?''

– மீனா கிருஷ்ணமூர்த்தி,
சத்தியமங்கலம்.

### 'ஜெய் கிசான்!

இரண்டு ஆண்டுகளுக்கு ஒரு முறை புனேயில் விவசாயிகள் 'மேளா' நடக்கிறது. சென்ற ஆண்டு போயிருந்தேன். நவீன விவசாய உபகரணங்கள். ரசாயன உரங்கள், பூச்சிக் கொல்லி மருந்துகள் என்று இரு நூறுக்கும் மேற்பட்ட அரங்குகள். எல்லாவற்றையும் விடக் கண்ணையும் கருத்தையும் கவர்ந்தது வண்ண வண்ண மலர்ச் செண்டுகள். (படம்) இவற்றை ஏற்றுமதி செய்து இன்று நிறைய சம்பாதிக்கலாம். வெளிநாட்டுக்காரர்களிடம் இதன் நுணுக்கங்களைப் பலரும் தெரிந்து கொண்டனர். விவசாயத் துறையில் எவ்வளவு முன்னேற்றம் என்று நெஞ்சு நிமிர வெளியே வந்தால் ஒவ்வொரு ஸ்டாலிலும் சேகரித்த பிரசுரங்களை மொத்தமாக அவரவரும் எடைக்குப் போட்டுக் கொண்டிருந்தார்கள். அதில் கிடைத்த பணத்தைக் கொண்டு பீடா கடையில் பங்கு உருண்டை வாங்கி வாயில் அடக்கிக் கொண்டு பீடி புகைத்தபடி வழிநடந்தார்கள். இப்படி வந்தவர்கள் பலரும் கூலிப் பட்டாளங்கள் என்று பின்னால் தெரிய வந்தது. மேளாவினால் பயனடைபவர்கள் விவசாயிகளைவிட அதிகமாக இடைத்தரகர்களே என்பதும் புரிந்தது. அரசின் சலுகைகளையெல்லாம் ஏப்பம் விடுகிறவர்கள் இவர்களே! ஜெய் கிசான் என்று உள்ளம் சோகத்துடன் வாழ்த்தியது.

– வி. எஸ். கண்ணன், கோவை.

● உதகை வந்த சீமான்களே, உதார குணம் இல்லையே!

- செல்வன், நெய்வேலி.

● பாரம் சுமப்பது பழகிவிட்டது இவருக்கு! இப்படித்தான் ஒவ்வோர் இந்தியனும் அரசின் கடன் சுமையைத் தாங்கிக் கொண்டிருக்கிறான்!

- மீரா, பெங்களூர்.

# வித்தியாசமான 'க்ளிக்'குகள்!





● டில்லியில் ஹாஸ்டலில் தங்கிப் படித்துக் கொண்டிருந்த போது, ஒரு வார விடுமுறையில் நாங்கள் - ஐந்து தோழிகள் - சுற்றுலா சென்ற சமயம் ஜெய்சால்மர் பாலைவனத்தில் எடுத்த படம்.

- அகிலா, சென்னை - 26.

பரதன் அச்சகத்தில் அச்சிடுபவர்: வி. முரளி. பரதன் பப்ளிகேஷன்ஸ் பிரைவேட் லிமிடெட் சார்பாக வெளியிடுபவர்:
வி. வைத்தியநாதன். ஆசிரியர்: சீதா ரவி. நிர்வாக ஆசிரியர்: கி. ராஜேந்திரன்.
முகவரி: 47, ஜவாஹர்லால் நேரு சாலை, ஈக்காட்டுதாங்கல், சென்னை - 600 097. தொலைபேசி - ஆசிரியர் குழு
: 2345624; சர்க்குலேஷன் மானேஜர்: 2345623; விளம்பரம் - சந்தா: 2345622; டைரக்டர்: 2345621.
அலுவலகம்: 2345624; சர்க்குலேஷன் மானேஜர்
ஆண்டுச் சந்தா - உள்நாடு: ரூ. 156/-; வெளிநாடு - கப்பல் தபால்: ரூ. 400/-; விமானத் தபால் ரூ. 1050/-.
ஆறு மாதச் சந்தா - உள்நாடு: ரூ. 78/-; வெளிநாடு - கப்பல் தபால்: ரூ. 200/-; விமானத் தபால் ரூ. 525/-.



## தமிழ்ப் புத்தாண்டில்...

சிறகடித்துப் பறக்கும்
சிங்காரக் கனவுகள்
நனவே ஆகட்டும்
நனவே ஆகட்டும்!

## வாழ்த்துக்கள்!



एअर-इंडिया
AIR-INDIA

HTA.7425.95

